|| ஓம் நம: சிவாய ||

# சுருதி ஸூக்தி மாலா

அல்லது

## சதுர் வேத தாத்பர்ய ஸங்க்ரஹம்



## இரண்டாம் பாகம்

சிவலிங்க பூபதியின்
ஸம்ஸ்க்ருத வ்யாக்யானத்தைத் தழுவி
தமிழில் பதவுரையும் தாத்பர்யங்களும்

எழுதியவர்:
பண்டிதராஜ - ஸாம்ப ஸ்ரீ
கை. பாலஸுப்ரமண்ய சாஸ்திரிகள்
தலைமை உபாத்தியாயர், ஸம்ஸ்க்ருத கல்லூரி
மயிலாப்பூர், சென்னை 4

உ

|| ஓம் நம: சிவாய ||

|| ஓம் நமோ தக்ஷிணாமூர்த்தயே ||

|| ஓம் நமோ பகவதே ஹரதத்தாய ||



# ஸ்ரீ ஹரதத்தர் சிவலிங்க பூஜை

# சுருதி ஸூக்தி மாலை

(வ்யாக்யானம்—தத்துவப் பிரகாசிகை)

## மங்கள ச்லோகம்

கல்ப்பாந்தே சமித த்ரிவிக்ரம
மகா கங்காள பத்த ஸ்புரத்
சேஷஸ்யூத ந்ருஸிம்ஹ பாணி
நகரப் ப்ரோதாதி கோலாமிஷ: |
விச்வைகார்ணவ ஸம்விஹார முதிதென
யோ மத்ஸ்ய கூர்மா வுபௌ
கர்ஷந் தீவரதாம் கதோஅஸ்யது
ஸதாம் மோஹம் மஹாபைரவ: ||

இந்த ச்லோகம் ஆதித்ய புராணத்தில் இருக்கிறது. சிவ லிங்க பூபதியவர்கள் 'தத்துவ ப்ரகாசிகை' என்ற தமது வ்யாக்யானத்திற்கு இதை மங்கள ச்லோகமாகக் அமைத்துக்கொண்டார் போலும். அவர் வ்யாக்யானத்தைத் தழுவிய இந்தத் தமிழ் வ்யாக்யானத்திற்கும், இதையே மங்கள சுலோகமாகக் கொள்வோம்.

தி. வி. அ. சிரௌதி
(பதிப்பாசிரியர்)

## குறிப்பு

வ்யாக்யானத்தில் வரும் அனேக ஸம்ஸ்க்ருத பதங்களுக்கு விளக்கமாகத் தமிழில் அரும்பதவுரை அனுபந்தமாகச் சேர்க்கப் பட்டிருக்கிறது.

உ

|| ஓம் நமோ தக்ஷிணாமூர்த்தயே ||

# சுருதி ஸூக்தி மாலா

## அல்லது

## சதுர் வேத தாத்பர்ய ஸங்க்ரஹம்

### பெயர் விளக்கம்

சுருதி—வேதங்களின், ஸூக்தி—நல்ல அழகிய, அதாவது உண்மைப் பொருளை விளக்கும் வாக்கியங்களாகிய மலர்களின், மாலா—மாலை. இஃது பரமேச்வரனுக்கு ஸ்துதி ரூபமாய் ஸமர்ப்பிக்கப்படும் வாடாமலர் மாலை. ஸாதாரண மலர்களின் மாலை கொஞ்சம் நேரம் அல்லது ஒரு நாளானபின் வாடிவிடும். இந்த ஸ்துதி மாலையின் மலர்கள் ஒரு நாளும் வாடா.

ஸ்ரீ ஹரதத்தாசார்யார் தமது க்ரந்தத்திற்குக் கொடுத்த சிறப்புப் பெயர் சுருதி ஸூக்தி மாலை, (ச்லோகம் 151.) ஆயினும் 2-வது ச்லோகத்தில்

தாத்பர்ய ஸங்கரஹ மஹம் விததே மஹேச!

என்று சொல்வதால், "தாத்பர்ய ஸங்க்ரஹம்" என்ற மற்றும் ஒரு பெயரும் நிலவி வருகிறது. சுருதி என்ற பதம் பொதுவாக நான்கு வேதங்களையும் குறிக்குமாதலால், இந்த க்ரந்தம் மேலும் சற்று விளக்கமாக, "சதுர்வேத" தாத்பர்ய ஸங்க்ரஹம் என்றும் பெரியோர்களால் போற்றப்பட்டு வருகிறது.

வேதங்களின் உண்மைப் பொருளை அறியாதவர்களுக்கும் தங்கள் தங்கள் மதம், கொள்கை, அபிமானங்களுக்கேற்ப, வேறு வேறு கருத்துகளை சொல்பவர்களுக்கும், ப்ரபல சுருதி ப்ரமாணங்களாலும், மீமாம்ஸா ந்யாயங்களாலும் முழுமுதற் கடவுள் பரமேச்வரனே என்ற உண்மை தத்துவத்தை ஸ்தாபிக்கும் சிவ பரத்வ, சைவ ஸ்தாபக க்ரந்தம்.

தி. வி. அ. சிரௌதி

# சுருதி ஸூக்தி மாலை

## சுலோகம் 1

யஸ்மை நமோ பவதி யஸ்ய குணா: ஸமக்ரா :
நாராயணோபநிஷதா யதுபாஸநோக்தா |
யோ ந: ப்ரசோதயதி புத்தி மதிக்ரதெள ய:
தம் த்வாமனன்யகதிரீச்வர ! ஸம்ச்ரயாமி ||

6A-11

### பதவுரை

யஸ்மை - எவருக்கு, நம: - நமஸ்காரங்கள், பவதி - செல்கின்றனவோ; யஸ்ய - எவருக்கு, ஸமக்ரா :- பரிபூர்ணமான, குணா : (ஆறு) குணங்கள் பவந்தி - இருக்கின்றனவோ, நாராயணோபநிஷதா - தைத்ரீயா ரண்யகம் பத்தாவது நாராயணோபநிஷத்தால், யதுபாஸநா - எவருடைய உபாஸனை, உக்தா- சொல்லப்பட்டதாக, பவதி - இருக்கிறதோ, ய :- எவர், ந: - நம்முடைய, புத்திம் - அந்தக் கரணத்தை, ப்ரசோதயதி - (அந்தர்யாமியாகவிருந்து) தூண்டிவிடுகிறாரோ, ய: - எவர், க்ரதென - யாகங்களுக்கு, அதி - தலைவரோ, (பல ப்ரதாவோ), தம் - அப்பேர்ப்பட்ட, த்வாம் - உம்மை, ஈச்வர - ஹே பரமேச்வரனே ! அனன்யகதி : - வேறு கதியில்லாத நான், (மற்ற தேவதைகளை ஆச்ரயிக்காமல்) ஸம்ச்ரயாமி - நன்கு சரணமடைகிறேன். பிரபத்தி ரூபமாகச் சரணமடைகிறேன்.

### கருத்துரை

நமஸ்காரங்கள் எவரை அடைகின்றனவோ, எவர் நமச்சேஷியோ, எவர் பகவத் பத வாச்யரோ, பூர்ணமான ஆறு குணங்களும் நிரம்பப் பெற்றவரோ, (32 உபாஸனைகளுக்குள் சிறந்ததான) எவருடைய உபாஸனை நாராயணோபநிஷத் கூறு

கிறதோ, எவர் காயத்ரீ மந்த்ர ப்ரதி பாத்யராக, எல்லார் ஹ்ருதயத்திலும் அந்தர்யாமியாக இருந்து, புத்தியைச் செலுத்திச் செயல்களில் ஈடுபடுத்துகிருரோ, எவர் ஸர்வ யாகங் களுக்கும், சேஷியாகக் கர்மடர்களால் அவலம்பிக்கப் படுகிருரோ, இவ்விதம் விசேஷமான ஐந்து சிறப்பு லக்ஷணங்கள் பொருந் திய, கடவுளாகிய உம்மை ஹே, பரமேச்வரா! வேறு கதியில் லாத நான், மற்ற தெய்வங்களை உபாசிக்காமல் உம்மையே முழுமுதற் கடவுளாகவும், பரமென்றும், ஏகாந்தமாக உபாஸிக் கிறேன்.

என்று இத்த க்ரந்தத்தின் விஷயத்தைச் சொல்வது மூலம் ஸ்ரீ ஹரதத்தாசார்யவர்யர் முதல் சுலோகத்தில் மங்களத்தை யும் ஈச்வர வணக்கத்தையும் சொல்லுகிருர்.

## விசேஷவுரை

இந்த முதல் ச்லோகத்தால் பரமேச்வரனுக்கு சொல்லப் பட்ட சிறப்பு லக்ஷணங்கள் ஐந்து. (1) நமச்சேஷித்வம்; (2) நிரதிசய ஐச்வர்யாதி மத்வம்; (3) நாராயணோபநிஷத் உதீரிதோபாஸ்யத்வம்; (4) காயத்ரீ மந்த்ர ப்ரதி பாத்யத்வம்; (5) க்ரது சேஷித்வம் என்பன. இவ்வைந்தும் அதிவ்யாப்தி, அவ்யாப்தி, அஸம்பவம் என்ற முப்பிழையின்மையால், பரமேச் வரன் லக்ஷணங்களாகக் கருதப்படுகின்றன. இவ்வைந்தும் வேத வாக்கியங்களைக் கொண்டு நிலைநாட்டப் படுவதால், பிர மாணமும் விளக்கப்பட்டதாகும்.

## லக்ஷண ப்ரமாணாப்யாம் வஸ்து ஸித்தி:

என்ற நியாயப்படி க்ரந்த ஆரம்பத்தில் வஸ்து நிர்தேசம் குறிக்கப்பட்டது. பரமேச்வரன் தான் வஸ்து; பர தெய்வம் பரமார்த்த தத்வம். சதுர்வேத தாத்பர்ய விஷயீ பூதப்பொருள் பரமேச்வரன் தான் என்பது குறிப்பிடப்பட்டது.

முழு முதற் கடவுளை வணங்குவதாகிய முதல் ச்லோகத்தால் க்ரந்தம் நிர்விக்னமாக முடிவடையும் பொருட்டு, க்ரந்த ஆரம் பத்தில் மங்களம் செய்யப்படவேண்டும் என்ற ஸம்ப்ரதாயத்தை சிஷ்யர்களுக்கு அறிவித்துவிட்டு, இரண்டாவது ச்லோகத்தால், ''பிரதிக்ஞை'' என்ற பாகத்தைச் செய்ய ஆரம்பிக்கிருர், செய்யப்போகும் கார்யத்தை, சொல்லப் போகும் விஷயத்தைக் குறித்தால்தான், ஜிஞ்ஞாஸுக்களான ச்ரோதாக்கள், வாசகர் கள், கவனமாகக் கேட்க முன் வருவார்கள்.

## சுலோகம் 2.

வேதேஷு வா ததனுயாயிஷு வா விசார்ய
தந்த்ரேஷு வாக்யமகிலம் ப்ரதிபாதகம் தே |
தாத்பர்ய ஸங்க்ரஹ மஹம் விததே மஹேச !
மஹ்யம் ப்ரஸீத நய மாம் ருஜுனா பதா த்வம் ||

### பதவுரை

வேதேஷு வா---வேதங்களிலும், ததனுயாயிஷு வா தந்த்ரேஷு--வேதங்களைப் பின் பற்றி வந்திருக்கும் புராண, சிவதர்ம, முதலிய ஆகம ஸித்தாந்தங்களிலும், தே--நமச் சேஷித்வம் முதலிய ஐந்து லக்ஷணங்களால் குறிப்பிடப்பட்ட, உங்களுடைய, ப்ரதிபாதகம் — உபக்ரமம், உபஸம்ஹாரம் முதலிய ஆறுவித தாத்பர்ய லிங்கங்களைக் கொண்டு ஒரே நோக்கமாகத் தெரிவிக்கிற, அகிலம் வாக்யம்—எல்லா வாக்ய ப்ரமாணங்களையும், விசார்ய—நன்கு விசாரித்து, (விசிந்த்ய—நன்கு யோஜித்து), அஹம்--நான், தாத்பர்ய ஸங்க்ரஹம்--வேதபுராண வாக்ய தாத்பர்ய சுருக்கமாகிய இந்த க்ரந்தத்தை, (சுருதி ஸூக்தி மாலையை), விததே—செய்கிறேன். மஹேச-பரமேச்வரனே! மஹ்யம்—என் விஷயத்தில், ப்ரஸீத-(பிரஸன்னமாகி) அருள்புரிய வேண்டும். த்வம்—நீர், மாம்—என்னை, ருஜுனா—கோணல் இல்லாத, - நேர்மையான, பதா - மார்க்கத்தினால், நய—போகும்படி செய்யவேண்டும்.

அந்தர்யாமியாக இருந்து, அனைத்தையும் தூண்டுகிற தாங்கள், நல்ல வேதவாக்கியங்கள், உண்மையான தாத்பர்யங்களை விளக்கும், நேர்மையான வழியில் என்னைப் போகும்படி தூண்டவேண்டும். வாயு ஸம்ஹிதையிலும், ச்வேதாச்வதர உபநிஷத்திலும், பரமேச்வரனே புத்தி ப்ரேரகன் என்ற விஷயம் விளக்கப்பட்டிருக்கிறது.

### விரிவுரை.

முழுமுதற் கடவுளால் இயற்றப்பட்டதால் வேதங்கள் ப்ரமாணங்களாகும் என்பதும். காளிதாஸன் க்ரந்தம் போல வேதமும் ஒரு மகாபுருஷன் செய்தது தான் என்பது அனுமானத்தால் சித்திக்கும் என்பதும். தார்க்கிகர்கள் கொள்கை.

புருஷஸூக்த மந்த்ரமும் (யக்ஞேச்வரனை)—பரமேச்வரனிடமிருந்து மூன்று வேதங்களும் உண்டானதாகக் கூறுகிறது.

ஜைமினி மகரிஷியும், அவரைப் பின் பற்றும் மீமாம்ஸகர்களும். வேதங்கள் அபௌருஷேயமானதால், புருஷ தோஷம் கொஞ்சமும் சங்கிக்க இடமற்றது ; ஆதலால் ப்ரமாணங்கள் என்கிறார்கள்.

மூச்சு விடுவதுபோல் சிரமமில்லாமல் (அனுயாஸமாகக்) கடவுளிடமிருந்து வேதங்கள் வெளிவந்தன. ஆதலால் ஈச்வரன் என்ற புருஷஸம்பந்தம் இருந்தாலும். மற்ற கிரந்தங்களைப்போல், மானிட, க்ருதி யில்லாததால் தோஷமற்றவை, ப்ரமாணங்களாகும் என்பது வ்யாஸர், அவரைப் பின்பற்றியவர்களுடைய கொள்கையாகும்,

க்ரந்தகாரர் ஸ்ரீ ஹரதத்தாசார்யார் இந்த மூன்று கொள்கைகளையும் அங்கீகரித்து விளக்கம் செய்திருக்கிறார்.

வேத : ஸ்வயம் பவது வா தவ வா ப்ரணீதி :

(சு – 108)

ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களால் அறியப்படாத தர்மத்தையும் பிரம்மத்தையும் தெரிவிப்பதால், வேதம் என்ற பெயர் அந்வர்த்தமாகிறது. (காரணப் பெயராகத் பொருந்தியிருக்கிறது.) புராணம், ஆகமம் முதலியவை வேதார்த்தத்தை விளக்க வந்தமையால், அவைகளில் சொல்லப்பட்ட ஸித்தாந்தங்களும் ஏற்கத்தக்கவை என்பது ஜைமினி முனிவரால் ஸ்ம்ருத்யாதிகரணத்தில் விசாரித்து ஸ்தாபிக்கப்பட்டுள்ளது.

இங்கு 'வா' என்ற பதம் 'உம்' என்ற பொருளையும், 'தந்த்ரம்' என்ற பதம் 'ஸித்தாந்தம்' என்ற பொருளையும் தருவது குறிப்பிடத்தக்கது.

உபக்ரமோப ஸம்ஹாரௌ, அப்யாஸோ பூர்வதா பலம் |
அர்த்தவாதோப பத்தீ ச லிங்கம் தாத்பர்ய நிர்ணயே ||

என்ற ஆறு தாத்பர்ய க்ராஹக லிங்கங்களைக்கொண்டு நோக்கமறியவேண்டும். அம்முறை வ்யாஸமுனிவராலும், ஸத்வித்யா, பூம வித்யா ப்ரகரணங்களில், ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் அவர்களாலும் விளக்கப்பட்டிருக்கிறது.

## ச்லோகம் 3.

மந்த்ரார்த்தவாத விதிபிர் பஹுதா விபக்தோ
யச் சப்தராசிரனபேக்ஷதயா ப்ரமாணம் |
ஸோயம் விமத்ஸர விம்ருஷ்ட பதார்த்ததத்வோ
வேத: ப்ரகாசயதி கேவல மீச்வரம் த்வாம் ||

ஐந்து லக்ஷணங்களில் நமச்சேஷித்வம் என்ற முதல் லக்ஷணத்தை விவரிக்கவேண்டி, முதலில் "ஈச்வரன்" என்ற பதம் மஹாதேவன், (பரமேச்வரன்) ஒருவனைத்தான் குறிக்கும் என்பதை வேத ப்ரமாணங்களால் ஸ்தாபிக்க ஆரம்பிக்கிறார்.

### பதவுரை.

மந்த்ரார்த்தவாத விதிபி :— மந்திரங்கள், அர்த்த வாதங்கள், விதி வாக்யங்கள் என்று மூன்று விதமாகவும், பஹுதா— இன்னும் பலவிதமாகவும், விபக்த :— பிரிக்கப்பட்டிருப்பதும், அனபேக்ஷதயா— (சொன்னவரின் மகிமையை) வேறு ப்ரமாணத்தை அபேக்ஷிக்காமல், ஸ்வதந்தரமாகவே, ப்ரமாணம்— ப்ரமாணமானதுமான, ய :— யாதொரு, சப்த ராசி :— சப்தக் கூட்டமாகிய வேதம் இருக்கிறதோ, ஸ :— அப்பேர்ப்பட்ட அயம்—இந்த ப்ரத்யக்ஷமான, வேத :—வேதமானது, விமத்ஸர விம்ருஷ்ட பதார்த்த தத்வ :—அஸூயை, பொறாமை இல்லாதவர்களால் பதார்த்த உண்மை விசாரிக்கப்படுமாகில், த்வாம் கேவலம்—உம்மைமட்டும் தான், ஈச்வரம்—ஈச்வர பதத்திற்கு உண்மை அர்த்தமாக, ப்ரகாசயதி—வெளிப்படுத்தி, ப்ரகாசிக்கச் செய்கிறது.

### விரிவுரை.

வேதத்தில் மந்த்ரங்கள் ச்ரவணத்துக்கு உபயோகிக்கப் படுகின்றன. அர்த்தவாதங்கள் ஒரு விஷயத்தைப் புகழவோ, நிந்திக்கவோ உபயோகப்படுகின்றன. விதிகள் (நிஷேதங்கள்) உலகில் அறியப்படாத, செய்ய வேண்டிய தர்மங்களையும், விலக்கவேண்டிய அதர்மங்களையும் தெரிவிக்கின்றன என்பது மீமாம்ஸக ஸித்தாந்தம். ஸ்ம்ருதிகள் வேதார்த்தத்தை விளக்குவதால் பரதந்த்ர ப்ரமாணம், வேதமொன்றுதான் பிறரை மூலமாக அபேக்ஷிக்காமல் ஸ்வதந்த்ர ப்ரமாணம் என்பதும்

மீமாம்ஸகர் முடிவு செய்த ஸித்தாந்தம். ஒவ்வொரு பதத்தின் உண்மைப் பொருளை அஸூயை பக்ஷபாதமின்றி விசாரித்து நிர்ணயிக்கவேண்டும்.

ஈசானஸ் ஸர்வ வித்யாநாம், ஈச்வரஸ்ஸர்வ
பூதாநாம்—தமீச்வராணாம் பரமம் மகேச்வரம்

முதலியவை, ஈச்வர பத அர்த்தத்தை விளக்கும் மந்த்ரங்கள்.

யத ஈஷ்டே ஈச்வர : முதலியவைகள், தாது, ப்ரத்யயங்களைப் பிரித்துக் காட்டி, ஈச்வரபதத்தை விளக்கும் அர்த்தவாதங்கள்.

காரணம் து த்யேய : ; ஸர்வைச்வர்ய ஸம்பன்ன :

ஸர்வேச்வர : ச சம்பு :—முதலியவை, ஈச்வர பதார்த்தத்தை விளக்கி அவரை த்யானம் செய்யவேண்டும் என்று கட்டளையிடும் விதிகள் இம்மாதிரி பலவிடங்களில் மந்திரார்த்தவாத விதிகள். அதர்வசிரஸ், ச்வேதாச்வதரோப நிஷத், மாண்டுக்யம், முதலியவைகளில் பலவாறு சொல்லப்பட்டிருப்பவை இங்கு ப்ரமாணமாகும்.

## சுலோகம் 4

சப்தோய மீச்வர இதி ச்ருதிகோசரஸ்ஸந்
ஆநீலகண்ட மவதம்ஸித சந்த்ரலேகம் |
த்வாமேவ போதயதி நாத ! நிஜார்த்த
போஷாத்
அன்யம் புன : ப்ரகரணாதி நிபீடனேன ||

பதத்தின் உண்மையான அர்த்தத்தை யோக வ்யுத் பத்தியால் அறியவேண்டும். அவ்விதமே ரூடமான பதங்களுமுண்டு ஈச்வரன் என்ற பதம் யோகமுறையிலும் ரூடமுறையிலும் பரமேச்வரனைத்தான் குறிக்கிறதென்று 4-வது, 5-வது ச்லோகங்களால் விளக்கம் செய்கிறார்.

## பதவுரை

அயம் - இந்த, ஈச்வர : இதி - ஈச்வரனென்ற சப்த : - சப்தமானது, வார்த்தையானது, ச்ருதி கோசரஸ்ஸந் - காதால் கேட்கப்படும்போது. லக்ஷணா வ்ருத்தியைக் கைக்கொள்ளாமல், அபிதா என்ற சக்திமாத்ரந்தால் விஷயீகரிக்கப்படும்போது ஆநீலகண்டம்*— நஞ்சுண்ட பொழுது அடையாளமாகக் கொஞ்சம் தான் கருத்த கழுத்தை உடையவரும், அவதம்ஸித சந்த்ரலேகம் - ஆபரணமாகத் தலையி லணியப்பட்ட சந்திர கலையை உடையவருமான, நாத—தலைவரே ! த்வாமேவ—உம்மையே, நிஜார்த்தபோஷாத்—நிகரற்ற ஐச்வர்யம் என்ற தன் சொந்த அர்த்தம் நிரம்பியிருப்பதால, போதயதி—அறிவிக்கிறது. அன்யம் புன : மற்ற தேவதைகளையோ, ப்ரகரணாதிநிபீடனேன— ப்ரகரணம் ஔசித்யம், லிங்கம் முதலிய 14 ஸங்கோச ப்ரமாணங்கள், பதாந்தர ஸமபிவ்யா ஹாரம். "வா" பதச் சேர்க்கை முதலிய காரணங்களால் (முக்யார்த்தத்தை விடவேண்டிய வருவதால்) போதயதி—அறிவிக்கிறது.

## விசேஷ வுரை

வ்யாகரணத்தில் ஈச்வரசப்தம் ஸ்தேசபாஸபிஸகஸோவரச் என்ற ஸூத்ரத்தால் 'வரச்' ப்ரத்யயாத்தமாவும் 'வநிப்' ப்ரத்யயம் வைத்து "வனோரச" என்ற ஸூத்ரத்தால் 'ர' என்ற எழுத்து வருவதாலும் "அச்னோதேராசுகர்மணி வரட்ச" என்ற உணாதி ஸூத்ரத்தால் 'வரட்' ப்ரத்யயாந்தமுமாக. மூன்று விதமாக வ்யுத்பத்தி காண்பிக்கப் பட்டிருக்கிறது. "ஆசு கர்ம வரதாம்ஞாதி க்ரியா யஸ்ய சீக்ர தாதா ஆசுதோஷ : என்று விளக்கப் பட்டிருக்கிறது. "ஈச்வர : - க்ஷிப்தம் என்பது ப்ருஹாரண்யக சாங்கர பாஷ்யம். எல்லாரையும் விட ஐச்வர்யமுள்ள ஸ்வதந்த்ரன்தான், பிறர் அபேக்ஷையில்லாததால், சீக்ரத் கார்யங்களைச் செய்ய முடியும். துஷ்டநிக்ரஹமோ சிஷ்டபரிபாலனமோ அனுயாஸமாக சீக்கிரம் செய்பவர் ஈச்வர பதத்தின் யோகத்தால் அர்த்தம் கிடைக்கிறது. ஹாலாஹல விஷத்தை உடன் சாப்பிட்டுக் கஷ்டங்களை நீக்கியவரும், சந்திரனைத் தலை

---

* விஷம் உடல் முழுதும் பரவும் தன்மையுள்ளதாயினும் கடவுளை ஒன்றும் செய்ய முடியாது. ஈச்வரன் ஸ்வேச்சையால். விஷத்தைக் கழுத்தில் நிறுத்தி கழுத்தின் நிறத்தையும் சிறிது நீலமாக்கி காட்டுகிறார்; தான் செய்த பரமானுக்ரஹத்திற்கு ஓர் ப்ரத்யக்ஷ ப்ரமாணமாக அமைத்துக் கொள்கிறார், ஈச்வரனுக்கு நீலகண்டன் என்று காரணப் பெயரும் அமைகிறது. (தி.வி.அ.)

யில் தரித்து அம்ருத கிரணங்களை ஸகல ஜகத்துக்கும் ஊட்டி சுகம் தருபவரும் பரமேச்வரனுதலால் ஈச்வரபதம், ப்ரகரணம் முதலிய ஸங்கோசக ப்ரமாணம் இல்லாத காலத்தும். யோக வ்யுத்பத்தியால் அவரைத்தான் குறிக்கும் என்பது தாத்பர்யம் - ப்ரம்மா, விஷ்ணு முதலிய கடவுளுக்கு நிக்ரஹானுக்ரஹ சக்தி யளித்தவர் சிவபெருமான் தான்.

"ஹரிம் ஹரந்தம் அனுயந்திதேவா : விச்வஸ்
யேசானம் வ்ருஷபம் மதீனும்"

என்ற வேதவாக்யங்களிலும். வேதத்தைத் தழுவிய பிரஹஜ் ஜாபால ச்ருதி :, பிரம்மாண்டபுராணம், வாயவீய ஸம்ஹிதை, மகாபாரதம் வனபர்வம், த்ரோணபர்வம் முதலிய பல இடங் களிலும், பரமேச்வரனுடைய ஈச்வரத்வம் ; மற்ற எல்லாரையும் அடக்கியாளும் சக்தி நன்கு விளங்கும்,

## சுலோகம் 5.

சப்தஸ் தவாயமபிதான மனன்ய சப்தோ
நைகண்டுகா : சிவபதாதி வதேன மாஹு: |
வஸ்து ஸ்வாபாவக்ருதமேவ து பூஜ்யபாவம்
ப்ருதே மஹேச்வர மஹான் பரம:ச சப்த: ||

யோக வ்யுத்பத்தியைக் கவனிப்பது இருக்கட்டும். ஈச்வரன் என்பது உமக்குப் பெயராக அமைந்து விட்டது. ஆதலால் ரூடம் என்றே சொல்லவேண்டும். அல்லது யோகரூடமாகப் பங்கஜம் என்ற பதம்போல இருக்கட்டும் என்று விளக்குகிறார் இந்த 5-வது ச்லோகத்தால்.

## பதவுரை

அயம் சப்த :— இந்த ஈச்வரன் என்ற சப்தமானது, தவா பிதானம்—சிவசப்தம் போல. உமக்கு அஸாதாரணப்பெயராகும் அனன்ய சப்த :— பிறரைக் குறிக்காத சப்தமுமாகும். நைகண்டுகா:— நிகண்டு கிரந்தத்தை யுணர்ந்தவர்கள், ஏனம் —இந்த ஈச்வர பதத்தை. சிவ பதாதிவத்—சிவன் பதம் முதலியவை போல, ஆஹு :— சொல்லுகிறார்கள். மஹேச் வரா ! மஹான் சப்த :— மகான் என்ற அடைமொழியும் பரம :

ச சப்த :— பரம என்ற அடைமொழியும், இரண்டும் ஈச்வர பதத்தின் விசேஷணங்கள், வஸ்து ஸ்வபாவக்ருதம்—ஈச்வர சப்தார்த்தமான வஸ்துவின் ஸ்வபாவத்தால் கிடைத்த, பூஜ்ய பாவ மேவ—பூஜிக்கத் தகுந்த தன்மையையே, ப்ரூதே—சொல்லுகின்றன.

பிறர் ஈச்வரனுகலாம், சிவபெருமான் பரமேச்வரன், மகேச்வரன் என்பதால், பரம, மகத் சப்தங்கள் அடைமொழியாக வந்து. பிறரை விலக்கவில்லை ஆனால், அயோக வ்யவச்சேதகமாக நின்று. ஈச்வரத்வம் சிவபெருமானுக்குப் பூரணமாக உள்ளதைத் தெரிவிக்கிறது. ஆதலால் ஈச்வர சப்தம் அடைமொழியில்லாத காலத்தும்கூட சிவபெருமானைத்தான் குறிக்கும் என்பது பொருள்.

ஒரு குழந்தை தந்தையைப் பார்த்துப். பெருமாள் கோயிலுக்குப் போகிருயா, ஈச்வரன் கோயிலுக்குப் போகிருயா, என்று கேட்பது, ஆபால கோபாலம் பிரஸித்தமானதல்லவா? இது வாயவீய ஸம்ஹிதையில் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. காளிதாஸ மகாகவியும், விக்ரமோர்வசீயம் நாந்திச்லோகத்தில்

யஸ்மின் ஈச்வர இத்யனன்ய விஷய :
சப்தோயதார்த்தாக்ஷர : என்றும்,
ரகுவம்ச காவ்யத்தில்
மகேச்வர : த்ர்யம்பக ஏவ, ந அபர : என்றும்
கூறியிருக்கிருர்.

## சுலோகம் 6.

யஸ்யோபஸர்ஜன மஸௌ பரமோ மகான் வா
சப்தஸ் ததர்த்த மபிதாது மலம் ப்ரக்ருஷ்டம் |
சப்தேன பூஜ்ய வசனேன ஸமஸ்யமான:
பூஜாம் ப்ரவீதி யதி சப்தவித : ப்ரமாணம் ||

பரம :, மஹான், இவ்விரண்டு பதங்கள் சிறந்தவர் என்ற அர்த்தத்தை யல்லவா குறிக்கின்றன. பூஜ்ய பாவத்தின் அயோக வ்யவச்சேதகம் என்பது பொருந்தாதே என்ற சங்கையை இந்த சுலோகத்தில் நீக்குகிருர்.

ஸமாஸத்தில் விசேஷ்யம் பூஜ்யவாசக மானதால், அத்துடன் கூடிய அடைமொழியும் பூஜ்யார்த்தத்தைக் கூறுவது இயல்பு தான் என்ற ஸமாதனம் கூறப்படுகிறது.

## பதவுரை

அஸௌ--இந்த, பரம : சப்த :—பரம சப்தமோ, மஹான் வா சப்த :—மஹான் சப்தமோ, யஸ்ய--எந்த சப்தத்திற்கு, உபஸர்ஜனம்—விசேஷணமாகக் கொடுக்கப்படுகிறதோ, ததர்த்தம்—அந்த விசேஷ்யத்தின அர்த்தத்தை, ப்ரகிருஷ்டம்—சிறந்ததாக, அபிதாதுமலம் - அறிவிக்கச் சக்தியுள்ளது, பூஜ்ய வசனேன சப்தேன —பூஜிக்கப்படுகிறவர், என்று பொருள் தரும் சப்தமாகிய ஈச்வர பதத்துடன், ஸமஸ்யமான : யதி—ஸமாஸம் செய்யப்பட்டிருப்பதாலும், சப்தவித : பிரமாணம் யதி—பதங்களின் உண்மை அர்த்தங்களை நிர்ணயம் செய்வதில் நிபுணர்களான வையாகரணர்களும், மகத், பரம சப்தங்கள் மிகவும், சிரேஷ்டம், உத்தமம். பூஜ்யத் தன்மைகளைக் குறிப்ப பதாக விளக்கம் செய்திருப்பதாலும், பூஜாம் ப்ரவீதி—பூஜித்தல் என்ற கார்யத்தின் சிறப்பைத்தான் சொல்லும்.

'யதி' என்னும் பதம் 'ஆனல்' என்ற பதம் போல, ஸந்தேகத்தை இங்கு குறிப்பதல்ல. நிச்சயத்தை குறிப்பது, விசேஷம் காண்க.

ஸந்மகத் பரமோத்தமோத்க்ருஷ்டா : பூஜ்யமானை :

என்பது, வ்யாகரண ஸூத்ரம். (பாணினீயம் 2—1—61)

## சுலோகம் 7.

நாநீச்வரம் பவிதுமர்ஹதி விச்வமேதத்
பஹ்வீச்வரம் ச நிதரா மயதா ப்ரமாணம் |
தல்லோக வேத விதிதேச்வர ! வர்ஜனேன
கோயம் ப்ரம : கதிசிதீச்வரமன்ய மாஹு : ||

யஜமானனை வேலைக்காரன் நமஸ்கரிப்பது வழக்கம். அது தான் ஈச்வர ப்ருத்யந்நியாய மெனப்படும்.

ஈச்வரபதம் வேதபுராணங்களில் பரமேச்வரனையே குறிப்பதாக யோக ரூட பதமென்பது முன்சொல்லியபடி தீர்மானிக்கப் பட்டிருப்பதால், ப்ருத்ய ஸ்தானீயர்களானவர்களால் செய்யப் படும் நமஸ்காரம் பரமசிவனைத்தான் சேரும் என்பது 'ஈச்வர'

சப்தார்த்ததைக் கொண்டு நிச்சயிக்கப்பட்டது. அதனால் உலகுக்கு ஈச்வரன் கிடையாது என்ற நிரீச்வரவாதமும், பல கடவுள்கள் இருக்கிறார்கள் என்ற 'பஹ்வீச்வர' வாதமும், சிவபெருமானைத்தவிர வேறு கடவுள் உண்டு என்ற 'அன்யேச்வர' வாதமும், இம்மூன்றும் ஸரியல்லவென்பதை இந்த 7வது ச்லோகத்தால் கூறுகிறார்-

## பதவுரை

ஏதத்-இந்த, விச்வம்-ப்ரபஞ்சம் (உலகம்) அனீச்வரம் முழு முதற்கடவுள் இல்லாமல், பவிதும் - உண்டாவதற்கோ, இருப்பதற்கோ, நார்ஹதி-தகுந்ததில்லை. பஹ்வீச்வரம்-ச-பல கடவுள்களை உடைத்தாயிருப்பதும், நிதராம் ந - முற்றிலும் தகுந்ததில்லை. அயதா ப்ரமாணம் தத் - பெரிய மாளிகை, கோபுரங்களில் பலபேர் கர்த்தாவாகக் காணப்படுவதால் ஒப்புக் கொள்ளலாம். ப்ரமாணமில்லாததால், உலகுக்குப் பல கர்த்தாக்களை அங்கீகரிக்க முடியாது. லோக வேத விதிதேச்வர வர்ஜனேன - புராணங்களிலும், வேதங்களிலும் அறிவிக்கப்பட்டுள்ள ஈச்வரனை நீலகண்டன், சந்திரசேகரனைத் தள்ளிவிட்டு, கதி சித் - சிலர், அன்யம் - மற்று பிரம்மாவை, விஷ்ணுவை அனீச்வரனை ஈச்வரனல்லாதவர்களை, ஈச்வரம் - ஜகத்கர்த்தாவாக, ஆஹு : - சொல்லுகிறார்கள், அவர்கள் மூடர்கள். கோயம் ப்ரம :— ஏன் இந்த மயக்கம்? வேத புராணங்கள் தெளிவாகத் தெரிவிக்கும்போதுகூட, ஏன் இந்த மயக்கம் அவர்களுக்கு?

## விசேஷ வுரை

கன்று வளர்ச்சிக்காகப் பால் சுரப்பது போல, அசேதனமாகிய உலகம். ஜீவாதியர் சுகத்திற்காக சேதனன் இல்லாமல் உண்டாகவோ, சேஷ்டிக்கவோ முடியாது. பால் சேதனனாகிய பசுவின் உதவியால் சுரக்கிறது அயஸ்காந்தமும் இரும்பை சேதனனால் சமீபத்தில் வைக்கப்பட்ட பிறகுதான் இழுக்கிறது ஆதலால், அசேதன உலகுக்கு சேதனன் ஈச்வரன் இருந்தே ஆகவேண்டும். அவன் ஒருவன் ஸர்வ சக்தனாக ஒப்புக் கொள்ளப்படுவது லாகவ ந்யாயத்தால். ச்ருதியும்,

தத் விஜிஞாஸஸ்வம்

தஸ்மாத் ஸப்தார்ச்சிஷ; ஸமிதஸ் ஸப்தஜிஹ்வ:

த்யாவா ப்ருதிவீ ஜனயந் தேவ ஏக:

என்ற விடங்களில், ஏகவசனத்தாலும், ஏகபதத்தாலும் ஓர் காரணம் என்கிறது. ச்வேதாச்வதரம், சிவரகஸ்யாகமம், வாய வீய ஸம்ஹிதை, லிங்கபுராணம், காளிகா கண்டம், பத்ம புரா ணம், மகாபாரதம் சாந்திபர்வம் ஆனுசாஸனிகபர்வம், ஸ்காந் தம் முதலிய க்ரந்தங்களில் ப்ரம்மாவை வலது பக்கத்தி லிருந்தும், விஷ்ணுவை இடது பக்கத்திலிருந்தும், நான்கு வேதங்களையும் நான்கு முகங்களிலிருந்தும் படைத்துப் பரமேச் வரன் உலகத்தை நடத்துவதாகவும், யுக முடிவில் அழிப்பதாக வும் கூறப்பட்டிருப்பதால் கார்யகோடியில் சேர்ந்த பிரம்மா, விஷ்ணு தேவதைகள் உலகின் காரணமாகவோ, ஈச்வரனாகவோ இருக்கமுடியாதது பற்றி, அன்யேச்வர வாதமும், ப்ரமையால் ஏற்பட்டதுதான், என்பது தாத்பர்யம்.

ஹிரண்ய கர்ப்ப: ஸமவர்த்ததாக்ரே

அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே

என்ற ப்ரமாணங்கள் விச்வாமித்ரர் உலகில் சிலவற்றைப் படைத்தது போல், பிரம்மா விஷ்ணுக்களும் சிலவற்றைப் படைத்தவர் ஆவார்கள் அப்படைத்தலும் பரமேச்வரன் அரு ளால்தான் என்பது தாத்பர்யம். ஆனதால், மற்ற ப்ரமாணங் களோடு விரோதமாகதவை.

## சுலோகம் 8

விச்வம் நிரீச்வரமிதம் ஜகதர்ஹ ஸாங்க்யோ
யோக: ச ஸேச்வரமுபா வனுவாதிஞேன்யே |
நத்வேவ ஸம்பவதி சேச்வரதாம் ப்ருவாண:
பத்மாஸனாதிபி ரனீச்வர சப்த வாச்யை: ||

வேத புராணங்களைக் கவனிக்கும் எவனும் அந்யேச்வர வாதி யாக இருக்க முடியாது. அப்படியிருந்தால் தன் வார்த்தையில் முன்பின் முரண்பாடாகப் பேசுபவனாவான் என்ற கருத்துடன் 8-வது சுலோகம் சொல்லப்படுகிறது.

### பதவுரை

ஸாங்க்ய:—ஸாங்க்ய சாஸ்திரம் இயற்றிய கபில முனிவர் இதம் ஜகத் - இந்த உலகம், நிரீச்வரம் கடவுள் இல்லாமல் உண்டாகி நடப்பதாக, ஆஹ - சொல்லுகிறார் (கருதுகிறார்) யோக:ச - யோக சாஸ்திரம் படைத்த ஹிரண்ய கர்ப்பன்

(பதஞ்சலி முனிவர்) விச்வம் - உலகை, ஸேச்வரமாஹு - கடவு ளால் படைக்கப்பட்டு நடப்பதாகக் கருதுகிருர். அன்யே-மற்ற வர்கள் அனைவரும், உபௌ - அவ்விரு முனிவர்களே, அனு வாதின :—பின்பற்றிச் சொல்பவர்கள். அனீச்வர சப்த வாச்யை :—ஈச்வர சப்தத்தால் சொல்லப்பட முடியாதவர்களான பத்மாஸனுதிபி :—பிரம்மா முதலியவர்களால், ஸேச்வரதாம் - உலகில் ஈச்வரனுள்ள தன்மையை, ப்ருவாண : - சொல்லுகிற அன்யேச்வர வாதியானவன். நத்வேவ ஸம்பவதி - ஒருவனும் இருக்க முடியாது. சுருதி புராணங்களில், பிரம்மா விஷ்ணு முதலியவர்களுக்கு ஈச்வரத்வம் இல்லையென்பது தெளிவாக விளக்கப்பட்டிருக்கும் போது. அன்யேச்வரவாதீ எங்ஙனம் ஸம்பவிக்கக்கூடும். அப்படி ஸம்பவித்தால் அவன் வார்த்தை அனீச்வரனுல், 'ஸேச்வரம் ஜகத்' என்று முன்பின் வ்யாஹத மானதாகுமல்லவா? த்ரிபுரதாஹத்திலும், ஆதித்ய புராணத்தி லும், பசுபதி ஒருவன்தான் ஸர்வேச்வரன் என்பது விளக்கிக் கூறப்பட்டிருப்பதால், "மே மாதாவந்த்யா" என் தாயார் மலடி என்ற வாக்கியம் போல அந்யேச்வர வாதியின் வாக்கியம் ப்ரமாணமாகாது. (அபத்த வாக்கியம்)

நாராயணேன ஸப்ரம்மகம் ஜகத்,
பிரம்மணு ஸநாராயணகம் ஜகத்

என்ற வாக்கியங்கள் போலவும், வ்யாஹதமான, அன்யேச்வர வாதியின் வாக்கியம் தள்ளத்தகுந்தது.

## சுலோகம் 9

ஐச்வர்ய மக்ர்ய மனுபாதி நிபந்தனம் தே
யத்பூதநாத! நமஸாமி பாத்ரமேகம் |
தத்ப்ராயச: ச்ருதிஷு துர்லபமேவர் வாக்யம்
முக்த்வா நமோ பவதி யத்ர பவத் ப்ரஸங்க: ||

ஈச்வரன் என்ற பதத்துக்கு இவ்விதம் பரமசிவன்தான் பொருள் என்று தெளிவு படுத்திய பிறகு அதனல் பரமேச்வரன் நம: சேஷி யென்ற லக்ஷணம் முதலாவது கூறப்படுவது நியாயமே என்ற விஷயம் 9 முதல் 21 முடிய, 13 ச்சோலகங் களால் நன்கு விளக்கப்படுகிறது.

## பதவுரை

பூதநாத - ஸகல ப்ராணிகளுக்கும் தலைவரே! தே - உம்முடைய, அக்ர்யம் - சிறந்த, ஐச்வர்யம் ஈசத்தன்மையானது, அனுபாதி நிபந்தனம் - வேறு காரணங்களால் ஏற்பட்டதல்ல, ஸ்வபாவமாக அமைந்தது. அன்ய தேவதைகளன்றோ, உம்மை ஆராதித்து அவரவர்கள் அதிகாரத்திலமர்ந்து, வரப்ரஸாதத்தால், சிலவற்றிற்கு ஈச்வரர்களாக விளங்குகிறார்கள், ஆதலால் அவர்களின் ஐச்வர்யம் ஸங்குசிதம்; வரப்ரஸாதலப்த மாதலால் ஸ்வபாவிகமலல. உம்முடைய ஐச்வர்யம் ஸங்குசிதமல்ல, சிறந்தது; வரப்ரஸாத லப்தமல்ல; ஸ்வபாவிகம். உமக்குமேல் ஆராதிக்கக் கூடிய தெய்வம் இருப்பதாக வரம் கொடுக்க வல்லமையுள்ளதாக வேதபுராணங்கள் கூறவில்லையே. ப்ரம்ம கைவர்தம், பராசரபுராணம், சிவரஹஸ்யம், ஆனுசாஸனிக பர்வம், த்ரோணபர்வம், பாத்ம புராணம், வாமன புராணம், ஸனத்குமாரஸம்ஹிதா, கூர்மபுராணம். ஆதித்யபுராணம், ஹரிவம்சம் முதலிய கிரந்தங்களில் ப்ரம்ம விஷ்ணுவாதி தேவதைகள் சிவலிங்கத்தைப் பூஜை செய்ததும், இஷ்டஸித்திகளைப் பெற்றதும், நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன ஆதலால், அவர்களின் ஈசத்வம் உபாஸையால், தபோபலத்தால், சிவபூஜா பலத்தால் கிடைத்தது, ஸ்வாபாவிகமல்ல. உமக்கு ஆராத்ய (நீர் ஆராதிக்கும்படியான) தெய்வம் ஒன்றும் கிடையாதென்பதும், மேற்படி புராணங்களிலும் வேதங்களிலும் கூறப்பட்டிருப்பதால், உமது ஐச்வர்யம் ஸ்வாபாவிகமானது; சிறந்தது; ஸங்குசிதமானதல்ல.

யத் - எந்தக் காரணத்தால் இவ்விதமான, ஸ்வாபாவிக சிறந்த, ஐச்வர்யம் உம்மிடத்திருக்கிறதோ, தத் - அந்தக் காரணத்தால், நமஸாமபி - நமஸ்காரங்களுக்கும், த்வம் - நீர். ஏகம்-நிகரற்ற, ஒரே விதமான, பாத்ரம் - விஷயமாக இருக்கிறீர், பவத் ப்ரஸங்கம் முக்த்வா - உம்முடைய ஸம்பந்தம் இல்லாமல் யத்ர வாக்யே - எந்த வாக்கியத்தில், நமோ பவதி – நமஸ்காரம் சொல்லப்படுமோ, தத் - வாக்யம் - அப்படிபட்ட வாக்கியம், சுருதிஷு - வேதபுராணங்களில், ப்ராய :-பெரும்பாலும், துர்லபமேவ - காண்பது அரிதுதான்.

நமோ பிரம்ஹணே, நமோ ஸ்தவக்னயே நம: ப்ருதிவ்யை நம ஓஷதீப்ய:, நமோ வாசே, நமோ வாசஸ்பதயே, நமோ விஷ்ணவே, ப்ருஹதே கரோமி

என்ற சில விடங்களில், தேவாந்தரங்களுக்கு நம: பதம் கூறப்பட்டிருப்பது, அந்த தேவர்கள் உம்முடைய விபூதியாவார்கள் என்பது பற்றியே என்பது தாத்பர்யம். இங்கு ப்ராய: (பெரும்பாலும்) என்ற பதத்தால் கூறப்பட்டது காண்க.

## சுலோகம் 10

தேவ! த்வதேக விஷயாணி நமாம்ஸி பும்ஸாம்
யஸ்மை நம: சுருதி பலா தவதாரயாம: |
தேவாந்தரேஷு, விஹிதான்யபி தான்யமூனி
ஸ்ரோதாம்ஸி ஸாகர இவ த்வயி ஸம்பதந்தி ||

இரண்டு ப்ரதானமான ச்ருதி வாக்ய ப்ரமாணங்களைக் கொண்டு நம: சேஷித்வ லக்ஷணத்தை ப்ரதிக்ஞை செய்கிறார்.

### பதவுரை

தேவ - விளையாட்டாக உலகைப் படைத்து ஸ்வயம் ப்ரகாசமாக விளங்கும் கடவுளே! யஸ்மை நம: சுருதி பலாத்—

யஸ்மை நம: தஸ்மை த்வா ஜுஷ்டம் நியு நஜ்மி என்ற சூலகவ ப்ரகரணத்தில் சொல்லப்படும் வேத மந்த்ரம்.

யஸ்மை நம: தத் சிர:

என்ற தைத்திரியாரண்யக சிசுமார ஸ்வரூப வர்ணன ப்ரகரணத்திலிருக்கும் மந்த்ரம்: இவ்விரண்டின் பலத்தால், பும்ஸாம்—மனிதர்களுடைய, நமாம்ஸி - நமஸ்காரங்கள், த்வதேக விஷயாணி - உம்மையே குறிப்பவை, மற்றவர்களைச் சேராதவைகள் என்று, அவதாரயாம: - நிச்சயிக்கிறோம். தேவாந்தரேஷு - மற்ற தெய்வங்களுக்கு, பரமசிவன் மகிமை அறியப்படாததால், விகிதான்யபி - செய்யப்பட்ட போதிலும், தாநி - அமூநி - அந்த இந்த நமஸ்காரங்கள். ஸ்ரோதாம்ஸி - நதிகள், ஸாகரே இவ-ஸமுத்திரத்தில் போய்ச் சேர்வது போல, த்வயி - உம்மிடத்திலேயே, ஸம்பதந்தி - வந்து சேர்கின்றன.

### விரிவுரை

வாயவீய ஸம்ஹிதை, மார்க்கண்டேய புராணம், மாண்டுக்யோப நிஷத் கிரந்தங்களில், கடவுள் விளையாட்டாக, அநு

யாஸமாக, உலகத்தைப் படைக்கிறார். அதனால் க்ருத க்ருத்யனான, பரிபூர்ணவஸ்துவான அவருக்கு யாதொரு லாபமும் கிடையாது.

லோகவத்து லீலா கைவல்யம்.

என்ற ந்யாயம்தான் படைத்தலுக்குப் பயன் என்ற அர்த்தம். தேவப்ரதத்துக்கு, நன்கு விளக்கம் கூறப்பட்டிருத்தல் இங்கு கவனிக்கத் தகுந்தது. த்ரோண பர்வம், காளிகா கண்டம், லிங்க புராணம், காசிகா கண்டம் முதலிய க்ரந்தங்களில், துருவனுக்கு, மகாவிஷ்ணு த்ருவபதத்தை, ஈச்வர ப்ரஸாதத்தால் அடைந்ததை, பக்தனுக்குக் கொடுத்ததாக விரிக்கப்பட்டுள்ளது ஆதலால், மற்ற தேவதைகளின் நமஸ்காரங்கள், அவர்களுக்கு அந்தர்யாமியும், ஆராத்ய தேவரும், வரப்ரதான தேவருமாகிய உம்மைத்தான் வந்தடையும் என்பது திண்ணம்.

## சுலோகம் 11

யஸ்மை நம : ச்ருதிரனூத்ய நமஸ்வினம் த்வாம்
ஏகா நியோஜன முவாச பசோ : கபர்தின் |
அன்யா ச திவ்ய சிசுமார சிரோ பவந்தம்
சக்யந்த தித்த முபயேன நமோ விதாதும் ||

யஸ்மைநம : என்று ஆரம்பிக்கும் இரண்டு சுருதிகளுக்கு அர்த்தம் கூறும் சுலோகம்.

### பதவுரை

கபர்தின் - கபர்தமென்ற ஜடா பாரமணிந்த கடவுளே! ஏகா - ஒரு, யஸ்மை நம ; ச்ருதி - யஸ்மை நமஸ்தஸ்யை த்வா ஜுஷ்டந்நியுநஜ்மி - என்ற வேதமானது, நமஸ்வினம் த்வாம் - நம : சேஷியான உம்மை, அனூத்ய - உத்தேசித்து, பசோ : நியோஜனம் - பசுவைக் கட்டுவதை, உவாச - சொல்லுகிறது. அன்யா - மற்றதான ''யஸ்மை நம' தத் சிர :'' என்ற வேத மந்த்ரம், பவந்தம் – உம்மை, திவ்ய சிசுமாரசிர : - ஆகாயத்தில் ப்ரகாசிக்கும் சிசுமாரத்தின் சிரஸ்ஸாக, ஆஹ — ரூபகாலங்கார விதமாகக் கூறுகிறது. தத்-ஆகையால், இத்தம் - இந்த வ்யாக்யான முறைப்படி, உபயேன — இரண்டு வேத ப்ரமாணங்களால், நம : நமஸ்காரத்தை, விதாதும் - உமக்கு சேஷமானதென்று தாத்பர்யம் கூற, சக்யம் - இயலும்.

## சுலோகம் 12

ச்ருத்யோர் த்வயோரபி நமஸ்வின முச்யமானம்
த்வாமேவ தந்த மனுஸந்ததத: ப்ரதேசம் |
சம்ஸந்தி மந்தமதயோபி கிமாபதந்தம்
மத்யந்தினே ஹி ஸவிதார மபன்ஹுவீரன் ||

கீழே குறிப்பிடப்பட்ட இரண்டு வாக்கியங்களிலும் நம: சேஷீ ஒருவர் குறிப்பிடப்படுவது உண்மை. அவர் பரமசிவன்தான் என்பது எங்ஙனம் அறியப்படமுடியும் என்ற கேள்விக்கு, முன் பின் ஸந்தர்ப்பங்களைக் கவனித்தால் பரமேச்வரன்தான் அவ் வேத வாக்கியங்களால் நம: சேஷீயாகக் கூறப்படுவது தெளிவாகும் என்ற விஷயத்தை விளக்குகிறார்.

### பதவுரை

தம் தம் ப்ரதேசம் - முன் கூறப்பட்ட வேதவாக்கியங்களின் அந்தந்த முன்பின் வாக்கிய ஸந்தர்ப்பத்தை, அனுஸந்ததத: —நன்கு பர்யாலோசித்துப் பார்க்கும் வித்வான்கள், த்வயோரபி ச்ருத்யோ: -அந்த இரண்டு சுருதி வாக்யங்களுக்கும், த்வாமேவ உம்மையே, நமஸ்வின முச்யமானம் - நம: சேஷியாகக் கூறப் படுவதாகச், சம்ஸந்தி - சொல்லுகிறார்கள். மந்த மதய: அபி - மூடபுத்தியுள்ளவர்களும், ஆபதந்தம் - மேலே கிளம்பி கொண் டிருக்கிற, (ஆதபந்தம் - நன்கு வெய்யில் அடித்துக் கொண் டிருக்கிற), மத்யந்தினே - உச்சிவேளையிலுள்ள, ஸவிதாரம் - ஸூர்யனை, கிம் ஹி அபன்ஹுவீரன் - இல்லை யென்று மறுத்துச் சொல்வார்களா என்ன? மிகவும் தெளிவாகத் தெரிவதை ஒருவரும் மறைக்கமுடியாது, மறுக்க முடியாது என்பது தாத்பர்யம்.

## சுலோகம் 13

கர்மைவ சூலதர! சூலகவந் த்வதீயம்
மந்த்ரா பவந்த மகிலா: ப்ரதிபாதயந்தி |
த்வாமந்தரேண நமஸா க்ருதலக்ஷுணய
கஸ்மை பசும் நியுநஜாநி நியோஜய த்வம் ||

## பதவுரை

சூலதர - சூலத்தைக் கையில் தரித்த சூலபாணியே! சூலகவம் - போதாயனர், ஆச்வலாயனர், முதலிய மகர்ஷிகளால் ப்ரதி வருஷம் வஸந்த ருதுவிலோ, சரத் ருதுவிலோ, மார்கழி மீ பூர்ணிமா திதியிலோ, நித்தியகர்மாவாக, அவசியம் செய்யப் பட வேண்டி விதிக்கப்பட்டிருக்கும் பாக யக்ஞங்கள் ஏழில் ஒன்ருகிய 'சூலகவம்' என்று பெயருள்ள, கர்மா - கர்மாவானது த்வதீயமேவ - உம்மையே தேவதையாகக் கொண்டது. சூலம் என்ற பதம், சூலம் தரித்த சூலியைக் குறிக்கும் - அவரைப் பசுவால் (கோ) பூஜிப்பது பற்றி. இந்தக் கர்மா சூலகவம் என்ற பெயர் பெற்றது காண்க. அகிலா : மந்த்ரா : அந்தக்கர்மாவில் உபயோகிக்கம்படும் எல்லா மந்த்ரங்களும் பவந்தம் (ஏவ) ப்ரதிபாதயந்தி - தங்களையே தேவதையாகக் குறிக்கின்றன.

ஈசாநாய த்வா ஜுஷ்டமுபாகரோமி

என்பது பசுவை தர்ப்பையால் தொட்டு ஸங்கல்ப்பிக்கும் காலத்தில் சொல்லப்படும் மந்த்ரம்.

ஈசாநாய த்வா ஜுஷ்டம் ப்ரோக்ஷாமி

என்பது, பசுவை ப்ரோக்ஷிக்கும்போது சொல்ல வேண்டிய மந்த்ரம்.

ஏதமேவ தேவம் மத்யே கோஷ்டஸ்ய யஜேத என்ற விதி வாக்கியத்தில் தேவசப்தந்தால பரமசிவனைச் சொல்லி, அந்த தேவதைக்குச் செய்யவேண்டிய சூலகவ யக்ஞம் என்று தெளிவாகத் தெரிவிக்கிறது.

தேவ : பூஜ்ய : பிநாகீ - என்பது நிகண்டு. தேவஸ்யாயதனே ப்ரதிதிசம் ப்ரத்யோதயதி என்று போதாயன ஸூத்ரத்தில் பரமசிவன் தேவ சப்தத்தால் குறிக்கப்பட்டிருப்பதும்.

'தேவமேவானுப்ரவிசதி'

என்று அதர்வசிரஸ்ஸிலும், தேவ சப்தப்ரயோகம் பரமசிவனைக் குறிக்கக் காணப்படுவதும் இங்கு காணவேண்டும். ஈச்வர சப்தம். போல, தேவ சப்தமும் பரமசிவனுக்கு யோகரூடமான சப்தம். மகாதேவ : பரமேச்வர : என்ற நாமாக்களால் அடைமொழியாகிய மகத் பரம சப்தங்கள் பூஜ்யத் தன்மையான அயோக வ்யவச் சேதகமே யல்லாது அன்யயோகவ்யவச்சேதக மல்ல என்று முன்னம் விளக்கப்பட்டதும், நினைவுக்குக் கொண்டுவர வேண்டும். ஆதலால் அனுவாதகமான மகத் பரம

சப்தமில்லா விட்டாலும் ஈச்வர, தேவ பதங்கள் சிவபெருமானைத் தவிர மற்ற தேவதைகளைக் குறிக்காது. ஆதலால் அவை பங்கஜ பதம்போல யோக ரூடங்களாகும். இவ்விஷயம் சப்தா தேவ ப்ரமித : என்ற அதிகரணத்தில் வேதாந்த சாஸ்திரத்தில் வ்யாஸமுனிவரால் தீர்மானிக்கப் பட்டிருப்பதும், "ஈசானோ பூத பவ்யஸ்ய என்ற கடோபநிஷத் வாக்யார்த்த விசார முறையும் இங்கு கவனிக்கதக்கவையாகும்.

பவாய தேவாய ஸ்வாஹா
நமஸ்தே ருத்ர மன்யவ

யஸ்மை நம : தஸ்மை த்வா ஜுஷ்டம் நியுநஜ்மி இதி ஹராய க்ருசாய சர்வாய சிவாய பவாய மகாதேவாய உக்ராய பசுபதயே ருத்ராய சங்கராய ஈசானாய ஸ்வாஹா

இம்மாதிரி ஸகல மந்த்ரங்களும் சூலகவ கர்மாவிற்கு உங்களையே தேவதையாகக் குறிக்கின்றன. தத்திதத்தால், நான்காவது வேற்றுமையால், மந்த்ரார்த்த பர்யாலோசனையால், மூன்று உபாயங்களாலல்லவா கர்மாவின் தேவதை அறியப் படுகிறது. உம்முடைய தேவதா பாவத்தில் மூன்று ப்ரமாணங் களுமிருப்பதால் நீர் தான் சூலகவ கர்ம தேவதை யென்பது சந்தேகமற்ற விஷயம்.

த்வாமந்தரேண - உம்மைத்தள்ளிவிட்டு, நமஸாக்ருதலக்ஷணாய - நமஸ்காரத்தால் லக்ஷணம் சொல்லப்பட்ட, கஸ்மை - எந்த தேவதையின் பொருட்டு பசும் நியு நஜானி - பசுவை யூபத்தில் கட்டமுடியும்? த்வம் - நீரே. நியோஜய - என்னை நியாயமான வழியில் தூண்டி விடும்.

ஈச்வரனாகிய உம்மாலும், வேத தாத்பர்யத்துக்கு மாறாக செய்யச் சொல்ல முடியாது என்று தாத்பர்யம்.

## சுலோகம் 14

அங்காந்தரேஷு விபுதாந்தர ஸம்ஸ்துதேஷு
யச் சிம்சுமார சிரஸ: பரிசிஷ்யஸே த்வம் |
தஸ்மை நமோ பவிது மீச்வர! ஸாம்ப்ரதந்தே
தேவாந்தராய ந கதஞ்சி தனீச்வராய ||

இவ்விதம் இரண்டாவதான "யஸ்மைநம : தத்சிர :" என்ற மந்த்ரமும், முன்பின் ஸந்தர்ப்பத்தை யோஜித்தாலும், பாரிசேஷ ந்யாயத்தைக் கொண்டும், அதாவது சொல்ல வேண்டியவர்கள், மற்றவையால் சொல்லப்பட்டு விட்டபடியால் வேறு ஒருவரும் பாக்கியில்லாததால் பாக்கியுள்ள அவர்தான் இக்குறிபுக்கு இலக்காவார் என்ற ந்யாயத்தாலும்) ஈச்வர னையே ஐயமறத் தெரிவிக்கிறது என்று விளக்கம் செய்கிருர்.

## பதவுரை

அங்காந்தரேஷு - தலையைத் தவிர மற்ற அவயவங்கள், (1) மூர்தா — தர்ம தேவதை. (2) மேல்தாடை — பிரம்மா, (3) கீழ் தாடை யக்ஞேச்வரன், (4) ஹ்ருதயம் விஷ்ணு (5) ஆண்குறி. ஸம்வதஸர தேவதை (6) முன் கால்கள - அசுவினி தேவதைகள், (7) நடுவு - அத்திரிமுனிவர், (8) பின் கால்கள் - மித்ரா வருண தேவதைகள் (9) வாலின் முதல் பாகம் - அக்னி தேவதை (10) வாலின் இரண்டாவது பாகம் இந்திரதேவதை (11) மூன்ருவது பாகம் ப்ரஜாபதி தேவதை (12) நான்காவது பாகம் - ஸம்ஸார பயம் நீக்கும் அபயபத வாச்ய பிரம்மா என்று இவவாருக, விபுதாந்தர ஸம்ஸ்து தேஷு - சிம்சுமாரமாக வர்ணிக்கப் படும் கச்யபருடைய அவயவங்கள். மூர்த்தா முதலியவைகள் தர்ம தேவதை முதலிய மற்ற தேவதைகளாக அமைந்துப் புகழப்பட்டிருக்கும போது, சிசுமார சிரஸ : - சிசுமாரன் தலையின் துதிக்காக, ய : - யாதொரு. த்வம் : நீர், பரிசிஷ்யஸே - மிச்சப் படுகிறீரோ ஈச்வரா ! - ஹே பரமேச்வரா, ஈச்வர சப்தத்தால், யோக ரூட பதத்தால் அனிதர ஸாதாரணமாக சொல்லப்படும் கடவுளே, நமஸ்காரங்களுக்கு அஸாதாரண உத்தேச்யமான பரம்பொருளே தஸ்மை - அப்பேர்ப்பட்ட, தே - உமக்குத்தான், நமோ பவிதும் - நமஸ்காரம் உரித்தானது என்பது ஸாம்ப்ரதம் – யுக்தமாகும். அனீச்வரனு மற்ற தேவதைக்கு நமஸ்காரம் உரித்தாவது, யுக்தமாகுமா ? அனீச்வரன் இயற்கையாகவே நமஸ்காரத் திற்கு தகுந்தவனல்லன். ஸரியான ஈச்வரன் இருக்கும்போது அவன் எவ்விதம் நமஸ்கார அர்ஹனுவான். ஈச்வரத்வம்தான் நமஸ்கார ஸ்வாமித்வத்துக்குக் காரணம் என்பது ஸம்போதனத் தால் தெளிவு படுத்தப் படுகிறது.

அனீச்வராய தேவாந்தராய — ஈச்வரனல்லாத மற்ற தேவதைகளுக்கு, கதம்சித் – எவ்விதத்திலும் நமோ பவிதும். நமஸ்காரம் செல்லுவதற்கு, ந ஸாம்ப்ரதம் – தகுந்ததல்ல.

தெளிவான ஆயிரம் ந்யாயங்களால், ஸ்தாபிக்கப்பட்ட போதிலும் மூடர்கள் புத்தியில், மகேச்வரபத வாச்யன், நம: சேஷி என்பது ஏறுகிறதில்லை. துஷ்காலமுள்ளவன் கையில் வைக்கப்பட்ட நல்ல ரத்னமும் ஒடிவிடுமல்லவா? ப்ராப்த மில்லையானால், கைக்குக் கிடைத்ததும் நழுவி விடுமன்றோ? பாக்யமிருந்தால்தான் சிவன் நம: சேஷி என்ற உண்மைப் பொருள் விளங்கும். அல்லாது மயங்கி மடியவேண்டியதுதான் பாத்ம புராணத்தில் ஈச்வரனுக்கு விஷ்ணு நமஸ்கரித்ததாகத் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

"தேவ தேவனை ஈசனே உமக்கு நமஸ்காரம். சாச்வதப் பொருளே! மாறுப் பொருளே! உமக்கு நமஸ்காரம் தங்களை நான் அறியமுடியவில்லை உம்மை நீர்தாம் அறியமுடியும், நமஸ்காரம், நமஸ்காரம் உம்மைச் சரணமடைந்தேன். எனக்கு உம்மையறியும் கண்ணைக் கொடும். என்னால் நமஸ் காரம்தான் செய்யமுடியும் உம்மையறிய முடியவில்லை." என்பது பாத்ம புராணம்.

நம: சேஷித்வம் என்பது வேத புராணங்களால், யஸ்மை நம: என்ற இந்த மந்த்ரந்தாலும் தெளிவு.

## சுலோகம் 15

யா வஜ்ரிணீ பவதி சங்கர! சங்கினீ யா
முத்ரா ச யா கமலினீ பரதோபதிஷ்டா |
தாபிர் பவந்த்யபிநயா விபுதாந்தராணாம்
மௌளிஸ்ப்ருசா கரபுடாஞ்சலி முத்ரயா தே!!

நாடக மேடையில் நடிக்கும் ஜனங்கள் கூட நமஸ்கார முறையால், உம்மை ஸமிக்ஞை காட்டுகிறபடியால் நமஸ்கார முத்திரைக்கு நீர்தாம் அஸாதாரணமான அர்த்தம் என்று பரத நாட்டிய சாஸ்திரம் தெரிவிப்பதால், நம: சேஷித்வம் உமக்குத் தான் பொருந்தும் என்று விளக்கப்படுகிறது.

### பதவுரை

சங்கர, - சுகத்தைத்தரும் கடவுளே! பரதோபதிஷ்டா — பரத முனிவரால். அபிநய சாஸ்திரத்தில் உபதேசிக்கப்பட்ட வஜ்ரிணீதி யா முத்ரா - வஜ்ரிணீ யென்ற யாதொரு முத்திரை,

சங்கினீ யா கமலினீ தி ச - சங்கினீ, கமலினீ யென்ற முத்ரைகளும். பலந்தி - இருக்கின்றனவோ தாபி : - அவைகளால், விபுசாந்தராணும் - மற்ற இந்திரன், விஷ்ணு, பிரம்மா என்ற தேவதைகளின், அபிநயா பவந்தி - அபிநயங்கள் அமைந்திருக்கின்றன. அந்தந்த முத்ரைகளால், அந்தந்த ஆயுதம் கொண்ட தேவதைகள் அஸாதரணமான அந்த அந்த அபிநயங்களால் தெரிவிக்கப் படுகிறார்கள். தே அபிநய : - உமக்கு அஸாதாரண அபிநயமானது. மௌளிஸ்ப்ருசா — தலைமேல் வைக்கப்பட்ட, கரபுடாஞ்சலி முத்ரயா - கூப்பிய இருகைகளாகிய அஞ்சலி முத்ரையால், பவதி - ஏற்படுகிறது.

பரத சாஸ்திரத்தில் சொல்லப்பட்டதாவது :—

வஜ்ரிணீ முத்ரையால் (வஜ்ராயுதம்) இந்திரனையும் பத்மினி முத்ரையால் (பத்மம் தாமரை) பிரம்மாவையும், சங்கினீ முத்ரையால் (சங்கு) விஷ்ணுவையும், தலைக்கு மேல் இரு கைகளையும் கூப்பிய அஞ்சலி முத்ரையால் (நமஸ்கார முத்ரையால்) ருத்ரனையும் அபிநயத்தால் தெரிவிக்க வேண்டும். (இங்கே ருத்ரன் என்றால் ஈச்வரன் என்றே அர்த்தம்) மற்றவர்களுக்கு ஆயுதம் அடையாளத்தால் அபிநயம் காட்டுவது போல, ஈச்வரனுக்கு த்ரிசூலம் ஆயுதமுத்ரையால் அபிநயம் விதிக்கப்படலாம். ஆயினும், பரதமுனிவர் அவ்வாறு ஆயுத முத்ரை விதிக்காமல், தலைக்குமேல் கை கூப்பிய நமஸ்கார முத்ரையால் அபிநயம் விதித்ததாலும். நம : சேஷித்வம் அவருக்குத்தான் பொருந்தும் என்பது அறிவிக்கப்பட்டது.

## சுலோகம் 16

தத்தம் நம : கிமுபசுச்ரும தேவதாப்ய :
த்வாமந்தரேண நமஸா மவஸான பூமிம் |
தாஸ்தத் க்ரஹீதுமனலன்ன ஹி க :
சிதீஷ்டே
சோரோபநீதமிவ தாரயிதும் கிரீடம் ||

இவ்விதம் நமஸ்காரங்கள் சிவபெருமானைச் சேர்ந்ததானது பற்றி, மூட ஜனங்களால் கொடுக்கப்பட்ட போதிலும் மற்ற தேவதைகள் நமஸ்காரங்களைப் பெற்றுக் கொள்ளத் தகுந்தவர்களல்ல. நான் சொந்தக்காரனல்ல என்று, கொடுத்த நமஸ்காரங்களைப் பெற்றுக் கொள்ளாமல், சொந்தக் காரனாகிய

உமக்குத்தான் கொடுத்துவிட வேண்டியவர்கள். மாறுதலாகத் தவறிவந்த ஒருபொருளை, நான் வைத்துக் கொள்ளாமல் ஒழுங்கானவன், பொருளின் சொந்தக்காரனிடம் பொருளைச் சேர்த்து விடுவானல்லவா ?

## பதவுரை

தேவதாப்ய :— தேவாந்தரங்களுக்கு, தத்தம் - கொடுக்கப்படுகிற, நம : - நமஸ்காரத்தை, கிமபி – சில மந்த்ரங்களில் (நமோ பிரம்மணே, நமோஸ்த்வக்னயே) என்றவைகளை சிலவற்றை, சுச்ரும - கேள்விப்படுகிறோம். நமஸாமவஸான பூமிம்- நமஸ்காரங்களுக்குத் தாத்பர்ய விஷயமான, த்வாமந்தரேண உம்மைத்தவிர, தா : - மற்ற அந்த தேவதைகள் தத் - அந்த நமஸ்காரத்தை, க்ரஹீதும் - பெற்றுக் கொள்வதற்கு, அநலம் - சக்தியற்றவர்கள். ஹி - ஏனென்றால், கச்சிதபி - உம்மைத் தவிர வேறு ஒருவரும் அந்த நமஸ்காரத்தை. சோரோபநீதம் - திருடனால் கொண்டுவந்து கொடுக்கப்பட்ட, கிரீடமிவ - அரசன் தரிக்கத்தகுந்த தலையாபரணமாகிய கிரீடத்தைப்போல, தாரயிதும் - தாங்களே வைத்துக் கொண்டு தரித்துக்கொள்ள, ந ஈஷ்டே – சக்தியற்றவர்கள்.

ருக்வேதத்தில் உள்ள ரிக் ஒன்று கவனிக்கத் தகுந்தது.

ஸ்தோமம் வோ அத்ய ருத்ராய சிக்வஸே க்ஷயத் வீராய நமஸா திதிஷ்டன | ஏபி : சிவ : ஸ்வவாம் ஏவ யாவபி . திவ : ஸிஷக்தி ஸ்வயசா : நிகாமபி :

இதன் பொருள் :— ஓ தேவர்களே ! உங்களைக்குறித்து நாங்கள் கொடுக்கும் நமஸ்காரங்களையும், ஸ்துதிகளையும் ருத்ர பெருமானுக்குக் கொடுத்து விடுங்கள். அவைகளுக்கு அவர்தான் உரித்தானவர். அவர் ஸர்வசக்தன், வீரபத்திரன் முதலிய மகா மகிமை வாய்ந்த விபூதியுள்ளவர், எங்கும் புகழ் பெற்றவர் ஈச்வரன் என்று அஸாதரணமாக அழைக்கப்படுகிறவர். அவரவர்கள் வேண்டும் பயன்களை தேவர்களுக்கும், உங்களைப் போன்றவர்களுக்கும் கொடுக்க வல்லவர். ஆதலால் மற்ற தேவதைகள் தமக்குப் பிறரால் கொடுக்கப்பட்ட ஸ்துதிகளையும் நமஸ்காரங்களையும் ஈச்வரனுக்கு கொடுத்துவிட வேண்டும். அவர்தாம் நமஸ்காரங்களுக்கு சொந்தக்காரர். (நமஸ்காரம் சிவன் சொத்து). இல்லையேல் திருடன் கொடுத்த கிரீடத்தைத் தரிப்பதால் திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டு கஷ்டம் அடைவது போல் தீங்கு நேரிடும் என்பது நன்கு உணர்த்தப்படுகிறது.

நமஸ்காரம் செய்யத் தகுந்தவர்தாம் துதிக்கத்தகுந்தவர். காளிதாஸ மகாகவியும்—பிறரை துதிக்காதவரும், அனைவராலும் துதிக்கப்படுகிறவரும், பிறரை நமஸ்கரிக்காதவர், ஆனால் அனைவராலும் நமஸ்காரம் செய்யப்படுபவர் என்று பரமேச்வரனை வர்ணித்திருக்கிறார்.

இந்த அபிப்ராயத்துடன் தான், தைத்ரீய ஆரண்யகத்தில், சிசுமார துதியின் கடைசியில் பூதாதி பதியாக துதிக்கப்பட்ட கச்யபருக்கு "ஸர்வம் தே நம:" என்று கடைசியில் நமஸ்காரம் செய்யப் படுகிறது.

ஆகாசாத் பதிதம் தோயம் யதா கச்சதி ஸாகரம் |
ஸர்வதேவ நமஸ்கார : கேசவம் ப்ரதி கச்சதி ||

என்று ப்ரதிதினம் நாம் செய்யும் ஸந்த்யா வந்தன முடிவு சுலோகத்தில் மற்ற தேவதைகளின் நமஸ்காரங்கள், நதிகள் மழைஜலம் சமுத்ரத்தை அடைவதுபோல் விஷ்ணுவை அடைவதாகப ப்ரசித்தமாகத் தெரிகிறது. ஆயினும் கீழ் சொல்லப் பட்ட மந்த்ரம் ஸோமப வ: ருக்வேதத்தில் உள்ளதால், இநத சுலோகம் ஸ்ம்ருதி என்ற புராணவசன மாதலாலும் சுருதிக்கு முரணபாடாக விருப்பதாலும் விரோதாதிகரண ந்யாயப்படி வேதம சொல்லும் அர்த்தம் தான் கொள்ளப் வேண்டும். அதற்கு விரோதமான, இந்த ஸ்ம்ருதி (புராண) வசனம் தள்ளப்பட வேண்டியது. மேலும் கேசவம் ப்ரதிகச்சதி என்பதறகு யாது பொருள் என்று விசாரிக்க வேண்டும். கேசவம என்ற பதம் யௌகிகம். 'க' பிரம்மா; 'அ' விஷ்ணு; 'ஈச' ருத்ரன் ஸம்ஹார கர்த்தா. இம்மூவரையும் தமக்கு உட்படுத்தி வைத்துக் கொண்டிருப்பவர் கேசவன். வ என்பது மத்வர்த்தீயமாகும். மும்மூர்த்திகளுக்குமீசனை நமஸ்காரங்கள் அடைகின்றன என்பது ப்ருகருத சுலோகத்திற்கு ஸமானார்த்தமானதால் விரோதமே கிடையாது.

## சுலோகம் 17

தஸ்மை நமோ பவது யத்ர நிஷீதஸீதி
ஸர்வம் நமஸ்ய மனயா து திசா மஹேச |
அப்யோஷதீ : ப்ரதி நமோ வயமாமநாமோ
தேஹீவ தேஹ மதிஷ்டஸி யேன ஸர்வம் ||

பரமசிவனைத் தவிர மற்றவர்களுக்குச் சொல்லப்பட்டிருக்கும் வேத புராணங்களிலுள்ள நமஸ்காரங்களை ஸமஞ்சஸமாக நயனம் செய்வதற்காகச் சொல்லப்படுகிறது.

## பதவுரை

யத்ர நிஷீதஸி – எங்கு அபிவ்யக்தமாக இருக்கிறீரோ, தஸ்மை - அந்த அதிஷ்டானத்துக்கும், நமோ பவது - நமஸ்காரம் இருக்கட்டும், இதி - என்ற, அனயா திசா - இந்த ந்யாயமாக, இந்த விதமாக, மஹேச! - பரமேச்வரனே!, ஸர்வம் எல்லா வஸ்துவும், நமஸ்யம் - நமஸ்கரிக்கத்தகுந்தது. யேன - எந்தக் காரணத்தால், தேஹம் - உடம்பில், தேஹீவ - ஜீவன் இருப்பதுபோல, ஸர்வம் - எல்லா வஸ்துவிலேயும், அதிதிஷ்டஸி - நீர் அந்தர்யாமியாக வீற்றிருக்கிறீரோ, தேன - அந்தக் காரணத்தால், ஓஷதீரபி ப்ரதி - அசேதனமான செடி கொடிகளுக்கும் வயம் - நாங்கள், நம: - நமஸ்காரத்தை, ஆமநாம :— அடிக்கடி சொல்லுகிறோம்.

ஓம் நமோ ப்ரம்மணே என்ற மந்திரத்தை, அத்யயனத்தின் முடிவில் மூன்று தடவை சொல்வதல்லவா அத்யயன ஸம்ப்ரதாயம். அதைத்தான் ஆமநாம : என்ற க்ரியாபதம், ம்நா தாதுவால் அறிவிக்கிறது. ப்ரஹதாரண்யக அந்தர்யாமி ப்ராம்மணம், ச்வேதாச்வதரோபநிஷத், அதர்வசிரஸ், வாயவீய ஸம்ஹிதை முதலிய க்ரந்தங்களில் ஈச்வரன் அத்தர்யாமியாக இருப்பது ப்ரமாணஸித்தம் என்பது விளக்கப்பட்டிருக்கிறது. ஆதலால்தான் மந்தாதிகாரிகளுக்கு. ப்ரதீகோபாஸ்தி விதிக்கப்பட்டிருக்கிறது, மஞ்சளில்கூட பிள்ளையார் பூஜை செய்யப்படுகிறது சிலாதாருமயமான பிம்பங்களுக்கும் ஷோடசோபசாரம் செய்யப்படுகிறது. ஆனால் உத்தேச்யம் பரமசிவனுக்குத்தான். உலகில் யஜமானன் தரித்த புஷ்பமாலையை ஆதரவுடன் வைத்துக்கொள்வது யஜமானன் திருப்தியை அளிப்பதும் இந்திரன் சிவநிர்மால்யத்தை அலக்ஷ்யம் செய்து யானை தலையில் வைத்துக் கசக்கியதால் துர்வாஸரால் சபிக்கப்பட்டதும், அதிஷ்டான பூஜையால், அந்தர்யாமி திருப்தியடைவதை அன்வயவ்யதிரேக ந்யாயத்தால் தெளிவாகக் காண்பிக்கிறதல்லவா ? ஆதலால் உம்முடைய அதிஷ்டானமானதால் உலகில் எல்லாம் நமஸ்கரிக்கத் தகுந்ததே.

## சுலோகம் 18

ஸர்வம் த்வயா ஜகத் அதிஷ்டிதமேவ மத்வா
ச்வான : ச்ருதௌ நமஸிதா : பதய : ச
தேஷாம் |
லோகே புனஸ்தவ மஹேச்வர ! பக்தியோகாத்
ஆரோபிதா அபி வயம் பஹுமான பாத்ரம் ||

இந்த ந்யாயத்தை அனுஸரித்துதான் சத ருத்ரீய மந்த்ரங்களில் அத்யந்த நிக்ருஷ்ட நாய் முதலிய ஜந்துக்களுக்கும் நமஸ்காரம் கூறப்பட்டிருக்கிறது.

### பதவுரை

ஸர்வம் ஜகத் - எல்லா உலகமும், த்வயா - உம்மால் அதிஷ்டிதம் – ப்ரவேசிக்கப்பட்டிருப்பது, மத்வைவ – நினைத்துதான் (உண்மை தெரிந்து) ச்வான ; - நாய்களும், தேஷாம் பதய : ச - அவைகளின் தலைவர்களும், நமஸிதா : - நமஸ்கரிக்கப் படுகிறார்கள். ருத்ரபாஷ்யத்திலும், வாயவீய ஸம்ஹிதையிலும் இக்கருத்து நன்கு விளக்கப்பட்டிருப்பது காண்க. மஹேச்வரா ! வயமபி - நாங்களும், தவ - உங்களுடைய பக்தியோகாத் - பக்தி செய்த ஸம்பந்தத்தால், லோகே - உலகில், பகுமானபாத்ரம் - கௌரவத்திற்கு, மரியாதை பெறுவதற்கு விஷயமான நிலையை ஆரோபிதா : புன : - அடையப் பெற்றிருக்கிறோம் அன்றோ.

சிவதத்வ நிருபணம், ஆதித்திய புராணம் வாயவீய ஸம்ஹிதை முதலிய க்ரந்தங்களில், ஈச்வர பக்தர்களையும் பூஜித்துப் போற்றவேண்டும் ; பக்த அபசாரம், அபராதம், கடவுள் அபராதத்தைக் காட்டிலும் அதிகம் என்று விளக்கப் பட்டிருக்கிறது காண்க.

## சுலோகம் 19

த்வேதா நமோ விம்ருசத : ப்ரதிபாதி லோகே
வேதேஷு வா விஷமலோசன நான்யரூபம் |
யத்தந்நமஸ்த்வயி ததீச்வரதா ப்ரயுக்தம்
த்வத்ஸந்நிகர்ஷ விஹிதம் யதனீச்வரேஷு ||

## பதவுரை

விஷமலோசன - முக்கண்ணனே, விம்ருசத: - யோஜிக்கும் மனிதனுக்கு, லோகே - புராணங்களிலும், வேதேஷுவா - வேதங்களிலும், நம: – நமஸ்காரம், த்வேதா - இரண்டு விதமாக, ப்ரதிபாதி - குறிக்கப்பட்டிருப்பது விளங்குகிறது அன்ய ரூபம் - மூன்றுவது ப்ரகாரமுள்ள நமஸ்காரம், ந - காணப்படவில்லை, யத் த்வயி நம : தத் - உம்மிடத்தில் செய்யப்படும் யாதொரு நமஸ்காம் உண்டோ அது, ஈச்வரதா ப்ரயுக்தம் - நீர் ஸர்வேச்வரன் என்ற உண்மையால் ஏற்பட்டது. அனீச்வரேஷு யத் நம : தத் - ஈச்வரனல்லாத மற்றவர்களிடத்தில் காணப்படும் யாதொரு நமஸ்காரம் உண்டோ அது, த்வத் ஸந்நிகர்ஷ விகிதம் - நீர் அந்தர்யாமியாகவிருப்பது பற்றியும், உமது பக்தியால் ஏற்பட்ட மஹிமை பற்றியும் வந்தது, என்ற இரண்டுவிதம்தான் நமஸ்காரம். மூன்றுவது விதம் கிடையாது.

## சுலோகம் 20

த்வத் ஸந்நிகர்ஷ க்ருத ஏவ நம : ப்ரயோக :
ப்ராயோ வஸீயஸி யவீயஸி த்ருச்யமான : |
ச்ரைஷ்ட ப்ரயுக்த இதி கல்ப்பயிதும் ந சக்யம்
அச்ரேயஸாமபி நமாம்ஸி நிதர்சிதாநி ||

நமஸ்க்ருத்ய ஹி வஸீயாம்ஸ முபசரந்தி

என்ற வேத வாக்யத்தால், நமஸ்காரம் முதலிய உபசாரங்களுக்கு ச்ரேஷ்டதா காரணமென்றல்லவா தெரிகிறது என்ற சங்கை நீக்கப்படுகிறது.

## பதவுரை

த்வத் ஸந்நிகர்ஷ க்ருத ஏவ நம : ப்ரயோக : - உம்முடைய ஸம்பந்தத்தால் ஏற்பட்ட நமஸ்கார ப்ரயோகம், ப்ராய : - அனேகமாக, வஸீயஸி - சிறந்த ப்ராம்மணர்களிடத்திலும், யவீயஸி - தாழ்ந்த நாய்களிடத்திலும், த்ருச்யமானஸ்ஸந் - காணப்படுகிற போது, ச்ரைஷ்டப்ரயுக்த இதி - சிறப்பால் ஏற்பட்டதென்று, கல்ப்பயிதும் - முடிவு செய்வது, ந யுக்தம்- தகுதியாகாது யத : ஏனென்றால், அச்ரேயஸாமபி - தாழ்ந்த நாய்களுக்கும்,

## சுலோகம் 18

ஸர்வம் த்வயா ஜகத் அதிஷ்டிதமேவ மத்வா
ச்வான : ச்ருதௌ நமஸிதா : பதய : ச
தேஷாம் |
லோகே புனஸ்தவ மஹேச்வர ! பக்தியோகாத்
ஆரோபிதா அபி வயம் பஹுமான பாத்ரம் ||

இந்த ந்யாயத்தை அனுஸரித்துதான் சத ருத்ரீய மந்த்ரங்களில் அத்யந்த நிக்ருஷ்ட நாய் முதலிய ஜந்துக்களுக்கும் நமஸ்காரம் கூறப்பட்டிருக்கிறது.

### பதவுரை

ஸர்வம் ஜகத் - எல்லா உலகமும், த்வயா - உம்மால் அதிஷ்டிதம் – ப்ரவேசிக்கப்பட்டிருப்பது, மத்வைவ – நினைத்துதான் (உண்மை தெரிந்து) ச்வான ; - நாய்களும், தேஷாம் பதய : ச - அவைகளின் தலைவர்களும், நமஸிதா : - நமஸ்கரிக்கப் படுகிறார்கள . ருத்ரபாஷ்யத்திலும், வாயவீய ஸம்ஹிதையிலும் இக்கருத்து நன்கு விளக்கப்பட்டிருப்பது காண்க. மஹேச்வரா ! வயமபி - நாங்களும், தவ - உங்களுடைய பக்தியோகாத் - பக்தி செய்த ஸம்பந்தத்தால், லோகே - உலகில், பகுமானபாத்ரம் - கௌரவத்திற்கு, மரியாதை பெறுவதற்கு விஷயமான நிலையை ஆரோபிதா : புன : - அடையப் பெற்றிருக்கிறோம் அன்றோ.

சிவதத்வ நிருபணம், ஆதித்திய புராணம் வாயவீய ஸம்ஹிதை முதலிய க்ரந்தங்களில், ஈச்வர பக்தர்களையும் பூஜித்துப் போற்றவேண்டும் ; பக்த அபசாரம், அபராதம், கடவுள் அபராதத்தைக் காட்டிலும் அதிகம் என்று விளக்கப் பட்டிருக்கிறது காண்க.

## சுலோகம் 19

த்வேதா நமோ விம்ருசத : ப்ரதிபாதி லோகே
வேதேஷு வா விஷமலோசன நான்யருபம் |
யத்தந்நமஸ்த்வயி ததீச்வரதா ப்ரயுக்தம்
த்வத்ஸந்நிகர்ஷ விஹிதம் யதனீச்வரேஷு ||

## பதவுரை

விஷமலோசன - முக்கண்ணனே, விம்ருசத: - யோஜிக்கும் மனிதனுக்கு, லோகே - புராணங்களிலும், வேதேஷுவா - வேதங்களிலும், நம: – நமஸ்காரம், த்வேதா - இரண்டு விதமாக, ப்ரதிபாதி - குறிக்கப்பட்டிருப்பது விளங்குகிறது அன்ய ரூபம் - மூன்ருவது ப்ரகாரமுள்ள நமஸ்காரம், ந - காணப்படவில்லை, யத் த்வயி நம : தத் - உம்மிடத்தில் செய்யப்படும் யாதொரு நமஸ்காம் உண்டோ அது, ஈச்வரதா ப்ரயுக்தம் - நீர் ஸர்வேச்வரன் என்ற உண்மையால் ஏற்பட்டது. அனீச்வரேஷு யத் நம: தத் - ஈச்வரனல்லாத மற்றவர்களிடத்தில் காணப்படும் யாதொரு நமஸ்காரம் உண்டோ அது, த்வத் ஸந்நிகர்ஷ விகிதம் - நீர் அந்தர்யாமியாகவிருப்பது பற்றியும், உமது பக்தியால் ஏற்பட்ட மஹிமை பற்றியும் வந்தது, என்ற இரண்டுவிதம்தான் நமஸ்காரம். மூன்ருவது விதம் கிடையாது.

## சுலோகம் 20

த்வத் ஸந்நிகர்ஷ க்ருத ஏவ நம: ப்ரயோக:
ப்ராயோ வஸீயஸி யவீயஸி த்ருச்யமான: |
ச்ரைஷ்ட ப்ரயுக்த இதி கல்ப்பயிதும் ந சக்யம்
அச்ரேயஸாமபி நமாம்ஸி நிதர்சிதாநி ||

நமஸ்க்ருத்ய ஹி வஸீயாம்ஸ முபசரந்தி

என்ற வேத வாக்யத்தால், நமஸ்காரம் முதலிய உபசாரங்களுக்கு ச்ரேஷ்டதா காரணமென்றல்லவா தெரிகிறது என்ற சங்கை நீக்கப்படுகிறது.

## பதவுரை

த்வத் ஸந்நிகர்ஷ க்ருத ஏவ நம: ப்ரயோக: - உம்முடைய ஸம்பந்தத்தால் ஏற்பட்ட நமஸ்கார ப்ரயோகம், ப்ராய: - அனேகமாக, வஸீயஸி - சிறந்த ப்ராம்மணர்களிடத்திலும், யவீயஸி - தாழ்ந்த நாய்களிடத்திலும், த்ருச்யமானஸ்ஸந் - காணப்படுகிற போது, ச்ரைஷ்டப்ரயுக்த இதி - சிறப்பால் ஏற்பட்டதென்று, கல்ப்பயிதும் - முடிவு செய்வது, ந யுக்தம் - சகுதியாகாது யத: ஏனென்ருல், அச்ரேயஸாமபி - தாழ்ந்த நாய்களுக்கும்,

நமாம்ஸி - நமஸ்காரங்கள், நிதர்சிதாநி - சதருத்ரீய மந்த்ரங்களில் காண்பிக்கப்பட்டன.

ஆதலால் உங்களுடைய ஸம்பந்தம்தான் நமஸ்கரிக்கப்படுவதற்குத் தகுந்த, அவ்யபசரிதமான காரணமாகும். சிறந்ததாக இருப்பது. தாழ்ந்த நமஸ்கரிக்கப்படும் இடங்களில்லாததால், வ்யபசரிதம் என்பது பற்றி நமஸ்கரிக்கப்படுவதற்குக் காரணமாகக் கொள்ள முடியாது என்று தாத்பர்யம். "நமஸ்க்ருத்ய ஹி" என்ற வேதம், உமது ஸம்பந்தத்தால் கிடைத்த சிறப்பை அநுவதிக்கிறது.

## ஸ்லோகம் 21

ச்ரைஷ்ட ப்ரயுக்தமபி நாம நமஸ் த்வதீயம்
ச்ரேஷ்டோஸி ய: க்ரதுபுஜாம் பதிரக்ரி
யாணும் |
ச்ரேஷ்ட ச்ருதோஸி பகவந்நவிசேஷதஸ்த்வம்
மந்த்ரேஷு க்ருச்ச்ர படிதேஷு ச ஸாம
காணும் ||

"துஷ்யது துர்ஜந:" என்பது ஓர் ந்யாயம். துஷ்டன் ஸந்தோஷப்படட்டும் என்று அவன் சொல்லும் கக்ஷியை அங்கீகரித்தே நமது கொள்கைக்குப் பாதகமில்லை என்று ஸாதிப்பது சாஸ்திரக்காரர்கள் வழக்கம். அந்த ந்யாயப்படி மேற்கொண்ட நமஸ்க்ருத்ய ஹி வஸீயாம்ஸம் என்ற வேதப்படி, சிறந்த நிலை தான் நமஸ்கரிக்கப்படுவதற்குக் காரணம் என்று அங்கீகரித்தாலும் நம் கக்ஷிக்கு பாதகமில்லை என்று சொல்லப்படுகிறது.

### பதவுரை

ச்ரைஷ்ட ப்ரயுக்தமபி நம: - சிறந்த மேன்மையால் ஏற்படும் நமஸ்காரமும், த்வதீயம் நாம - உம்மைச் சேர்ந்தது தான். அக்ரியாணாம் பதி: - பசுபதியாகிய, ய: - த்வம் - யாதொரு நீர், க்ரது புஜாம் - தேவர்களுக்குள், ச்ரேஷ்டோஸி - சிறந்தவராக இருக்கிறீரோ, பகவன் - பகவானே! ஸாமகாணும் - சாமவேதிகளினுடைய, க்ருச்ச்ரபடி தேஷு - க்ருச்ச்ர க்ரந்தத்தில் சொல்லப்படுகிற மந்த்ரேஷு - மந்த்ரங்களில், அவிசேஷத: - பொதுவாக (அபேக்ஷிகமன்னியில்) த்வம் - நீர், ச்ரேஷ்ட: - சிறந்தவர் என்று, ச்ருதோஸி - சொல்லப்பட்டிருக்கிறீர். "நமோ

ஜ்யேஷ்டாய ச்ரேஷ்டாய என்பது ஸாமவேதிகளின் க்ருச்சர க்ரந்தத்தில் படிக்கப்பட்டிருக்கும் மந்த்ரமாகும். நக்ஷத்ரேஷ்டியில் திருவாதிரை நக்ஷத்திர ப்ரகரணத்தில் சொல்லப்படும் ஆர்த்ரயா ருத்ர : ப்ரதமான. ஏதி ச்ரேஷ்டோ தேவானும் பதிரக்னியானும் என்ற மந்த்ரம். பசுபதி ஸர்வ தேவர்களுக்குள் சிறந்தவர் என்பதை விளக்குவது இங்கு ஆதாரமாகக் கொள்ள வேண்டும்.

## சுலோகம் 22

தேவாந்தரைஸ் ஸஹ நமஸ்துதி ஹூதய
ஸ்தே
தோஷாய நால மலமேவ விபர்யயாய |
புத்ரார்த்தின : சருவிதௌ ஸஹ சந்த்ர
மௌளே ||

ஸோமேன ஹூத மனுசச்ரும ருத்ரமக்னிம்

இவ்விதம் 9 முதல் 21 முடிய 13 ச்லோகங்களால் வேத, புராண வசனங்களைக் கொண்டும், சுருதி, ஸ்ம்ருதி லோக (புராணம்) ந்யாய ரீத்யா, நம : சேஷித்வம் என்ற லக்ஷணம் அதிவ்யாபதி, அவ்யாப்தி, அஸம்பவ ரூப தோஷ த்ரயமில்லாமல் பரமசிவனைக் குறிக்கும் என்பதை விளக்கி விட்டு,

இப்போது உத்தேச க்ரமமாக வந்த இரண்டாவது லக்ஷணமாகிய பகவத் பத வாச்யத்வம் என்பதை 29 முதல் 34½ வரை 6½ ச்லோகங்களால் உபபாதனம் பண்ணும் நோக்கத்துடன்

நடுவில் 22 முதல் 28 முடிய 7 ச்லோகங்களால் சிவபெருமான் வேதங்களில் பிறதேவதையுடன் சேர்க்கப்பட்டு துதிக்கப் படுவதோ. நமஸ்கரிக்கப்படுவதோ, கூப்பிடப்படுவதோ கிடையாது, தனியாகத்தான் துதி, நமஸ்காரம், ஆஹ்வானம் செய்யப் படுகிறார். ஏனெனில் ஸமாஸமாப்யாம் விஷமே பூஜாத : என்ற கௌதமாதி வசனப்படி, சிறந்தவரைத் தாழ்ந்தவர்களோடு ஒன்று கூட்டி மரியாதை செய்வது தகாது என்ற முறையுள்ளதல்லவா ? என்ற விஷயத்தை ப்ரதிபாதிப்பதால், சிவபெருமான் நம : சேஷித்வ லக்ஷணத்தையும் சிறப்பையும், ஸ்தாணு நிக்ந ந்யாயப்படி த்ருடப்படுத்துவதற்கு, இந்த ச்லோகம் ஆரம்பம்.

## பதவுரை

தேவாந்தரை : ஸஹ - மற்ற தேவதைகளோடு கூட, நம : ஸ்துதி ஹூதய : - நமஸ்காரம், ஸ்துதி, ஆஹ்வானங்கள் தே - உமமுடைய, தோஷாய - சந்தோஷம் பொருட்டு, நாலம் - சக்தியுள்ளவை அல்ல. விபர்யயாயைவ அலம் - கோபத்தின் பொருட்டேயாகும். சந்திரமௌளே - சந்திரனை சிரசில் தரித் திருப்பவரே ! புத்ரார்த்தின : - ஸந்ததியை விரும்புகிறவனுக்கு, சருவிதௌ - விதிக்கப்பட்ட சருவை த்ரவ்யமாகக் கொண்ட யாகத்தில், ஸோமேன ஸஹ - ஸோமதேவதையோடு கூட, ஹூதம் - கூப்பிடப்படுகிற, ருத்ரம - ருத்ரனை, அக்னிம் - அக்னி தேவதையாக, அனுசுச்ரும - நாங்கள் வேதங்கள் வாயிலாக அறிகிறோம். ஆதலால் ஸோமாரௌத்ர சருவில், தாங்கள் ஸோமனோடு சேர்ந்து பூஜிக்கப்படவில்லை. ஸோமனும் அக்னி யும் சேர்ந்து பூஜிக்கப்படுகிறார்கள்.

## விரிவுரை

மாத்வா ருத்ர சுக்ருதாமா நமோபி: - ருத்ரதேவதையே ! உம்மைப் பிறருடன் சேர்த்து நமஸ்கரிப்பதால் கோபிக்கச் செய்ய மாட்டோம். வ்ருஷப - வேண்டியதை வர்ஷிக்கும் ஸ்வதந்த்ர தெய்வமே ! துஷ்டுதீ - மற்றதேவதைகளுக்கு சமமாகச் செய்யும் ஸ்துதியாலும், மா சுக்ருதாம - கோபமூட்ட மாட்டோம் ; மா சுக்ருதாம ஸஹூதீ - வேறு தெய்வங்களோடு சேர்த்துக் கூப்பிடுவதாலும், (யாஜ்யா புரோனுவாக்யா - மந்த் ரங்களால் சேர்த்து யக்ஞத்துக்கழைப்பதாலும்) கோபிக்கச் செய்யமாட்டோம். இந்த மந்த்ரத்தின் அர்த்தம் நிருக்தத்தில் சொல்லப்பட்டிருப்பதாவது.

கிம் ச துல்ய நமஸ்காரை : தேவாந்தரகாமிபி : |
துஷ்டுத்யா ஸத்ருச ஸ்துத்யா ஸமாஹ்வான
கர்மணா ந வயம் சுக்ருதாம த்வாம் ஸர்வதேவ
நமஸ்க்ருதம் ||

சிவபெருமானையும் விஷ்ணுவையும் கூடச்சேர்த்து ஸமமாக பாவிப்பவன் சண்டாள துல்யனாகிறான். அவன் ஸங்கர ஜாதி யைச்சேர்ந்தவனென்பது அனுமானம் செய்யப்படலாம். சூர்ய னுக்கும் மினுமினுப் பூச்சிக்கும் போல, சிவனுக்கும் விஷ்ணுவிற்

கும் வித்தியாசமுளது என்றெல்லாம் தத்வம், சிவதத்வ நிரூபணம், ஆதித்ய புராணம், பராசர புராணம். ஸ்காந்தம் ஸூத ஸம்ஹிதை முதலிய க்ரந்தங்களில் விவரிக்கப்பட்டிருப்பதை காண்க. ஸ்ரீமத் பாகவதத்தின் 3, 4, 8-வது ஸ்கந்தத்தில் விஷமுண்டு உலகனைத்தையும் காத்த சிவபெருமானுக்கு நிகரான தெய்வம் கிடையாது என்று தெளிவாகக் கூறப்பட்டிருப்பதை. வைஷ்ணவர்களும். (முக்யமாக வைஷ்ணவப் பற்றுதல் உள்ள ஸ்மார்த்த ப்ராம்மணர்களும் தி.வி.அ.) நன்கு கவனித்து தத்துவமறிய வேண்டிய விஷயமாகும்.

ஸோமா ரௌத்ரம் சரும் நிர்வபேத் ப்ரஜாகாம :

என்பது சந்தானத்துக்காக விதிக்கப்பட்ட யக்ஞத்தைத் தெரிவிக்கும் வேதவாக்யமாகும்.

## சுலோகம் 23

அக்னிம் ப்ரக்ருத்யகலு ருத்ரபதம் ப்ரயுங்க்தே
தத் ப்ராம்ஹணம் பவதி யத்ர தயோஸ்
ஸஹூதி :
ஆஹ்வானமத்ர பவத : ப்ருதகேவ த்ருஷ்டம்
யத் ப்ராதரக்னிமிதி ஸூக்த வித : படந்தி ||

ஸோமா ரௌத்ர சரு விதியில் ஸோமனோடு சேர்த்துக் குறிக்கப்படும் ருத்ரன் தாங்கள் அல்ல அக்னிதான் என்பது அடுத்த இரண்டு அர்த்தவாத வாக்கியங்களால் தெளிவாகிறது.

"ஸந்திக்தேஷு வாக்யசேஷாத்" என்றல்லவா, ஜைமினியின் மீமாம்ஸ வாக்ய ந்யாயம் ?

அக்தா சர்க்கரா உபதம் தாதி என்ற விதியில் பொதுவாக நனைத்த கல்லை மேடைகட்ட உபயோகிக்க விதியிருந்தாலும், நெய்யில் நனைக்கப்பட்ட கல்லை மேடைகட்ட உபயோகிக்க வேண்டுமென்று விசேஷமான பொருள். தேஜோவை க்ருதம் என்ற துதி, பர அர்த்தவாதத்தினுல் கொள்ளப்படுவது வழக்கமல்லவா என்ற நோக்கத்துடன், அந்த சந்தேகத்தைத் தெளிய வைக்கும் அர்த்தவாதங்களை எடுத்துக் கூறுகிறார்.

### பதவுரை

யத்ர தயோ : ஸஹூதி :- எந்த ஸோமாரௌத்ர சருவில் ஸோமனுக்கும் ருத்ரனுக்கும் சேர்ந்து ஆஹ்வானம் காணப்படுகிறதோ, தத் - அந்த, ப்ராம்மணம் பவதி - அர்த்தத்தை நிர்ணயித்துக் கொடுக்கக் கூடிய அர்த்த வாக்யம் இருக்கிறது, இங்கு ப்ராம்மணபதம் விதி வாக்யத்தைக் குறிக்காது. அர்த்தவாத வாக்கியத்தைக் குறிக்கும். சேஷே ப்ராம்மண சப்த : என்று ஜைமினி விதிவாக்யத்திற்குப் போல, அர்ந்தவாத வாக்கியத்திறகும் பிராமமண பதம் வாசகம் என்பதை நிலை நாட்டியிருக்கிறா. அக்னிம் ப்ரக்ருத்யகலு - அக்னியைச் சொல்லியல்லவா, ருத்ரபதம் - ருத்ரன் என்ற பதத்தை. ப்ரயுங்க்தே - ப்ரயோகம் செய்கிறுர். அத்ர - தங்களைக் கூப்பிடுமிடத்தில், பவத : ஆஹ்வானம், - தங்களைக் கூப்பிடுவது. ப்ருதகேவ - தனியாகத்தான், த்ருஷ்டம் - காணப்படுகிறது. ஸூக்தவித : - ஸூக்தங்களை கண்டு பிடித்தவர்கள், யத் - எந்த ஸூக்தத்தை, ப்ராதரக்னிமிதி - ப்ராதரக்னிம் ப்ராதரிந்திரம் ஹவாமஹே என்பது முதலாக, படந்தி - படிக்கிறுர்களோ, அங்கு உம்மைத் தனியாக அல்லவா கூப்பிடுவது தெளிவாகக் காணப்படுகிறது.

## சுலோகம் 24

அக்ன்யாதிபிஸ்தவ மஹேச்வர ! ஹூதிசங்கா
மாபூத் இதி ப்ரக்ருதமப் யனுஷங்க யோக்யம் |
மந்த்ர : க்ரியா பத மபாஸ்ய பதாந்தரேண
த்வாமாஹ்வயந் நுதபதேன பினத்தி ரீதிம் ||

### பதவுரை

மந்த்ர :- ப்ராதரக்னிம், ப்ராதரிந்திரம் ஹவாமஹே என்ற மந்த்ரம், அக்ன்யாதிபி : அக்னி முதலிய தேவதைகளோடு, தவ - உம்மை, ஹூதிசங்கா கூப்பிடப்படும் ஸந்தேஹம். மாபூத் இதி - (ஜனங்களுக்கு) ஏற்படக்கூடாது என்ற நோக்கத்துடன், ப்ரக்ருதம் - முன்பு சொல்லப்பட்ட, அனுஷங்க யோக்யம் - பின் வாக்கியத்தில், ஸம்பந்தப் படுத்தத் தகுத்ததாயிருந்த போதிலும் க்ரியாபதம் - ஹவாமஹே என்ற

விணச்சொல்லே, அபாஸ்ய - விட்டுவிட்டு, உமது வாக்கியத்தில் அனுஷங்க ந்யாயப்படி, மற்றதேவதை வாக்யத்தில் போல சேர்த்துஸம்பந்தப்படுத்தாமல் விட்டு, பதாந்தரேண-உத ருத்ரம் ஹவேம என்றபடி, ஹவேம என்று மற்ருெரு தனி விணச் சொல்லால், த்வாம் - உம்மை, ஆஹ்வயந் - கூப்பிடுகிறதாய் இருந்து கொண்டு, உத பதேன - உத என்ற பதத்தினுல், அபி - என்ற சப்தத்திற்கு ஸமானமான அர்த்தத்தைக் கொடுக்கும் சக்திவாய்ந்ததினுல். ரீதிம் - உமக்கு தேவதாந்தர ஸாத்ருச்யத்தை, மஹேச்வரா ! பினத்தி - அடியோடு விலக்குகிறது. ருத்ரம் உத - ருத்ரணக்கூட, ஹவேம - தனியாகக் கூப்பிடுவதற்கு அவகாசம் அடைகிருேம். என்பது தாத்பர்யம்.

உத பதத்தால் பிரித்து, மற்றவர்களுக்கு அனுஷங்க ந்யாயப்படி, ஸம்பந்தப் படுத்தப்பட்ட க்ரியா பதத்தைத் தங்களுக்குச் சேர்க்காமல், தனியாக விணச்சொல் கூறி உம்மைக் கூப்பிட்டது, எங்கும் எப்பொழுதும். உம்மைத் தனியாகவே கூப்பிட வேண்டும், மற்ற தாழ்ந்த சிறு தேவதையுடன் சேர்த்துக் கூப்பிட்டு ஸ்துதி நமஸ்காரம் செய்வது தவறு; உமக்கு ப்ரதீயாகாது என்ற தத்வத்தை நன்கு விளக்குகிறது.

## சுலோகம் 25

ந்யாஸீ க்ருதம் வஸு பலா தமரை ரவாப்தும்
அன்வாகதோ ருதிதவானிதி ருத்ரமக்னிம் |
ருத்ராம்ஸ்த்வதுத்பவதயா மருதோ கணன்வா
ருத்ராவணேன ச பவந்த மவைமி ருத்ரம் ||

அக்னியை ருத்ர சப்தத்தால் சொல்வதற்கு காரணம் விளக்குகிருர்.

### பதவுரை

அமரை : - தேவர்களால், ந்யாஸீ க்ருதம் - நியாஸமாக ஒப்படைக்கப்பட்ட, வஸு - ஸொத்தை பலாத் - பலாத்காரமாக, அவாப்தும் - அடைவதற்கு அன்வாகத: - பின் தொடர்ந்து வரப்பட்டவன், ருதித வான் - அழுதான் அல்லது அழச்செய்தான், இதி - என்ற காரணத்தால், அக்னிம் - அக்னி தேவதையை, ருத்ரம் - ருத்ர சப்தத்தால் சொல்லப் படுவதாக, அவைமி - அறிகிறேன். மருத: - ஸப்த மருத்துக்

களையும், கணன்வா - உமது சபையோர்களான பார்ஷதர் களையும், த்வதுத்பவதயா - உம்மிடமிருந்து உண்டான காரணத் தால், "கார்ய காரணயோ ரபேத ந்யாயேன" குடத்தை மண் என்பதுபோல, ருத்ரான் - ருத்ர சப்தவாச்யர்களாகவும், பவந்தம் - உம்மை, ருத் த்ராவணேன - துக்கத்தையும பாபத் தையும் நசிக்கச் செய்வதால், ருசி என்ற வேதஸ்வரூபமான சப்தத்தைக் கலப்பத்தின் முதலில் ப்ரம்மாவிற்கு ததாதி கொடுப்பதாலும், ருத்ரம் - ருத்ர சப்தவாச்யனுக. அவைமி - அறிகிறேன்.

## சுலோகம் 26

யக்ஞேபி ருத்ரபதமாருண கேதுகோக்தம்
தத் சப்த மீச்வர! ததீயமபி ஸ்மரந்தி |
யத்தத் ப்ரதேசகத ருத்ர பதாவகாசே
யக்ஞஸ்ய சப்த மனுசுச்ரும ஸாமகேப்ய: ||

யக்ஞே அபி - யாகம் என்ற அர்த்தத்திலும், ருத்ர பதம் - ருத்ரம் என்ற பதமானது, ஆருண கேது கோக்தம் - ஆருண கேதுகம் என்ற சயனத்திலும், சூர்ய நமஸ்காரத்திலும் உப யோகிக்கப்படும மந்த்ரங்கள் அடங்கிய தைத்ரீய ஆரண்யகம் முதல் ப்ரச்னத்தில் சொல்லப்பட்டிருக்கிறது ஈச்வர - பரமேச் வரனே! ததீயமபி - அவனுடைய பொருளையும், தத்சப்தம் - அவன் பெயரால் சொல்லப்படுவதாக, ஸ்மரந்தி - பெரியவர்கள் கருதுகிருர்கள். ஸ்வஸ்வாமி பாவ ஸம்பந்தந்தால், ராஜாவைச் சேர்ந்தவர், ராஜாவென்று சொல்லப்படுவது ஸஹஜமே. அது போல ருத்ரனை ஸ்வாமியாகக்கொண்ட யக்ஞம் ருத்ர சப்தத்தால் சொல்லப்படுகிறது. ஸாமவேத ச்ருதி பர்யாலோசனுயாம் யக் ஞம் ருந்ர சப்தவாச்யமாக விருப்பது, ருத்ரஸ்வாமிகம் என்ப தால் என்ற அர்த்தம் தெளிவாகிறது. யத் - எத்தக் காரணத் தால், தத்ப்ரதேசகத ருத்ரபதாவகாசே - அந்த ஆருண கேதுகம் என்ற பெயருள்ள யஜுர் வேத ஆரண்ய பாகத்திலுள்ள ருத்ர த்தின் ஸ்தானத்தில், ஸாமகேப்ய: - ஸாமவேதம் கரை கண்டவர்களிடமிருந்து, யக்ஞஸ்ய சப்தம் - யக்ஞஸ்ய என்ற சப்தத்தை, அனுசுச்ரும - கேட்கின்ரோம்.

ஒரே அர்த்தத்தைத் தெரிவிக்கும் சுருதிகளில், பதபேதமாக ஓரிடத்தில் யக்ஞ சப்தமும், மற்ருேரிடத்தில் ருத்ரபதமும் கூறப்

படுவதால், கதிஸாமன்ய ந்யாயத்தால் இரண்டு பதங்களும் ஒரே பொருளைக் குறிக்கின்றன என்பது ஏற்படுமாதலால், யக்ஞத்தை ருத்ர சப்தம் யஜுர் வேதத்தில் குறிப்பிடுவது திண்ணம்.

## சுலோகம் 27

ஸந்தாப்ய ரோதயிதரி ப்ரஸபம் ஜனும்
ஆஹுர் ஜ்வரேபி விஷமேக்ஷண! ருத்ர
சப்தம் |
ரௌத்ரஞ்ச தத்ப்ரக்ருதிகம் ப்ரதிரூபகம் வா
சப்தாந்தரம் பவதி வாயஸ சப்த கல்ப்பம் ||

ருத்ர பதம் ஆருவது அர்த்தமாக, கடும் ஜ்வரத்தையும் குறிக்கும்.

### பதவுரை

விஷமேக்ஷண — முக்கண்ணனே! ப்ரஸபம் - பலாத்காரமாக, ஸந்தாப்ய - தபிக்கச் செய்து, ஜனும் - ஜனங்களை, ரோதயிதரி - அழச்செய்கிற, ஜ்வரே அபி - ஜ்வரம் என்ற அர்த்தத்திலும், ருத்ர சப்தம் - ருத்ரம் என்ற பதத்தை ஆஹு: - ப்ரயோகம் செய்கிறார்கள். ரௌத்ரம் ச - ரௌத்ரம் என்ற பதம் தத்ப்ரக்ருதிகம் - இந்த ஜ்வரத்தைக் குறிக்கும் ருத்ர சப்தத்தின் மேல், தஸ்யேதம் என்ற பாணினி ஸூத்ரப்படி, அண் ப்ரத்யயம் வந்ததால் ஏற்பட்ட சப்தமாகக் கொள்ள வேண்டும். ப்ரதிரூபகம் சப்தாந்தரம் வா பவதி அல்லது ரௌத்ரசப்தம் தத்தித ப்ரத்யயம் வராமலே, தத்தித ப்ரத்யயாந்தம் போலத் தோன்றும் வேறொரு புதிய சப்தமாகவும் ஆகலாம், வாயஸா சப்தகல்ப்பம் - வாயஸ, ராக்ஷஸ முதலிய சப்தங்கள் வயஸ், ரக்ஷஸ் பதத்தின் மேல், அண் ப்ரத்யயம் வைத்து வந்த, தத்திதாந்த சப்தங்களாகவும் கருதப்படுகின்றன. அல்லது அண் என்ற தத்திதம் வராமல், பூராவும் தத்திதாந்தம் போலத் தோன்றும் வேறு பதங்களாகவும் கருதப்படுகின்றன. அவை போல்தான் ரௌத்ரமென்ற சப்தமும், கடுமையான ஜ்வரத்தை ருத்ரசப்தம் சொல்வதால், அதிலிருந்து வந்த கடுமையைத் தெரிவிக்கிறது என்பது யுக்தம்.

## சுலோகம் 28

ஸந்த்யேவ தத்திதபத ப்ரதிரூபகாணி
பூரிணி பாகவத ஸாத்வத ஸந்நிபாநி |
ஸ்யாத் தாத்ருகேவ பகவானிதி சப்தரூபம்
ஷாட்குண்யஹேதுகமபி த்வதுபைதி நாந்யம் ||

### பதவுரை

தத்திதபத ப்ரதிரூபகாணி - தத்திதாந்தம் போலத் தோன்றும் அகண்ட பதங்கள், பாகவத ஸாத்வதஸந்நிபாநி – பாகவத ஸாத்வத, மைத்ர முதலிய, பூரிணி - பலபதங்கள், ஸந்த்யேவ- இருக்கின்றன. பகவானிதி சப்த ரூபம - பகவான் என்கிற சப்த ரூபமும், தாத்ருகேவ ஸ்யாத் - அப்படியே தத்திதாந்த ப்ரதிருபகம் அகண்ட பதம் என்றே இருக்கவேண்டும். பவான் என்பதுபோல பகவான் என்பது பூஜ்ய பதம் ஆனதால், ரூட பதமாகக் கொள்ளவேண்டும் தனவான் என்பதில்போல மது பூ ப்ரத்யயம் வரவேண்டிய ஆவச்யகமில்லை. உம்மிடமே ஈச்வர சப்தம் ரூடமென்று நிருபிக்கப் பட்டதால், பூஜ்யதையும் ஈச்வரனுகிய உமக்காகையால், பகவான் சப்தம் முக்கியமாக உமக்குத் தான் பொருந்தும். அப்படி தனவான் என்பது போல, பக: அஸ்யாஸ்தீதி பகவான் என்று வ்யுத்பத்தி செய்து, தத்திதாந்தமாகக் கொண்டு, ஆறுகுணங்கள் உடையவரைக் குறிக்கும் யௌகிக சப்தமாகக் கொண்டாலும், ஷாட்குண்யஹேதுகமபி, அந்த பகவான் என்ற சப்தரூபம், த்வத் - உம்மைத் தவிர, அன்யம் - மற்றவரை, ந உபைதி - அடையத்தக்கதில்லை குறிக்கத்தல்ல.

(1) தேவாஸுரர்கள் யுத்தம் நேர்ந்ததும் தேவர்கள் தம் ஸொந்த த்ரவ்யங்களை அக்னியிடம் கொடுத்து, ந்யாஸமாகச் செய்து விட்டுச் சென்றதாகவும், பிறகு ஜயம் பெற்றுவந்து கேட்க, அக்னி கொடுக்கமனமில்லாமல் ஓட, பின்பற்றப்பட்டு அழுததாகவும் தேவர்களை அழச் செய்ததாகவும், வரலாறு யஜுர் வேதத்தில் கூறப்பட்டுள்ளது. அதனால் அக்னி சில இடங்களில் ருத்ர பதத்தால் குறிக்கப் படுகிறார்.

(2) ருத்ரனிடமிருந்து உண்டானதால், மருத்துக்கள், பார்ஷதர்கள் தந்தைபெயரால் கூறப்படுகிறார்கள்.

(ஆத்மாவை புத்ர நாமாஸி என்ற ந்யாயப்படி)

(3) துக்கத்தையும் பாபத்தையும் அழிப்பதால், (4) ப்ரம்மாவிற்கு வேதத்தை உபதேசிப்பதால், நாதத்தால் ஸகல உலகத்தை ஸந்தோஷப்படுத்துவதால் நாதஸ்வரூபி என்பதால் ஓங்காரத்தால், வேதசப்தத்தால், ஜபிப்பவர்களுக்கு இஷ்டத்தைக் கொடுப்பதால், கஷ்டப்படும் ஜனங்களைப் பார்த்து, தந்தைபோல தயையால் தான் கஷ்டப் படுவது போல் அழுவதால், ப்ரளய காலத்தில் ஸம்ஹார மூர்த்தியைப் பார்த்து உலகம் அழுவதால் மகாதேவோ மர்த்யான் ஆவிவேச என்றபடி கத்திக் கொண்டு, ஜனங்கள் உட்ப்ரவேசித்து ஆயுளை முடிப்பவர் என்றதால் மோகாத்மக மாயையை நீக்குவதால் பக்தர்களின் ஸம்ஸார துக்கத்தை விலக்குவதால் என்ற 9 விதமான வ்யுத்பத்தியும் ஒருங்கே பொருந்துவதால் ருத்ரசப்தத்திற்குப் பரமேச்வரன் முக்கிய பொருளாவார்.

(5) ருத்ராஸ்ய ஸ சிர: ப்ரதிததாதி என்று யக்ஞத்தில் ருத்ர சப்தப்ரயோகம்.

(6) ருத்ர ஏனம் பூத்வா ஹந்யாத் என்று வாஸ்தோஷ்பதி ஹோமம் செய்யாதவனுக்குக் கடுமையான ஜ்வரம் ஸம்பவிக்கும் என்ற இடத்தில் ருத்ரசப்தம் ஜ்வரவாசகம்: ரௌத்ர சப்தம் கடுமை என்ற அர்த்தத்தைக் குறிப்பது இதிலிருந்துதான் தத்திதாந்த சப்தமானதென்று, ஆறு அர்த்தங்கள் ருத்ர சப்தத்துக் கூறப்பட்டன.

## சுலோகம் 29.

ஐச்வர்ய மக்ர்ய மனுயாதி மதீ ச லக்ஷ்மீ:
ஞானம் ச வீர்ய யசஸீ ச விராகதா ச |
ஏதே குணா: ஷடபி தே பகஸம்க்ஞ யோக்தா:
ஸந்தீத்யனேன பகவந்! பகவாநஸி த்வம் ||

இவ்விதம் முதல் சுலோகத்தில் குறிக்கப்பட்ட ஐந்து லக்ஷணங்களில், நம: சேஷித்வம் என்ற முதல் லக்ஷணத்தை அதிவ்யாப்தி இல்லாததாக நிருபணம் செய்து, அஸாதாரணமாக நிலை நாட்டியபிறகு, இரண்டாவது லக்ஷணமான பகவத்பதவாச்யத்வம் என்றதை, அஸாதாரணமாக சிவபெருமானுக்கே உரித்து என்று இதுமுதல் 6½ சுலோகங்களால் விளக்குகிறார். (29—34½).

## பதவுரை

அக்ர்யம் - சிறந்த, ஐச்வர்யம் - ஈசத்தன்மையும் அநுபாதிமதீ - காரணத்தால் ஏற்படாத, ஸ்வபாவகமான, லக்ஷ்மீ : ச ஸம்பத்தும், ஞானம் ச - அறிவும், வீர்ய யசஸீ ச - பலமும் புகழும், விராகதா ச - வைராக்யமும், இந்த உலகிலுள்ள பயன்களில் ஆசையற்றிருத்தல், எதே - இந்த ஷட்பிகுணு : - ஆறு குணங்களும், பக ஸம்க்ஞா - பக என்ற பதத்தால் உக்தா : சொல்லப்படுகின்றன தே - அவைகள், ஸந்தி - உம்மிடத்தில் இருக்கின்றன இத்யனேன - என்ற காரணத்தால், பக்வந் - பெரியவரே, த்வம் - நீர், பகவானஸி - பகவத் சப்த வாச்யராக இருக்கிறீர்.

## சுலோகம் 30

ஐச்வர்ய மீசவரபத ச்ருதி ருக்ர சப்தோ
வீர்யம் யச : சிவபதம் ச தவாபிதத்தே |
ஸர்வக்ஞ காம ரிபு சப்த ஸமர்த்திதௌ ச
ஸார்வக்ஞ ராக விரஹௌ பவத : புராரே ||

மேற்கூறிய ஈசத்வம் முதலிய ஆறு குணங்கள் சிவபிரானிடத்து உளளதற்கு ப்ரமாணம் சொல்லப்படுகிறது.

## பதவுரை

ஈச்வரபத ச்ருதி : ஈச்வரன் என்ற பதமாகிய சுருதியானது, (இங்கு சுருதியென்ருல் வேதமென்பது பொருள் அல்ல, பூர்வ மீமாம்ஸையில் விநியோஜக ப்ரமாணங்கள் ஆறில் முதலாவதாகக் கூறப்பட்ட ஜைமினி பரிபாஷைப்படி, நிரபேக்ஷா . . . சப்த : ச்ருதி : - எந்த சப்தத்தால் கேட்டவுடனே பிறர் ஸந்தர்ப்பாதிகள் உதவியில்லாமல் அர்த்தம் அறியப்படுகிறதோ, அது சுருதி என்பது கருத்து) ஈச்வரன் கோயில் என்ருல் ஸந்தர்ப்பம் தேவையில்லாமல் சிவபெருமான் ஆலயம்தான் அர்த்தமாகுமல்லவா).

தவ ஐச்வர்யம் - உம்மிடமிருக்கும் ஈசத்வத்தை அபிதத்தே - சொல்லுகிறது. உக்ரசப்த : - உக்ர என்ற சப்தம் (லிங்கவிதமாக,) வீர்யம் - பலத்தையும் சிவபதம். யச : ச - புகழையும், அபிதத்தே - சொல்லுகிறது. புராரே - த்ரிபுரஸம்ஹாரக் கடவுளே, (ஸ்தூல ஸூக்ஷ்ம, காரண சரீரங்களை எரித்து, ஞானத்

தால் முக்தியளிப்பவரே!) ஸார்வக்ஞராக விரஹௌ - ஸகல அறிவும், ஆசையற்றலும், ஸர்வக்ஞ சப்த - ஸர்வக்ஞ சப்தத்தாலும், காமரிபு சப்த - காமரிபு - (காமனை எரித்தவர்) என்ற சப்தத்தாலும், ஸமர்த்திதௌ பவத: - நிலைநாட்டப்பட்டவைகளாக இருக்கின்றன.

உக்ர என்ற பதம் குரூரன் என்ற பொருளைத் தராது பலமுள்ளவன், பிறரால் அவமதிக்கப்படாதவன் என்ற பொருளைத்தான் குறிக்கும்

உக்ரோஸ்யுக்ரோஹம் ஸ ஜாதேஷு பூயாஸம்

என்ற பிரார்த்தனை காணப்படுகிறது அங்கு நீங்கள் பிறரால் அவமதிக்கப்படாமல் பலவானாக இருக்கிறீர். நானும் அவ்வண்ணமே, பந்துக்களால் அவமதிக்கப்படாமல் பலவானாக இருக்க வேண்டும் என்று பிரார்த்திப்பதுதான் பொருத்தமானது.

"உக்ரேப்ய: கச்சித் ஓஜீயாந்"

என்ற மற்ற ச்ருதியும், ஓஜீயாந் - பலமுள்ளவர்களுக்குள் மிகுந்த பலமுள்ளவர் என்ற பொருளைத்தான் கொடுக்கிறது.

அதவா, அசேஷ கல்யாண குணைக கன ஈச்வர: |
சிவ இத்யுச்யதே ஸத்பி: சிவதத்வார்த்த வேதிபி: ||

என்ற புராண வசனப்படி, ஸமஸ்த கல்யாணகுண கூட்டத்தைச் சொல்லும் பதம் சிவபதம் என்பது திண்ணம். அக்கூட்டத்தில் புகழும் அடங்கியபடியால், சிவபதம் புகழைச் சொல்வதாக மூலத்தில் கூறப்படுகிறது.

இந்த்ரியம் முதலிய உதவி அபேக்ஷையில்லாமல் எல்லா விஷயத்தையும் அறியும் சக்தியுடைமை ஸர்வக்ஞத்வம் எனப்படும். நமக்குக் கண் அபேக்ஷை இல்லாமல், ரூபஞானம் வருவதில்லை. ஸாதன அபேக்ஷையில்லாமல், ஸகல ஞானமும் இருக்க வேண்டும் அதுதான் ஸார்வஞ்யம் என்பது வாயவீயஸம்ஹிதையில் தெளிவாக கூறப்பட்டிருக்கிறது. ஈச்வரனை நிலைநாட்ட எழுதப்பட்ட ந்யாய குஸுமாஞ்சலி என்ற கிரந்தத்தில் ஸ்ரீமான் உதயனாசார்யார் அவர்களும் ஈச்வரனுடைய ஸார்வஞ்யத்தை இவ்விதமே வர்ணித்துள்ளார்.

ஸாக்ஷாத் காரிணி, நித்ய யோகினி

பரத்வார அனபேக்ஷ்ய ஸ்திதௌ பூதார்த்தானுபவே என்று ஆரம்பித்து, தன்மே ப்ரமாணம் சிவ: என்று, சிவனே ஸர்வக்ஞர் என்று அபிப்பிராயத்துடன் முடித்திருக்கிறார்.

## சுலோகம் 31

அர்த்த : ச்ரியா சிவ ந கோபி விரஜ்யதஸ்தே
ச்ரேஷ்டஸ்தயா த்வமஸி தாசதயீபிருக்த : |
லப்தும் ச்ரியம் ஜனிம சாரு விசித்ரரூபம்
அப்யர்ச்சிதம் தவ மருத்பி ருதாஹரந்தி ||

ஆறுகுணங்களில் ச்ரீ என்ற குணமுள்ளவராக சிவபெருமான் கூறப்படவில்லையே. வாஸுதேவனல்லவா ஸ்ரீபதி எனப்படுகிருர் என்ற சங்கை ஏற்பட, ஆத்மானந்த த்ருப்தனுகிய சிவபெருமானுக்கு விஷயங்களில் வெறுப்பு இருந்த போதிலும், ஸ்ரீமான் என்ற பதம் சுருதிகளில் காணப்படாவிடினும், ச்ரியா ச்ரேஷ்ட : என்ற அடைமொழி சிவபெருமானுக்குக் காணப்படுவதாலும், மற்றெல்லாரும் ச்ரீயை அடைய விரும்பி சிவபெருமானைப் பூஜித்து, அஷ்டைச்வர்யங்களை அடைந்தார்களென்று காணப்படுவதாலும், சிவபெருமான் ஸ்ரீமான் என்பதில் ஸந்தேகமில்லை, என்று இந்த ச்லோகத்தில் விளக்குகிருர்.

### பதவுரை.

*சிவ* - சிவபெருமனே ! *விரஜ்யத* :— உலக விஷயங்களில் முற்றிலும் பற்றுதல் இல்லாத, *தே* - உமக்கு *ச்ரியா* - லக்ஷ்மியால், *ந கோப்யர்த்த* :— ஒரு பயனுமில்லை. *தாசதயீபி* :— ருக் வேதத்திலுள்ள ருக் மந்த்ரங்களால் *தயா ச்ரேஷ்ட* :— அந்த லக்ஷ்மியால் நிரம்பியவராக, சிறந்த லக்ஷ்மீவானுக, *த்வம்* நீர், *உக்தோஸி* - சொல்லப்பட்டிருக்கிறீர்.

*ச்ரேஷ்டோ ஜாதஸ்ய ருத்ர : ச்ரியாஸி*
*தபஸ்தமஸ் தபஸாம் வஜ்ரபாஹோ—*

என்பதல்லவா ருக்வேத மந்த்ரம். இந்திர உருவமெடுத்து ஆவிர் பவித்த தாங்கள், *தபஸாம்* - ஸ்தோத்ரம் செய்யப்படுகிறவர்களுள், *தபஸ்தம* :— அதிகமாக ஸ்துதிக்கப்படுபவர், *ச்ரியா ச்ரேஷ்டோஸி* - ஸம்பத்துள்ளவர்களுக்குள்ளும் சிறந்தவராக இருக்கிறீர். அநித்யமான உலக ஸுகத்தைத் துறந்து, ஸஞ்சல லக்ஷ்மியை வேண்டாதிருப்பதல்லவா நித்யமான ஸ்ரீ ஆகும். இது பற்றியே

*ஸா ஹி ச்ரீ ரம்ருதா ஸதாம்* என்று, வேதங்கள் தான் அழியா ஸம்பத்தென்பது பொருந்தும். வேதத்ரய ப்ரதிபாத்

யஞன ஈசானன் தான் அழியாத ஸம்பத்துள்ளவன் என்பது தாத்பர்யம். ச்ரியம் லப்தும் : ஸம்பத்தை யடைவதற்கு, விசித்ர ரூபம் - விசித்ர உருவமுள்ள, சாரு - அழகான, மங்களகரமான, தவ - உம்முடைய, ஜனிம - மகாலிங்கரூபமாக ஆவிர்ப்பவித்த அருணசலேச்வர, மத்யார்ச்சுனேச்வர உருவத்தை, மருத்பி :— தேவகணங்களால், அப்யர்ச்சிதம் - நன்கு பூஜிக்கப்பட்டதாக, உதாஹரந்தி - சொல்லுகிறுர்கள்!

மகாலிங்க மூர்த்தியை ஆராதித்ததால் ஸகல தேவர்களும் தங்கள் பதவிகளையும், ஸம்பத்தையும் அடைந்தார்கள் என்பது பிரஸித்தம். அதிகம் சொல்வானேன். வாஸுதேவன் ருக்மிணி முதலிய மகிஷிகளை மணந்ததும், ஸாம்பன், சம்பு, ப்ரத்யும்னன் முதலிய புத்ரர்களை யடைந்ததும், உபமன்யு மகர்ஷியின் பிரஸாதத்தால் கிடைத்த உபதேசத்தின் படி, சிவபெருமானைப் பூஜித்து உபாஸித்ததால்தான் என்ற விஷயம் அனுசாஸன பர்வத்தில் கூறப்பட்டுள்ளது.

ருக்வேதம் :— தவ ச்ரியே மருதோ மர்ஜயந்த : ருத்ர யத்தே ஜனிம சாரு சித்ரம் பதம் யத் விஷ்ணோருப மந்திதாயி தேன பாஸி குஹ்யந் நாமகோனும்.

ருத்ர - ஹே பரமேச்வரா! மருத :— தேவர்கள், யத் - யாதொரு பிரஸித்தமான, தே - உம்முடைய, சாரு சித்ரம் - மங்களகரமான, ஆச்சர்யமுண்டு பண்ணும், ஜனிம - மகாலிங்க ப்ராதுர்பாவத்தை, மர்ஜயந்த : - 12 சுபத்ரவ்யங்களால், சதருத்ரீய மந்த்ர ஜபத்துடன் அபிஷேகம் செய்தார்கள். (எதற்காக) ச்ரியே - லக்ஷ்மியை அடைவதற்காக எந்த ப்ராதுர் பாவத்தைப் பூஜித்தார்கள் ?

விஷ்ணோ : பரமம் பதம் லிங்கம் - என்பது ஸனத்குமாரஸம்ஹிதையில் விஷ்ணுவரல் சொல்லப்பட்ட வசனம். விஷ்ணோ : பரமம் பதம் என்ற சொற்றொடர் மகாலிங்க மூர்த்தியைக் குறிப்பதாக, விஷ்ணுமூர்த்தியால் கூறப்பட்டது எனில், தன்னையே குறிக்க வில்லை யென்பது விளங்குமல்லவா ? மேலும் ருத்ர என்ற விளி வேற்றுமை, விஷ்ணுவை பூஜித்தார்கள் என்ற அர்த்தத்துடன் பொருந்தாது.

தத் பதம் லிங்கமாக்யாதம் சிவோ யேனைவ த்ருச்யதே
தல்லிங்கஸ்யாபி மாகாத்ம்யம் யுவாம் த்ரஷ்டும்
ந ஹி க்ஷமௌ,
ஸூரயோ யத் ப்ரபச்யந்தி தத் விஷ்ணோ : பரமம் பதம்.

தத்விஷ்ணோ : பரமம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய :
திவீவ சக்ஷுராததம்.
தத்விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாம்ஸ : ஸமிந்ததே
விஷ்ணோர் யத் பரமம் பதம் ||

முதலிய சுருதிகளும், உப ப்ரும் ஹண, புராண வசனங்களும், விஷ்ணோ : பரமம் பதம் என்ற சொற்ருெடர், வ்யாபகமான, சிறந்த, பிரம்ம விஷ்ணுக்களும் காண்பதற்கரிய, மகாலிங்க, ஜ்யோதிர்மய மூர்த்தியைக் குறிப்பிடுவதாக நன்கு விளக்கு கின்றன.

## சுலோகம் 32

ஸத்யம் க்ஷமா த்ருதி ரதிஷ்டிதிராத்மபோத :
ஸ்ருஷ்டிர் விராக தபஸீ மதிரீச்வரத்வம் |
நத்வத் வியந்தி ந கதாசிதபைதி தர்ம :
கிந்தந் நயத் பவதி தே குண ஸம்மதேஷு ||

வாசஸ்பதி மிச்ரர் என்ற வேதாந்த நிபுணர் வேதத்தையும் வேதப் பொருளான சிவபெருமானையும், சிலேடையாக அடை மொழி கொடுத்து வணங்குகிருர்.

ஷட்பி ரங்கை ருபேதாய விவிதை ரவ்யயைரபி |
சாச்வதாய நமஸ்குர்மோ வேதாய ச பவாய ச ||

வேதத்தின் உண்மை விளங்க சிக்ஷா, வ்யாகரணம் சந்த :, நிருக்தம, ஜ்யோதிஷம், கல்ப : என்ற ஆறு அங்கங்கள் தேவை. ஈச்வரனுடைய ஆறு குணங்கள் (அங்கங்கள்) ஆவன.

ஸர்வக்ஞதா த்ருப்தி ரனுதி போத :
ஸ்வதந்த்ரதா நித்ய மலுப்தசக்தி :
அனந்தசக்தி : ச விபோர் விதிஞா :
ஷடாஹுரங்கானி மஹேச்வரஸ்ய ||

அவ்விதமே அழியாத, அவ்யயமான மற்றும் பத்து குணங்கள் கூறப்படுகின்றன.

ஞானம் வைராக்ய மைச்வர்யம் தபஸ் ஸத்யம்
க்ஷமா த்ருதி :
ஸ்ரஷ்ட்ருத்வ மாத்ம ஸம்போதோ ஹ்யதிஷ்டா
த்ருத்வமேவ ச ||
அவ்யயாளி தசைதானி நித்யம் திஷ்டந்தி சங்கரே |

ஆதலால் ஸகல குணங்களுக்கும், (சமுத்ரம்போல சிறந்த பதார்த்தங்களுக்கு) அழியா இருப்பிடமான, ரத்ஞகரன் சிவ பெருமான் தான்.

## பதவுரை.

ஸத்யம் - தர்மத்தையும், ஸத் வித்யையையும் தெரிவிக்கும், பிரம்ம ப்ரதிபாதகமான வேதவாக்யம். (சிவ பெருமான் மூச்சு போல் வெளிவந்தமையால், அவருக்குச் சொந்தமாக, அவருடைய அழியா குணமாக சொல்லப்படுகிறது.) க்ஷமா - பக்தர்களின் அபராதத்தைப் பொறுத்தல். ஆசுதோஷி என்ற பெயர். சிவபெருமானுக்கே உரித்து ; வணங்குவதால் உடன் ஸந்தோஷமடைகிறவர் ; உடன்வரம் அளிப்பவர். இவ்விதம் தான் பாணினி வ்யாகரணத்தில் உணுதி ஸூத்ரம் ஈச்வரசப்தத்துக்கு அர்த்தம் கூறுகிறது.

அச்ஞேதே ராசுகர்மணி வரட் ச

சீக்ரம் ஸந்தோஷத்தால் பயன் கொடுக்கும், எங்கும் நிரம்பிய ஆசுதோஷர் என்பது ஈச்வர பதத்தின் உண்மைப் பொருளென்று, உணுதி ஸூத்ரத்தின் அர்த்தம். த்ருதி :---சிரமமில்லாமல் த்ரிபுர ஸம்ஹாரம் முதலிய வீரச்செயல்கள்; அதிஷ்டிதி :--- எல்லாவற்றிலும் அந்தர்யாமியாக ஸர்வ ஆதாரமாக இருத்தல் ; ஆத்மபோத :— அகண்ட சைதன்ய ரூபமாக ப்ரகாசித்தல் ; ஸ்ருஷ்டி :— உலகங்களனைத்தையும் படைத்தல் ; (பிரம்மாதிபதி : பிரம்மணோதிபதி : என்பது ச்ருதி; உலகங்களைப் படைத்த பிரம்மதேவனையும் படைத் சிவபெருமானைச் சேர்ந்தது ஸ்ருஷ்டி என்பது உண்மையே) விராக தபஸீ - வைராக்யம் ; உலகத்தைப் படைப்பதில் தடையற்ற ஸத்யஸங்கல்ப்பம் ; மதி : - கார்யங்களை ஆலோசித்தல் ; ஈச்வரத்வம் - தலைவனுக இருந்து காத்தல், இவைகள் பத்தும், த்வத் - உம்மிடமிருந்து, ந வியந்தி - எப்பொழுதும் பிரிந்து போகிறதில்லை. ஆகையால் இவை பத்தும் அவ்யயங்கள் எனப்படுகின்றன வேற்றுமை மாற்றத்தால்

மாருத சப்தத்திற்கு அவ்யயம் என்ற பெயர் பாணினியால் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதுபோல, இந்த பத்து குணங்களும் ஒருபொழுதும் பிரியாமல் மாருமல் இருப்பதால் அவ்யயங்கள் எனப்படுவது யுக்தமே. தர்ம:— அணிமாதி அஷ்டைச்வர்யங் களும். கதாசிதபி - ஒருபொழுதும், த்வத் - உம்மிடத்திருந்து, நாபைதி - விலகுகிறதில்லை. குணஸம்மதேஷு - குணமென்று கூறப்படுவதுள் தே யத் ந பவதி - உம்மிடம் இல்லாத அந்தக் குணம். கிம் - என்ன இருக்கிறது? ஈச்வரன் அனந்த, ஸகல கல்யாணகுண பரிபூர்ணன் என்பது தாத்பர்யம்.

நாஸ்தி யத்யதகல்யாணம் தத்ததஸ்ய கதாசன |
கல்யாணம் ஸகலஞ்சாஸ்தி பரமாத்மா சிவோ யத: ||

என்ற புராண வசனங்கள் சிவ பத அர்த்தத்தை நன்கு விளக்கு வது இங்கு காணப்பட வேண்டும்.

ஔதார்ய, வீர்ய, காம்பீர்ய மாதுர்ய மகராலய:

என்ற சிவபெருமான் அடைமொழியும் இவ்விஷயத்தை விளக்கிக் கூறுகிறது.

## சுலோகம் 33

நைவேச்வராந் ந யசஸா மஹதோ ந வீராந்
ந ஸ்ரீமத: க்ஷிதிபதீனபி ஸார்வபௌமாந் |
அந்யாத்ருசானபி மஹேச்வர! வீதராகாந்
ப்ரஞாவதோ பகவத: ப்ரவதந்தி வ்ருத்தா:

ஆறு குணங்கள் அமைந்தவர் பகவான் எனப்படுவர்; பத்து அழியாக் குணங்கள் நிரம்பியவர் பகவான் எனப்படுவர், என்ற மத த்வயப்படி, சிவபெருமான்தான் பகவத் சப்த வாச்யர் என்று நிரூபிக்கப்பட்டது. சில பெரியார்கள் ஞானம், வைராக் யம் இந்த இரண்டு குணங்கள் நிரம்பியிருந்தாலும், அவரே பகவான் என்று சொல்வார்கள்.

### பதவுரை

வ்ருத்தா: - பெரியோர்கள், ஈச்வராந் நைவ -பணம் இருப் பதற்காக அல்ல, யசஸா மஹத: நைவ - புகழ் மிகுந்தவர் என்

பதற்கல்ல, வீராந் ந - வீரர்களையும் அல்ல; ஸ்ரீமத : க்ஷிதி பதீந் ஸார்வ யௌமானபி ந - பூமியின் தலைவர்களான ஸம்பத்தைப் படைத்தவர்களையுமல்ல, அந்யா த்ருசானபி — இந்த குணங் கள் இல்லாவிடினும் வீதராகாந் ப்ரஞாவத :— ஆசையற்ற, சிறந்த அறிவு வாய்ந்தவர்களையே பகவத : ப்ரவதந்தி-பகவத் சப்த வாச்யர்களாகக் கூறுகிறார்கள். ஆதலால், ஞானமூர்த்தி யான, சிறந்த வைராக்யம் படைத்த உம்மை, பகவான் என்பது பெரியோர்களின் உண்மையான கருத்து.

## சுலோகம் 34.

ஆதர்வணா மதனசாஸன ! நிப்ருவாணா :
நாமாநி நாம பகவானிதி தே நிராஹு : |
அத்யாச்ரமோ பநிஷதாஹ பகேச்வரம் த்வாம்
நைகண்டுகா : ச பகவந்த முசந்தி பூஜ்யம் ||

பகவான் என்ற பதம் ஈச்வரனைக் குறிப்பது என்று சுருதி யும் சொல்லுகிறது.

### பதவுரை

மதனசாஸன — (பிறப்புக்காரணமான) மன்மதனை அடக் கியவரே ! ஆதர்வணா :— அதர்வவேதம் பயின்றவர்கள், தே- உம்முடைய, நாமாநி-பெயர்களை நிப்ருவாணா :— வ்யுத்பத்தி யால் விளக்குகிறவர்களாய், பகவான் இதி நாம-பகவான் என்ற பெயரை. நிராஹு :— வ்யுத்பத்தியால் உம்மைச் சேர்ந்ததாக வெளிப்படுத்துகிறார்கள். அத கஸ்மாத் உச்யதே மஹாதேவ :— ய : ஸர்வான் பாவான் பரிதயஜ்ய, ஆத்மஞான யோக, ஐச்வர்யே மஹதி மஹீயதே தஸ்மாத் உச்யதே மகாதேவ : என்பது அதர்வ வேதம் மகாதேவ சப்தத்தின் அர்த்தத்தைக் கூறுகிறது. அப்படியே அத கஸ்மாத் உச்யதே பகவான்-ய : ஸர்வான் பாவான் நிரீக்ஷதி, ஆத்மஞானம் நிரீக்ஷயதி, யோகம் கமயதி தஸ்மாத் உச்யதே பகவான் என்று பகவத் சப்தத்தின் அர்த்தத்தையும் தெளிவாகக் கூறு கிறது. ஆதலால், பங்கஜ சப்தம்போல, பகவான் சப்தம் யோக ரூடியாகக் கருதப்பட்டு, சிவபெருமானைத்தான் குறிக்கும். இங்கு சப்தாதேவ ப்ரமித : என்ற வ்யாஸ ஸூத்ரத்தின்

கருத்து ஸாதகமாகக் கொள்ளப்படவேண்டும். சுக்ரா சார் யாரும் சுகரபகவான் என்று கௌணமாகச் சொல்லப்படுகிருர். அவ்விதம் வந்த பெயர் தான் பாகவதம் என்பது, கிருஷ்ண சரித்திரம் விளக்கும் வாஸுதேவ புராணத்துக்கு ஏற்பட்ட பெயர். மஹேச்வர ! சிவபெருமானே ! த்வாம்-உம்மை அத்யாச்ரமோபநிஷத்-பஸ்மோத் தூளனம் செய்து கொள்பவர் களுக்கு, உபதேசிக்கப்படுகிற அத்யாச்ரமோப நிஷத்தும்,

தர்மாவஹம் பாபநுதம் பகேசம் என்று, பகேசம்-பகவான் என்று கூறுகிறது. நைகண்டுகா : ச — நிகண்டு என்ற வ்யுத் பத்தி க்ரந்தத்தை யறிந்தவர்களும்,

பூஜ்யம் பகவந்தம் உசந்தி. பூஜிக்கத் தகுந்தவர்களையே பகவான என்று சொல்லுகிருர்கள். பூஜிக்கத்தகுந்தவர் தாங்கள் ஆதலால், பகவத் சப்தம் உங்களைத்தான் குறிக்கும்.

தத்ர பவான் பகவானிதி சப்தோ வ்ருத்தை : ப்ரயுஜ்யதே பூஜ்ய : என்பது நிகண்டு வசனம் நமஸ்தே அஸ்து பகவத : அதீஹி பகவோ ப்ரும்ஹேதி என்ற சுருதிகளிலும், பூஜ்யனை பகவத் சப்தம் கூறுகிறது. சுருதி நிகண்டுகளில், பூஜிக்கப்படு கிறவர்கள் அனைவர்களையும் பகவத் சப்தம் குறிப்பிடுவதாக இருந்தாலும், வாக்கு, மனது, உடல், முககரணங்களால் துதித்துப் பூஜிக்கத்தகுந்தவராக சுருதி. தமுஷ்டுஹி என்பது உம்மையே கூறுவதால், நீர்தான் பகவான் முக்கியமானவர். மற்றவர்களை உம்மைப்போல் பூஜிக்கப் படவேண்டியது பற்றி ஸிம்ஹோ மாணவக : என்பது போல பகவத் சப்தம் குறிக் கிறது என்பது தாத்பர்யம். ஆதலால், ஆறு குணங்களோ, ஞான வைராக்கியமோ, பூஜ்யதையோ, இம்மூன்றில் எது, ப்ரவ்ருத்தி நிமித்தமாகக் கொண்டாலும், பகவான் தாங்கள் தாம். மற்றவர்கள் உம் ஸம்பந்தத்தால் பொருளாவார்கள். ஆதலால் பகவத் சப்த வாச்யத்வம் அதிவ்யாப்தி இல்லாத இரண்டாவது லக்ஷணமாவது திண்ணம்.

அதாபி யத் பாத நகாவஸ்ருஷ்டம்
ஜகத் விரிஞ்ச்சோ பஹ்ருதார்ஹணும்ப : |
ஸேசம் புனத்யன்யதமோ முகுந்தாத்
கோநாம லோகே பகவத்பதார்த்த : ||

என்ற வசனம் முகுந்தனைத்தவிர, பகவத்சப்த வாச்யத்வம் வேறு ஒருவனுக்குக் கிடையாது என்று கூறுகிறது. ஆதலால்

முகுந்தனிடத்தில் அதிவ்யாப்தம், சிவபெருமானிடம் அவ்யாப்தம் இரண்டாவது லக்ஷணம் என்ற கேள்வி எழும்புகிறது. கீழே சொல்லப்பட்ட அதர்வண வேதம் அத்யாச்ரமோபநிஷத் என்ற மந்த்ரோப நிஷத் ஆகிய சுருதிகள் சிவபெருமானை பகவானாகக் கூறும்போது, அதற்கு விருத்தமான இந்த வசனம் விரோதாதிகரண ந்யாயப்படி தள்ளப்பட வேண்டியதுதான். ஔதும்பரீ என்னும் கட்டையைப் பூராவும் வஸ்த்ரத்தால் மறைக்க வேண்டும் என்ற ஸ்ம்ருதிகூட ஔதும்பரிக் கட்டையைத் தொட்டுக் கொண்டு ஸாமகானம் செய்யவேண்டும் என்று சொல்லும் சுருதிக்கு விரோதமானதால் தள்ளப்பட வேண்டியதாக ஜைமினி முனிவர் சொல்லிய மீமாம்ஸ ந்யாயம் இருக்கிறது.

மேலும் இந்தவாக்யமே த்வேஷத்தால் எழுதப்பட்டதென்பது தெளிவு. ஸேசம் ஜகத் புனாதி என்றதால், வாஸுதேவன் பாததீர்த்தம் சிவபெருமானையும் புனிதமாக்கினதாகச் சொல்வது ஸரியான முறையல்ல அபத்தம். மகாலிங்கம், ஜ்யோதிர் லிங்கம், ப்ராதுற்பவித்ததும், ப்ரம்மா, விஷ்ணு இருவர்களும் அன்னம் வராகம் ரூபம் கொண்டு மேலும் கீழும் பலகாலம் தேடிச் சென்றும் காணமுடியாத வரலாறும், ஈச்வரனுக்கு ஆயிரம் நாம அர்ச்சனை செய்த வாஸு தேவன், ஓர் தாமரை குறைந்ததால், தன் கண்ணை பக்தியுடன் அர்ச்சித்து, ஈச்வரனிடம் சக்ராயுதம் பெற்றதும், ப்ரம்மா ஸாரதியாகவும், விஷ்ணு பாணமாகவும் வர, ஸாதனங்களை எதிர்பாராமல் ஸங்கல்ப மாத்திரத்தில் நடந்த த்ரிபுர ஸம்ஹார வரலாறும், தேவர்கள் அமிர்தம் வேண்டி ஸமுத்ரத்தைக் கடைந்தபோது உண்டான கால கூட விஷ தாபத்தால் ஓடிவாடிய பிரம்ம விஷ்ணுக்களையும் மற்றும் ஸகலதேவர்களையும், சிவபெருமான் விஷத்தை தாம் ஏற்றுக் காப்பாற்றிய சரித்திரத்தாலும், பிரம்ம விஷ்ணுக்களையும் தன்வசப்படுத்தின காமனை, எரித்த வரலாற்றாலும், தேவியின் ஸ்வயம் வரத்தில், குழந்தை யுருவமெடுத்து வந்த சிவபெருமான், விஷ்ணு முதலிய தேவர்களை ஸ்தம்பிக்கச் செய்த வரலாற்றாலும். மத்ஸ்ய, கூர்ம வராஹ, த்ரிவிக்ரம, ந்ருஸிம்ஹம் விஷ்வக்ஸேனர் முதலியவர்களை அடக்கிய வரலாறுகளாலும், ப்ரம்மாவின் ஐந்தாவது தலையைப் பொய் சொன்னதற்காகக் கிள்ளி சதுர் முகனாக்கிய சரிதத்தாலும். சுருதி ஸ்ம்ருதி புராண இதிகாஸங்கள் அனைத்தும் சிவபெருமானை மகாதேவனாக அங்கீகரிக்கும்போது, அவரை சுத்தப்படுத்தியது முகுந்தன் பாத தீர்த்தம் என்று ஒரு வசனம் எழுதி வைத்தது எங்ஙனம் ப்ரமாணமாகும்?

த்யஜேத்ஏகம் குலஸ்யார்த்தே, க்ராமஸ் யார்த்தே குலம் த்யஜேத் | க்ராமம் ஜனபதஸ்யார்த்தே ஹியாத்மார்த்தே ப்ருதிவீம் த்யஜேத் என்றல்லவா உலக ந்யாயமும். பகாஸுரனால் உபத்ரவம் நீங்க, தினந்தோறும் ஒரு சிறு பிள்ளையை ஏகசக்ர புரத்தில் தியாகம் செய்து வந்த பாரத வரலாற்றுப்படி, பல சுருதி விரோத மானதால், கீழே சொன்ன முகுந்தன் பாததீர்த்த சுலோகமும், த்வேஷத்தால் எழுதப்பட்டது தள்ளத் தகுந்தது.

கங்கா தேவி மலையரசன் பெண்ணாக ஹிமய மலையிலிருந்து விழும் ஸமயம், கர்வாப ஹரணத்துக்காக ஈச்வரனால் ஜடையில் தாங்கப்பட்டாள். விஷ்ணுபாத தீர்த்தமாக வாமனாவதார காலத்தில் இருந்தது வேறு ஜன்மாவில் என்றல்லவா ஜன்ம பேதம் சொல்லப்படுகிறது.

த்வம் தேவேஷு ப்ராம்மணோஸி. அஹம் மனுயேஷு.

விஷ்ணோராதி பத்யம் க்ஷத்ரம் ஸ்ம்ருதம்

என்ற ப்ரமாணப்படி, சிவபெருமான் ப்ராம்மணத்வம், ப்ராம்மணாதிபத்யம் படைத்தவர். முகுந்தன் க்ஷத்திரியன், க்ஷத்ரியாதிபத்யம் படைத்தவன் என்ற சித்தாந்தமும் ஸர்வஸம்மதமாக இருக்க, பிராம்மணர் சிவன், க்ஷத்ரியன் விஷ்ணு பாத தீர்த்தத்தால் புனிதனானான் என்று, விவேகமுள்ள எந்த மனிதனும் சொல்லமாட்டான், ஒப்புக் கொள்ளமாட்டான்.

ப்ரம்ஹாசாஸௌ அதிபதி : ச ப்ரம்ஹாதிபதி :

என்ற கர்மதாரய ஸமாஸத்தை, நிபாதஸ்தபத் யதிகரண ந்யாயப்படி ஆச்ரயித்து, சிவபெருமான் ப்ராம்மணர், ப்ராம்மணர்களுக்கு அதிபதி என்பதை ஈசான மந்த்ரம் நன்கு வெளியிடுகிறது.

ஈசான ஸர்வவித்யானாம் . . . . ப்ரம்மணோதிபதி :

## சுலோகம் 35

பூஜா தமுஷ்டுஹிவதா விஹிதா மஹேச
மந்த்ரேண வாங்மனஸ காய நிபந்தனாதே |
ஸர்வாபி ரப்யுபநிஷத்பி ருபாஸனேக்தா
நாராயணோப நிஷதம் பரிபாவயாம : ||

பகவத்பத வாச்யம்போல, பூஜாசேஷித்வம் என்பதும் சிவ பெருமானுக்கு லக்ஷணம் அதிவ்யாப்தி இல்லாததாகச் சொல்ல முடியும் என்று கூறப்படுகிறது.

## பதவுரை

மஹேச - சிவபெருமானே ! தமுஷ்டுஹிவதா மந்த்ரேண - தமுஷ்டுஹி என்ற பதத்துடன் ஆரம்பிக்கும் சதருத்ரீய மந்த்ரத் தினுல், தே - உம்முடைய, வாங்மனஸ காய நிபந்தனு பூஜா - வாயால் துதிப்பதும் மனதால் த்யானிப்பதும் உடம்பால் நமஸ் கரிப்பதுமாகிய பூஜையானது விஹிதா - விதிக்கப்பட்டிருக் கிறது. ஸர்வாபி ருபநிஷத்பி:— எல்லா உபநிஷத்துக்களால், உபாஸனேக்தா—உபாஸனே சொல்லப்பட்டிருக்கிறது. அபி - ஆனுலும், நாராயனேப நிஷதம் - நாராயனேப நிஷத் என்ற மஹோப நிஷத்தை, பரிபாவயாம:- யுக்திகளைக் கொண்டு தத்வார்த்தம் என்ன வெளியாகிறது என்பதாக விமர்சனம் செய்வோம். மஹோப நிஷத்தில் சிவன் உபாஸிக்கப்படுவதாக வும் முகுந்தன் உபாஸகனுகவும் தாத்பர்யம் வெளிப்படுத்தப் பட்டால், மற்ற உபநிஷத்துக்களிலும் சிவபெருமான்தான் உபாஸ்யர் என்ற கருத்து தெளிவாகி விடும். என்ற நோக்கத் துடன், 36 முதல் 55 முடிய, 20 செய்யுள்களால், மஹோப நிஷத் உபாஸ்யத்வம் என்ற மூன்ருவது லக்ஷணத்தை அதிவ் யாப்தி, அவ்யாப்தி தோஷம் இல்லாமல் ஸமன்வயப் படுத்து கிருர்.

ய : எவர், த்ரிஷு - அக்னிமனீகம். ஸோமம். சல்யம் விஷ் ணும் தேஜனம் - என்ற சுருதிப்படி கட்டை, தார், கூறு என்ற மூன்று பாகங்களாக அமைந்த, விஷ்ணு, ஸோமன், அக்னி, தேவர்களாகிய பாணத்தை உடையவரும், அல்லது கர்ணபர்வ சரிதப்படி விஷ்ணுவை பாணமாகக் கொண்டவரும், ஸூதன்வா- லிங்க புராணப்படி மேருவை வில்லாகக் கொண்டவரும், கர்ண பர்வப்படி ஸம்வத்ஸர தேவதையை வில்லாகக்கொண்டவரும், அல்லது சாந்திபர்வப்படி பிரணவம் என்ற ஓங்காரத்தை வில்லாகக் கொண்டவரும், (ஓங்காரம் வில்லாகவும், காயத்ரீ நாணுகவும், பஞ்சாக்ஷரங்களை பாணமாகவும் வைத்து த்ரிபுரஸம் ஹாரம் செய்ததாக சாந்தி பர்வா சொல்லுகிறது,) ப்ரணவ வ்யாக்ருதி ஸஹித காயத்ரீ ஜபத்தாலும், பஞ்சாக்ஷர ஜபத்தா லும், ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண மென்ற முப்புரம் நீங்கி முக்தி யடையலாம் என்ற தாத்பர்யத்தைச் விளக்குகிறது.

ய : விச்வச்யபேஷஜஸ்ய க்ஷயதி ஸம்ஸார நிவ்ருத்தி மருந்தாகிய ஞானத்துக்கு எவர் இருப்பிடமோ, எவர் ஞான ப்ரதாதாவோ. தமு - அந்த சிவபெருமானையே ஏ மனதே ஸதுஹி - துதிப்பாயாக. மஹே - உத்ஸவ காலத்தில், ஸோமன ஸாய - நல்ல மனம் பெறவேண்டி. தமுயக்ஷ்வ அவரையே குறித்து மனதால் த்யானம் செய். அஸுரம் - உயிரைக் கொடுக்கும் ஆபத்பாந்தவனாகிய, ருத்ரம் தேவம் - ருத்ரக் கடவுளை, நமோபி : - நமஸ்காரங்களால் துவஸ்வ - பணிவிடை செய்வாயாக. என்று ருக் வேதமந்த்ரம் முக்கரணங்களால் பூஜிக்க வேண்டியது சிவன் ஒருவனையே என்ற விதியை, உபரிதாரண ந்யாயப்படி கற்பிக்க வேண்டுமென்பதைத் தெளி வாகக் கூறுகிறது. மேற்படி ந்யாயம் மீமாம்ஸகர்களுக்குப் பிரஸித்தம். வாயவீய ஸம்ஹிதையில் ஸாம்பபூஜா த்ரிதா ப்ரோக்தா மனோவாக்காய ஸாதனை :|| என்று சொல்லப்படு வதும் காண்க.

## சுலோகம் 36

வாக்யம் யதாஹ தஹ்ராந்த ருபாஸனம் தே
யத்வா ஸமர்ப்பயதி ரூப விசேஷமஸ்மை |
அந்தர்கதைரபி தத்தௌ பயிகாபி தேயை :
பாவ்யம் வசோபிரிதி வாக்யவிதாம் ப்ரவாத :||

அங்காங்கு எல்லா உபநிடதங்களிலும் உபாஸனை செய்யப் படவேண்டுமென்று முதலில் விதிகாணப்படுகிறது. பிறகு உபாஸிக்கப்படவேண்டிய, செயப்படு பொருளின் பெயர், உரு வம், குணவிசேஷங்கள் கூறப்படுகின்றன. பிறகு உபாஸனை யின் பயன் கூறப்படுகிறது. இவ்விதம் ப்ருஹதாரண்யகம், பஹ்வ்ருசாரண்யகம், ஸாமவேத ஸம்பந்தமான தலவகார உபநிஷத், அதர்வவேத ஸம்பந்தமான முண்டகோபநிஷத், அதர்வசிரஸ், அதர்வசிகை, கைவல்யம், ச்வேதாச்வதரம், தைத்ரீ யோபநிஷத், ரிக்வேத ஸம்பந்தமான ஐத்ரேயகம், முதலிய பல இடங்களில், உபநிஷத்துக்களில், உபாஸனை விதிக்கப்பட்டிருக்கிறது. ஆயினும் நாராயணோப நிஷத்துக்கு மஹோப நிஷத் என்ற ப்ரஸித்தி இருப்பதால், அதைப் பரிசீலனை செய்து. உண்மையான அர்த்தம் கூறப்பட்டால், மற்ற உபநிஷத்துக்களின் அர்த்தமும் அப்படித்தான் என்பது கைமுதிக ந்யாயப்படி ஸித்திக்குமாதலால், நாராயணோப நிஷத்தைப் பரிசீலனை செய்ய ஆரம்பிக்கிறார்.

யாஞ்ஞிக்யுபநிஷத் ப்ரோக்த உபாஸ்யத்வம் பரமசிவ னுடைய அஸாதாரணமான அதிவ்யாப்தி தோஷமற்ற மூன்ரு வது லக்ஷணம் என்றதை ஸ்தாபிக்க ஆரம்பிக்கிருர். தைத்ரீய உபநிஷத் நாலாவது ப்ரச்னத்தில், அதாவது தைத்ரீயாரண் யகம் பத்தாவது ப்ரச்னத்தில், பரமேச்வரன் உபாஸனே ஸம் பந்தமாக மூன்று அநுவாகங்கள் கூறப்படுகின்றன. அணோ ரணீயாந்—என்பது 12-வது அநுவாகம் ஸ்ஹஸ்ர சீர்ஷம் தேவம் என்பது 13 வது அநுவாகம் பிறகு சில அநுவாகங் களுக்குப் பிறகு இதன் முடிவு ருதம் ஸத்யம் என்ற 23 வது அநுவாகத்தில் காணப்படுகிறது. ஸப்த ப்ராணு: என்ற மந்த்ரங்களால், ஸகலஜகத்துக்கு பரிணும்யுபாதான காரண மான, அதிஷ்டாதாவான, மகேச்வரனே விளக்கி, அவர் அனுக் ரஹத்தால் பச்யதி வீத சோக: என்று ஸகல துக்கங்கள் நீங்கும்படி ஸாக்ஷாத்காரம் வருவதாகக் கூறப்பட்டிருக்கிறது, இவ்விதமே ச்வேதாச்வதர மந்த்ரமும் கூறுகிறது. தேனேதம் பூர்ணம் புருஷேண ஸர்வம் என்ற மந்த்ரம் வரையில் உபாஸ்ய மகேச்வரப்ரபாவம் கூறப்பட்டிருக்கிறது. ந கர்மணு என்ற மந்த்ரத்தால் த்யாகத்தின் ஆவச்யகம் கூறப்பட்டது, வேதாந்த விக்ஞான என்ற மந்த்ரத்தால், வேதப்பொருளே நன்கு அறிந்து ஸர்வகர்ம ஸந்யாஸ பூர்வகமான யோகத்தால் பிரம்மலோக மடைந்து, பரார்த்த த்வய காலத்துக்குப் பிறகு, அம்ருத வாச்யரான மகேச்வரனே யடைந்து முக்தி யடைகிருர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது, ஜாபாலம் முதலிய உபநிஷத் துக்களால், அம்ருதம் என்ற பதம் பரமசிவனைக் குறிக்கு மென்பது தீர்மானிக்கப்பட்ட விஷயம்.

தஹ்ரம் விபாபம் என்ற மந்த்ரத்தால், ததுபாஸிதவ்யம் என்று, தவ்ய ப்ரத்யய முள்ள விதி ப்ரத்யயத்தால

ஸ்வாத்யாயோ த்யேதவ்ய :

என்ற ப்ரஸித்த விதிபோல உபாஸனுவிதி கூறப்பட்டுள்ளது. பிறகு அந்த உபாஸ்ய வஸ்துவின் பெயர், ஓங்கார ப்ரதிபாத்ய மான, ஓங்கார ப்ரதீகமான மஹேச்வரனென்று கூறப்படுகிறது நாதத்தில் ஸகல ப்ரபஞ்சத்தையும் லயிக்கும்படி வைத்துக் கொண்டிருப்பதால், ப்ரணவம் ப்ரக்ருதி லீன : என்று சொல்லப் படுகிறது. பிறகு மஹேச்வரன் ரூபம் என்னவென்பதை, 23-வது அநுவாகம் ருதம் ஸத்யம் என்பது, கிருஷ்ண பிங்களம் ஊர்த்தவ ரேதம், விருபாக்ஷம் என்று அஸாதாரணமான பரமேச்வரன் ரூபங்களைத் கூறுவதால் விளக்குகிறது.

இவ்விதம் உபாஸனு விதிவாக்கியம், அதன் பயன், உபாஸ்ய.வஸ்துவின் நாம ரூபங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன இந்த மகேச்வரன் உபாஸனு ஸந்தர்ப்பத்தின் நடுவில் கூறப் படும் நாராயண பரமான, ஸகஸ்ர சீர்ஷம் என்ற 13-வது அநு வாகத்துக்கு எப்படி ஸம்பந்தம் ஏற்படுத்துவது என்பதை வாக்ய நியாயங்களைக் கொண்டு மீமாம்ஸ சாஸ்திர முறையில் நிச்சயிக்க வேண்டும். மீமாம்ஸா சாஸ்திரத்தில் உபக்ரமாதி கரணத்திலும் அச்வப்ரதிக்ரஹேஷ்டி அதிகரணத்திலும் முதலில் ஆரம்பிக்கப்பட்டதைத் தழுவி பின்னுல் சொல்லப்படுவது விரோதமாகவிருந்தால் மாற்றி அர்த்தங் கொள்ள வேண்டு மென்பது ந்யாயமாக ஸ்தாபிக்கப் பட்டுள்ளது இங்கு முதலி லேயும், முடிவிலேயும், 12, 23 அநுவாகங்களில் மஹேச்வர உபாஸனை சொல்லியிருப்பதால், நடுவில் உள்ள நாராயண பரமான 13-அநுவாகம் மஹேச்வர உபாஸனு விதியுடன் சேரு மேயல்லாது, தனியாக நாராயண உபாஸனு பரமாக இருக்க முடியாது. இதுதான் ஸந்தம்சம் ந்யாயம் என்றும், இல்லா விடில் வாக்யபேதம் வரும். உத்கர்ஷம் வரும் என்றும் பல வாருக மீமாம்ஸையில் தூஷிக்கப்பட்டு, ஏக வாக்யதை வேண் டும் என்று, கைமுதிக ந்யாயத்தைக் காட்டி ஸ்தாபிக்கப் பட்டிருக் கிறது. ஆதலால் நாராயண பரமான நடு 13-வது அநுவாகம் தனியல்ல. மஹேச்வர உபாஸனு விதியில் அங்கமாகச் சேர்க்கப் படவேண்டியது என்பது ந்யாய ப்ராப்தம். உபாஸனை, உபாஸ்ய நாம ரூபம், இரண்டும் சொல்லப்பட்டு விட்டபடியால் பாக்கியுள்ள உபாஸகன், (அதாவது யார் உபாஸிக்கிருன் என் பது) 13-வது அநுவாகத்தால் சொல்லப்படுகிறது. அதாவது நாராயணன் தன் ஹ்ருதய புண்டரீகத்தில், பரமேச்வரனை உபாசித்தார். ஆதலால், வேதாந்தத்தால் பரம்பொருள் அறிந் தவர்கள் த்யாகிகளாக, முக்திக்காக பரமேச்வரனை உபாஸிக்க வேண்டும்மென்பது தாத்பர்யம்.

மேலும் 13-வது அநுவாகத்தில் நாராயணனை ப்ரதி பாதிப்பதில், அவரை உபாசிக்க வேண்டும் என்று விதி காணப்படவில்லை. நாராயணன் மகிமையைச் சொல்லுவ தால் உபாஸனு விதியைக் கல்ப்பித்தது ஆகாது. உபாஸி தவ்யம் என்ற 12-வது அநுவாகத்தில் உள்ள பரமசிவன் உபாஸனு விதிப்பதத்தை அனுஷங்கம் செய்து, நாராயண உபாஸனை விதிப்பதாக அங்கீகரிப்பது ந்யாய விருத்தம். ஓர் விதிவாக்யத்தில் உபாஸ்ய ஸ்வரூபம் சொல்லப்பட் டிருந்தால், மற்றெரு வாக்கியத்திலுள்ள உபாஸ்யரூபம் அந்த விதியோடு அந்வயிக்காது என்பது ஜைமினி ந்யாயம்.

வைச்வதேவயாகத்தில் ஆமிக்ஷா என்ற ஹவிஸ் சொல்லப்பட்டு விட்டபடியால், மறு வாக்கியத்திலுள்ள வாஜினம் என்ற ஹவிஸ் அந்தக் கார்யத்தில் அன்வயிக்கமுடியாமல், வேறு கார்யத்தை ஏற்படுத்திவிடுகிறது. கர்மபேதம் என்றல்லவா மீமாம்ஸகர் கொள்கை? ஆதலால் உபாஸனு பேதம் சொல்ல வேண்டும். அதுவும், உபக்ரம உபஸம்ஹாரத்துக்கு மாறு பாடாக நடுவில் இருப்பதால் முடியாது. முதல் முடிவுகளில் சொல்லப்பட்ட பரமேச்வரன் உபாஸனைக்கு அனுகுணமாக இருந்தால் தான் பொருத்தமுடியும். ஸ்வதந்த்ர நாராயணோ பாஸனையாக இருக்க முடியாது. பொருந்தாது. நாராயணனை உபாஸகராகச் செய்து பொருத்துவதைத் தவிர வேறு வழி கிடையாது. ஆதலால், மஹேச்வரன் உபாஸ்யர், முக்தி பயன். நாராயணன் உபாஸகர். அவர்போல, மற்ற இக்காலத்து த்யாகிகளும் உபாஸித்து முக்திபெறலாம் அம்ருத பதவாச்ய ரான மஹேச்வரனை யடைந்து, பவ பாசத்திலிருந்து விடுபட லாம் என்பது தான் மூன்று அநுவாகங்களின் ஏக வாக்யதை யைக் கொண்டு ந்யாயப்படி ஸித்தமான அர்த்தம் என்பதை விளக்குகிறார்.

## பதவுரை

யத் - யாதொரு, வாக்யம் - (தஹரம் விபாபம் — ததுபாஸி தவ்யம்) உபக்ரமத்திலுள்ள உபாஸனு விதிவாக்யம் தஹராந்த: ஹ்ருதயம் என்ற புண்டரீகத்தின் தாமரையின் நடுவில் உபாஸனம் - உபாஸனுகார்யத்தை, ஆஹ - செய்யவேண்டு மென்று சொல்லுகிறதோ, யத்வா - எந்த உபஸம் ஹாரத்தில் உள்ள ருதம் ஸத்யம் — — — நமோ நம: என்ற 23 வது அநுவாக வாக்யம். அஸ்மை - இந்த உபாஸனை சொல்வதற்காக அபேக்ஷிதமான, தே - உம்முடைய. ரூபவிசேஷம் - க்ருஷ்ண பிங்களம் ஊர்த்த்வ ரேதம், விரூபாக்ஷம் என்ற அஸாதா ரணமான லக்ஷணங்களை, ஸமர்ப்பயதி - தெரியப்படுத்துகிற தோ ஆரம்பம், முடிவு. இந்த இரண்டு மந்த்ரங்களுக்கு நடுவில் உள்ள, வசோபிரபி - ஸஹஸ்ரசீர்ஷம் என்ற 13 வது அனுவாகமாகிய மந்த்ரங்களாலும், ததௌபயிகா பிதேயை :— அந்த உபாஸனு விதிக்கு அனுகுணமான, சேஷ பூத அர்த்தத் தை உடையவைகளாகத்தான் பாவ்யம் - இருக்கவேண்டும். இல்லாவிடில் ஏகவாக்யதை ஏற்படாமல், வாக்யபேத தோஷம் ஏற்பட்டுவிடுமென்று, இதி - இவ்விதமாக, வாக்யவிதாம் - வாக்ய ந்யாயத்தை அறிந்த மீமாம்ஸகர்களின், ப்ரவாத :— தீர்மானம், உத்கோஷம்,

## சுலோகம் 37

நாராயணஸ்ய யதுபாஸ்யதயாபி தானம்
யத்வா பலந்ததிஹ நோபலபே கதஞ்சித் |
உத்பத்திசிஷ்ட பவதன்வய மன்யகாமி
சக்யம் மஹேச்வர! நகர்த்து முபாஸனம் தே ||

நடு அநுவாகத்தில் நாராயணனையே ஸ்பஷ்டமாகக் குறிப்பதால் எவ்விதம் பரமசிவன் உபாஸனையுடன் சேர்க்க முடியும், தனியாக நாராயண உபாஸனை விதியைக் கற்பிப்பதோ. முன் உபாஸிதவ்யம் என்ற விதியை அநுஷங்கம் செய்து. நாராயண உபாஸனையையும் அங்கீகரிப்பதோ, உசிதமானது என்ற சங்கைக்கு பதில் சொல்லப்படுகிறது.

### பதவுரை

இஹ - இந்த நடுவாகிய 13-வது அநுவாகத்தில் நாராயணஸ்ய – நாராயணனுடைய, உபாஸ்யதயா பிதானம் - உபாஸிக்கும்படி சொல்லும் விதியும், யத்வா பலம் - அதன் பயனும் (முன் 12-வது அநுவாகத்தில் மஹேச்வர உபாஸனைக்குக் காணப்படுவதுபோல) தத் - அவ்விரண்டும், கதஞ்சித் - சிரமப்பட்டாலும், எந்த விதமாகவும் நோபலபே - காணமுடியவில்லை மகேச்வர - பரமேச்வரனே! தே - உம்முடைய, உபாஸனம் - உபாஸனவிதி - பல விதிகளை. உத்பத்திசிஷ்ட பவதன்வயம் - விதியின் உத்பத்தி வாக்யத்திலேயே அன்வயிக்கும்படி உமது கர்மபாவத்தை 12-வது அநுவாகத்திலேயே சொல்லப்பட்டு ஆகாங்க்ஷை முடிந்து விட்டதால், அந்யகாமி – வேறு உத்பந்ந சிஷ்டமான கர்மாவைப் பொருந்துவதாக, கர்த்தும் ந சக்யம் - செய்யமுடியாதல்லவா? இதுதான் குணந்யாயம், வாஜினி ந்யாயமென்று சொல்லப்படுவது காண்க.

யத்வேதாதௌ - என்ற 12-வது அநுவாக மந்த்ரத்தால், மஹேச்வர: ப்ரக்ருதி லீனஸ்ய பர: என்று பரமேச்வரனை உபாஸ்ய ரூபமாக உத்பத்தி காலத்திலேயே சொல்லப்பட்டு விட்டபடியால், 13-வது அடுத்த அநுவாக ப்ரதிபாத்யனை நாராயணனை அந்த விதியில் உபாஸ்யனாக அபேக்ஷை இல்லாததால் பொருத்த முடியாதல்லவா? அப்படியானால் 13-வது அநுவாகத்தில் மகேச்வரன் உபாஸனா விதிபரமான இரண்டு அநு

வாகங்களின் மத்தியில் நாராயணன் மகிமையைத் தெரிவிப்பது வீணாகிவிடாதா - என்ற சங்கைக்குப் பரிகாரம் 38-வது சுலோகத்தில் சொல்லப்படுகிறது.

## சுலோகம் 38

நாஸா வுபாஸன முபாஸ்யகதைவதூரே
மா தஸ்மாத் துபாஸகதயா பரிசேஷஸித்தி: |
அந்தர் வ்யவஸ்தித கிரா பரமாத்மனஸ்தே
சப்தாத்ருதேபி விஹிதம் ததுபாஸகத்வம் ||

### பதவுரை

அஸௌ - இந்த 13-வது அநுவாகத்தில் ப்ரதிபாதிக்கப் படும் நாராயணன் முன் பின்னுள்ள உபாஸனம் - உபாஸனக் ரியையாக; ந - இருக்கமுடியாது. சேதனனான புருஷன் அசேதன க்ரியை ருபமாக எப்படியிருக்க முடியும்? உபாஸ்யகதா தூர எவ - உபாசிக்கப்படும் கர்மாவாக அந்வயிப்பதோ அங்கீகரிக்கவே முடியாது. எனெனில் தனிவிதியும் பயனும் சொல்லப் படவில்லை. ஏகவாக்யதைக்காக உத்கர்ஷம் பண்ணிக் கல்ப்பிக்கவும் முடியாது. தஸ்மாத் - ஆதலால், க்ரியையும் இல்லை கர்மாவும் இல்லையென்றதால், உபாஸகதயா பரிசேஷ ஸித்தி: மீதி, உபாஸன கர்த்தாவாகத்தான் நாராயணன் சொல்லப் பட்டவராக ஆகிருர். பரமாத்மனஸ்தே - பரம்பொருளாகிய நீர், அந்தர்வ்யவஸ்தித கிரா - நாராயணனுடைய ஹ்ருதய புண்டரீக ஜோதியின் நுனியில் வீற்றிருப்பதாகச் சொல்லப் பட்டிருப்பதால், அந்த வாக்கியத்தின் லிங்கத்தைக் கொண்டு, சப்தாத்ருதே அபி - உபாஸகர் என்ற பதமில்லாவிடினும், ததுபாஸகத்வம் - அந்தப் பரமசிவனைத் தன் ஹ்ருதய புண்டரீக ஜோதியில் உபாசித்துக் கொண்டிருப்பவர் நாராயணர் என்பது, விஹிதம் - ந்யாயத்தால் லிங்க மூலம் ஒப்புக் கொள்ளப்பட வேண்டியதாக இருக்கிறது. ஸ்ருவம் என்ற பாத்ரத்தால், எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற வாக்யத்தில், சக்தியை, லிங்கத்தை யனுஸரித்து, த்ரவத்ரவ்யமான நெய், பால், எடுப்பதில் ஸ்ருவம்; முட்டை, மற்ற கடின த்ரவ்யத்தில் கையால் எடுப்பது, மாம்ஸத்தை வழுக்குமாதலால் கத்தியால் எடுப்பது என்று பதமில்லாவிடினும், சக்தி என்ற லிங்கத்தால் நிர்ணயித்திருக்கிருர்.

கர்மகாண்டத்தில் மீமாம்ஸகர்கள் அனுச்ருதியே நேராகச் சொன்னதாகக் கொள்ள வேண்டும் என்பது ந்யாயவித் ஸித்தாந்த மல்லவா? நாராயணன் ஹ்ருதய புண்டரீக ஜோதி நுனியில் பரமசிவன் இருப்பதாகச் சொல்வது, அவர் உபாஸகர் என்பது ஒப்புக் கொள்ளப் படாவிடில் பொருந்தாது அல்லவா? இதுதான் அர்த்தாபத்தி என்ற ப்ரமாணமாகக் கருதப்படும். ஆதலால், உபாஸகபதம் வாசகமாக இல்லாவிடினும், வாக்ய சேஷந்யாயப்படி லிங்கத்தால், மஹேச்வர உபாஸனு விதியில் மிக மகிமை வாய்ந்த நாராயணன் உபாஸகன் என்பது சொல்லாமல் ஸித்திக்கும். இதுவே பரிசேஷ ஸித்த ந்யாயம் என்றும் சொல்லப்படும். எங்கு'முள்ள ஸர்வ வ்யாபியான ஸர்வாந்தர்யாமி பரமசிவன், நாராயணன் ஹ்ருதய ஜோதியில் இருப்பதாகக் குறிப்பிட்டுச் சொல்லப்பட்டிருப்பது அவர் உபாஸிக்கிறவராக இருந்தால் தான் பொருத்தமாக அந்வயிக்கும். நாராயணன் தன் இஷ்டம் நிறைவேற ஸாம்பாதி புத்ர லாபார்த்தமாக பரமசிவனை உபாசிக்கிறவர் என்ற விஷயம் மகா பாரதத்தில் சாந்திபர்வாவில் நரநாராயண ஸம்வாதத்தில், நரனுக்கு நாராயணன் தானே தன் வாயால் சொன்னதாக, நன்கு ஐயமறக் கூறப்பட்டிருப்பது ஸித்தாந்தத்திற்கு நல்ல உபப்ரஹ்மணமான அத்தாக்ஷியாகும். ருத்ரம் ஸம் பூஜயாம் யஹம் என்று தன் வாயால் சொல்வது காண்க.

புத்ரார்த்தம் ஆராதிதவான் ஆத்மா ஆத்மானம் ஆத்மன: என்பதும் காண்க.

## சுலோகம் 39

யஸ்ய ஸ்திதோஸி ஹ்ருதயே பரமஸ்த்வ
மாத்மா
யுக்தந்ந தஸ்ய பரமாத்ம தயாபிதானம் |
ஸ்வேன ஸ்வயம் மனஸி வன்ஹிசிகாந்தராளே
திஷ்டந் நுபாஸ்ய இதி ஹாஸ்ய பதம் ந
கஸ்ய ||

ஆத்மா நாராயண: பர: என்ற சுருதி நாராயணனைப் பரமாத்மாவாகக் கூறுகிறது. அவரை யல்லவா தஸ்யா சிகாயாமத்யே பரமாத்மா வ்யவஸ்தித: என்ற சிகாவாக்யத்திலும் ஹ்ருதயஜோதி நுனியில் இருப்பதாகச் சொல்லவேண்டும்,

அப்பொழுது நாராயணன் உபாஸ்ய தெய்வமாக அல்லவா ஆவார். உபாஸகனுக எப்படி அங்கீகரிக்க முடியும் என்ற சங்கைக்கு ஸமாதானம் கூறப்படுகிறது.

## பதவுரை

பரம : ஆத்மா த்வம் - பரமாத்மாவாகிய தாங்கள், யஸ்ய ஹ்ருதயே ஸ்திதோஸி - எந்த நாராயணன் ஹ்ருதயத்தில் இருக்கிறீரோ, தஸ்ய - அந்த நாராயணனை, பரமாத்மதயா அபிதானம் - ஆத்மா நாராயண : பர : என்ற பாகத்தால் பரமாத்மாவாகச் சொல்வது ந யுக்தம் - பொருத்தமாகாது, மனஸி - ஹ்ருதய புண்டரீகத்தில், வன்ஹி சிகாந்தராளே - ஜோதி நுனியின் நடுவில். ஸ்வயம் திஷ்டந்—தானே பரமாத்மா வாக இருந்து கொண்டு, ஸ்வேன உபாஸ்ய :— தன்னுல் உபாஸிக்கப்படுகிருர், இதி - என்று அர்த்தம் கொள்வது கஸ்ய ந ஹாஸ்யபதம் - யாருக்குத்தான் உபஹாஸாஸ் பதமாக இருக்காது ?

ஒருவனுக்கு கர்த்த்ரு பாவமும் கர்மபாவமும் ஏற்பது பொருந்தாதல்லவா ? நல்ல சிக்ஷை பெற்ற நாட்டியப் பெண்ணும், தன் தோளில் தானே ஏற முடியுமா ? பரமாத்மா என்ற பதம் பரமசிவனைத்தான் குறிக்கும். மற்ற தெய்வத்துக்குப் பொருந்தாது என்று ஸித்தாந்தம், மகாபாரதம் சாந்தி பர்வம் ஸபாபர்வங்களில் வ்யாஸ முனிவரால் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது, மற்ற புராணங்களிலும், தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

உத்தம புருஷஸ்து அன்ய : பரமாத்மா
இதி - உதாஹ்ருத :

என்ற கீதா வாக்யர் மூவுலகத்தையும் அந்தர்யாமியாக வ்யாபித்துத் தாங்கும் ஈச்வரனை அநுவதித்து, பரமாத்மா என்ற ஸம்ஞையை விதிக்கிறது. வாயவீய ஸம்ஹிதையிலும் மந்த்ர சாஸ்திரங்களிலும் இது ப்ரஸித்தமானது காண்க.

ஈச்வர : ஸர்வபூதானும் ஹ்ருத்தேசே அர்ஜுன திஷ்டதி |

என்று ஹ்ருதயத்தில் பரமேச்வரன் அந்தர்யாமியாக வீற்றிருப்பதைச் சொல்லி, தமேவ சரணம் கச்ச ஸர்வ பாவேன பாரத || என்று அச்சிவபெருமானையே சரணமடையும்படி கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிருர். தன்னைச் சரணமடையும்படி சொல்லவில்லை. மாயினம் து மகேச்வரம்' என்றபடி மாயை

யைக் கொண்டு உலகைப் படைத்து ஆள்பவர் பரமேச்வரன் என்பது ஸித்தாந்தம். தமேவ என்று ஏவ பதமும் அவரையே சரணமடையும் படி அழுத்தமாகக் கூறுகிறது. ஒரு பதிவ்ரதா ஸ்த்ரீ பரபுருஷனுல் அபகரிக்கப்பட்டாலும். தன் புருஷனையே குறிக்கோளாகக் கொள்வதுபோல, ஈச்வரன் என்ற ச்ருதி வாணி, ப்ரகரணத்தால் நாராயணன் ஸமீபம் கொண்டு போகப்பட்டாலும் பரபுருஷனுகிய அவரைக் குறிக்காது என்பது திண்ணம். மகாகவி காளிதாஸரும்.

அணிமாதி குணேபேத மஸ்ப்ருஷ்ட புருஷாந்தரம், யஸ்மின் ஈச்வர இத்யனன்ய விஷயச் சப்தோ யதார்த்தா க்ஷர : என்று ஸித்தாந்தம் செய்திருப்பது இங்கு காணப்பட வேண்டும்.

## சுலோகம் 40

நாராயணஸ்ய ஹ்ருதயம் ஸுஷிரம் மகாக்னி :
அக்னே : சிகா ச பரமாத்பதம் யதுக்தம் |
ஸர்வோப்யுபாஸன விதே: அயம் அர்த்தவாத :
ச்ரத்தா விசிஷ்ட புருஷா சாணுத் விதேயே ||

வேதாந்த விக்ஞான ஸுநிச்சிதார்த்தா : |

என்ற மந்த்ரத்தால் உபாஸகர்கள், யதாத்மாவாகிய சுத்தமனதுள்ளவர்கள் என்று கூறப்பட்டிருப்பதால்

யதாத்மானே முக்திகாமா : மஹேச்வரம் உபாஸீரந்-என்ற விதி பூர்தி (அடங்கிய மனமுள்ளவர்கள் முக்திக்காகம் பரமசிவனை உபாசிக்க வேண்டும்) ஏற்பட்டுவிட்ட படியால் பரிசேஷந்யாயத்தால், நாராயணன் உபாஸகன் என்ற கக்ஷி அர்த்தமற்றதாகும் அல்லவா, என்ற சங்கை நீக்கப்படுகிறது.

### பதவுரை

நாராயணஸ்ய - நாராயணனுடைய, ஸுஷிரம் - த்வாரமுள்ள, ஹ்ருதயம் - ஹ்ருதய புண்டரீகமும், மகாக்னி : - அதன் மத்தியில் பெரிய ஒளியும், அக்னே : சிகா ச - அந்த ஒளியின் நுனியும், பரமாத்ம பதம் - பரமாத்மாவாகிய பரமேச்வரன் வஸிக்கும், உபாசிக்கப்பட வேண்டிய இடமாக, யதுக்தம் - யாதொன்று சொல்லப்பட்டிருக்கிறதோ, ஸர்வோ அபி - அது

எல்லாம், விதேயே - செய்யப்பட வேண்டிய கார்யத்தில் (ப்ரவ் ருத்தி ஏற்படுவதற்காக) ச்ரத்தா விசிஷ்ட புருஷா சரணத் - சிறந்த புருஷனுன நாராயணனும் மிகுந்த ச்ரத்தையுடன் இந்த உபாசனையைச் செய்திருக்கிருர் என்று யதார்த்தத்தைச் சொன்னதால், உபாஸனவிதே : அயம் அர்த்தவாத : - உபாசனை விதிக்கு இது அர்த்தவாதமாக பூதார்த்தவாதமாகக் கருதப் படுகிறது. பெரியோர்கள் செய்து பயனடைந்த கார்யமிது. ஆதலால் முக்திவேண்டுபவர் பரமசிவனையே, ஹ்ருதய கமல ஜோதியில் உபாசியுங்கள் என்பது ருசியை உண்டு பண்ணுவ தற்காகச் சொல்லப்படுகிறது. கர்ம காண்டத்தில் இம்மாதிரி ஒரு கர்மாவை விதித்துவிட்டு, அதில் சிரத்தை வருவதற்கு தேவேந்திரன் செய்த கார்யமிது என்றெல்லாம் சொல்லப் பட்டிருப்பது ஸஹஜம்.

## சுலோகம் 41

நாராயண ப்ரகரணே ஹ்ருதயம் யதுக்தம்
தஸ்யைவ தத்பவிது மர்ஹதி நாபரேஷாம் |
த்ருஷ்டம் யதிப்ரகரணே யதிபிர் க்ருஹீதம்
பூர்வானுவாக விஹிதம் யதுபாஸனம் தே ||

### பதவுரை

ஹே, பரமேச்வரா ! தே - உம்முடைய, பூர்வானுவாக விஹிதம் – 12-வது அனுவாகத்தில், பொதுவாக விதிக்கப்பட்ட, யதுபாஸனம் தத் - யாதொரு உபாஸனமுண்டோ அது, யதி ப்ரகரணே த்ருஷ்டம் - மனதை அடக்கியவர்களின் ஸந்தர்ப்பத் தில் சொல்லப்பட்டதால், யதிபிர் க்ருஹீதம் - ஸந்யாஸிகளான யதாத்மாக்கள் செய்யும் உபாஸனை என்று தர்சபூர்ணமாஸ ப்ரகரணத்தில் சொல்லப்பட்ட ப்ரயாஜம் என்ற அங்கம், ப்ரகரண ப்ரமாணத்தால் அதோடு மாத்ரம் ஸம்பந்தப் படுவது போல, யத்யுபாஸனு கர்மாவாக விசேஷிக்கப்பட்டது. அது போல், நாராயண ப்ரகரணே யதுக்தம். ஹ்ருதயம் - நாரா யண ப்ரதிபாதகமான 13-வது அநுவாகத்தில் சொல்லப்பட்ட ஹ்ருதய புண்டரீகமும், தஸ்யைவ தத் பவிதும் அர்ஹதி - அந்த நாராயணனுடைய ஹ்ருதயத்தைத் தான் விசேஷித்துச் சொன்னதாக ப்ரகரண ப்ரமாணத்தால் கொள்ள வேண்டும்

அபரேஷாம் ந பவிதும் அர்ஹதி - மற்றவர்களின் ஹ்ருதய கமலத்தை சொன்னதாக, ஆகத் தகுந்ததில்லை. ஆதலால் தன் ஹ்ருதயத்திலுள்ள, பரமாத்மாவான பரமேச்வரனை முக்திகாமனையால், புத்ரகாமனையால நாராயணன் உபாஸிக்கிறார் என்பது ப்ரகரண ந்யாயப்படிக்கும் தீர்மானிக்கப்படுகிறது.

## சுலோகம் 42

ப்ரம்மோச்யதே பரமஸௌ பரமம் ச தத்வம்
ஜ்யோதி: பரம் ச பரமேச்வர பத்மநாப: |
த்வத் பாவனைக ரஸிகஸ் த்வதனன்ய பாவாத்
மந்த்ரீ யதா கருடபாவனையா கருத்மாந் ||

நாராயணன் உபாசகன் என்று சொன்னால் நாராயண பரம் ப்ரம்ம என்று பரப்ரம்மமாக நாராயணன் கூறப்படுவது எங்ஙனம் பொருந்தும் என்ற சங்கைக்குப் பரிகாரம் சொல்லப்படுகிறது.

### பதவுரை.

பரமேச்வர - ஹே பரமேச்வரனே, பத்மநாப: - தொப்புள் தாமரையிலிருந்து பிரம்ம தேவனை வெளியிட்ட நாராயணன், த்வத்பாவனைக ரஸிக: - உன் உபாஸனை காலத்தில் தன்மயமாக பேதபுத்தியில்லாமல் உபாசிப்பதில் ஊக்கம் கொண்டிருந்தவராதலால், த்வதனன்ய பாவாத் - த்யானம் செய்பவன், த்யானிக்கப் படுபவன் என்ற வேற்றுமையற்று தங்களோடு கலந்து போன தன்மையால் மந்த்ரீ - மந்த்ர ஜபம் செய்யும் விஷவைத்தியன் கருடபாவனையா - தன்னை கருடனாக வேற்றுமையில்லாமல் த்யானிப்பதால், கருத்மான் யதா - எப்படி கருடனாக இருந்து விஷத்தை நீக்குகிறானோ, கருடனாகவும் கௌணமாகச் சொல்லப் படுகிறானோ, ததா - அப்படியே, பரப்ரம்ம - பரப்பிரம்மம் என்னும், பரம் தத்வம் பாதிக்கப்படாத உண்மை - பரம் ஜ்யோதி: - ஒளிக்கெல்லாம் ஒளி, என்றும் பலவாறாக, அஸௌ இந்த நாராயணன், உச்யதே - சொல்லப் படுகிறார். எல்லாப் புராணங்களிலும், மகாபாரதத்திலும், ஹரி வம்சத்திலும், நாராயணர் பரமசிவ உபாசகர் என்பது தெளிவாகக் கூறப்பட்டிருப்பதால் இந்த நாராயணோபநிஷத் நாராயணனை உபாஸகனாகச் சொல்லுகிறதென்பது. ந்யாயப்படியும். உபப்ரம்மணப்

படியும் பொருத்தமே. ஸௌர ஸம்ஹிதையில் ஸாக்ஷாத் வேதாந்த வாக்யானும் நிஷ்டா ருத்ர : பசோ : பதி : என்று யுக்திகளால் நாட்டப் பட்டிருக்கிறது.

'அணோரணீயாந்' என்ற முதலநுவாகத்தில் தஹரோபாஸனவிதியும், அதன் பலனும், உபாசிககப்பட வேண்டிய தெய்வத்தின் மஹேச்வரன் என்ற நாமமும் சொல்லப்பட்டு, ருதம் ஸத்யம் என்ற 3-வது அனுவாகத்தில் கிருஷ்ண பிங்களம், ஊர்த்தவரேதம் விருபாக்ஷம் என்ற அஸாதாரண உருவங்கள் சொலலப்பட்டு, தஹரவித்யா முடிவு ஏற்பட்டிருப்பதால், நடு அநுவாகமான நாராயண அநுவாகம் ஸஹஸ்ரசீர்ஷம் தேவம் முதலாக ஆரம்பிக்கப்படுவது ஸந்தம்சம் ந்யாயம், பாரி சேஷ்ய ந்யாய முதலிய ந்யாயங்களைக் கொண்டு நாராயணன் தஹரவித்யோபாஸகன் என்பதைக் குறிப்பிடுவதாகவும், அவர் உபாஸ்யரல்ல என்றும், தனியாக அவர் உபாஸன விதியை அச்ருதமானதைக் கல்பிக்க ந்யாயம் இல்லை என்பதும் இது வரைக் கூறப்பட்டது. நாராயணர் மஹேச்வர உபாஸகர் என்பது இதிஹாஸ புராணங்களில் விளக்கமாகக் கூறப்பட்டிருப்பதால் மத்யமாநுவாகம் உபாஸகன் என்பது சொல்லப்படுகிறது. ஆரண்யபர்வம், த்ரோணபர்வம், கர்ணபர்வம், ஸௌ ஷுப்திக பர்வம் சாந்தி பர்வம் இந்த இடங்களில் ஷை விஷயம் விளக்கப் பட்டிருப்பது காண்க. பெரியோர்கள் செய்து பயனடைந்த இந்த தஹரோபாஸனையை, மஹேச்வரோபாஸனையை முக்திக் காகவும் புக்திக்காகவும் அனைவரும் செய்ய வேண்டுமென்பது மூன்று அநுவாகங்களின் ஏகவாக்யதா லப்த தாத்பர்யமாகும்.

இங்கு ஓர் சங்கை நாரயணாத்மா என்பதற்கு நாராணனுடைய அந்தர்யாமி பரமேச்வரன் உபாஸ்யன் தன் ஹ்ருதய புண்டரீகத்தில் ஹரி ரீச்வர : என்ற விஷ்ணு புராண வசனம் மாந்த்ரீகன் தத்பாவனையால் கருடனாவதால், கருடன் என்று சொல்லப்படுவது போல ஈச்வரோபாஸனையால் ஈச்வரனாதலால் அபேதமாகச் சொல்லப்படுவது கூடகமான ஸூசகம்; நாராயணன் உபாஸகன் என்ற ஸித்தாந்தத்துக்கு என்பதும் பொருந்தாது, ஏனெனில் நாராயண பரப்ரம்ம" என்று பரப்ரம்மமாக நாராயணன் விளக்கப் பட்டிருக்கிறார் ஆதலால் பத்ம கோசப்ரதீகாசம் என்று வர்ணிக்கப்படும் ஹ்ருதயம் புண்டரீகம் நாராயண உபாஸகனுடைய ஹ்ருதய கமலமல்ல, மற்ற உபாஸகருடைய ஹிருதய கமலம்; தஸ்யமத்யே வன்ஹி சிகா என்பதால், அணுவாகிய ஜீவன் சொல்லப் படுகிறான். தஸ்யா : சிகாய என்பதால் ஜீவாத்மாவால் அந்தர்யாமியான நாராயணன், முன் பரப்ரம்மாகச் சொல்லப்பட்டவர் உபாஸ்ய

மாகச் சொல்லப்படுகிறார். ஸ ப்ரம்மா, ஸ சிவ : என்ற மந்த்ரத்தால் ப்ரம்மா, சிவன், இந்திரன் முதலிய ஆதிகாரிக புருஷர்கள் உபாஸ்ய விபூதிகளாகக் கூறப்படுகிறார்கள், அந்த விபூதியில் நாராயணபத மில்லாததால், சிவபதம இருப்பதால், நாராயணன் தான் உபாஸ்யன். சிவன் உபாஸ்யனாக முடியாது — என்ற சங்கைக்குப் பதில் :—

பத்ம கோச ப்ரதீகாசம் என்று குறிக்கப்படும் ஹ்ருதய கமலம் நாராயணனுடையதுதான். மற்றவர்களின் ஹ்ருதய கமலம் பூர்வாநுவாகத்திலேயே, தஹ்ரம் விபாபம் என்ற வாக்யத்தால் உபாஸனா விதியின் பக்கத்தில் குறிக்கப்பட்டு விட்டது. மறுபடியும் சொல்லப்படுவது, உபாஸகன் நாராயணன் தன் ஹ்ருதய கமலத்தில் பரமேச்வரனை உபாசித்தான் என்பதை விளக்குவதற்காகவே. பரமாத்மா வ்யவஸ்தித : என்பது பரமேச்வரனைத்தான் குறிக்கிறது. த்யாதா - நாராயணன், த்யேயன் அவர் ஹ்ருதயகமலத்தில் பரமாத்மா மஹேசன். ஸப்ரம்ம ஸ சிவ: ஸ ஹரி : ஸேந்த்ர : என்று விபூதி வாக்ய பாடம். அதில் ஹரி பதத்தால் விஷ்ணுவும், சிவபதத்தால ருத்ரனும். முத்தொழில் ஆதிகாரிக புருஷர்கள் ப்ரம்ம, விஷ்ணு ருத்ரர்கள், த்ரிலோகாதிபதி இந்திரனைப்போலக் கூறப்பட்டு பரமேச்வரனுடைய விபூதியாகச் சொல்லப் படுகிறார்கள். ஸ ஹரி : என்ற பாடம் சில சாகையில் இல்லை. ஆயினும் ஸோக்ஷர : பரம : என்ற பாகத்தால் நாராயணன் பரமேச்வரன் விபூதியாகக் கூறப்படுகிறார்.

விச்வம் நாராயணம் தேவம் அக்ஷரம் பரமம் ப்ரபும் என்ற முனிவாக்யம் நாராயணனைப் பல பதங்களால் கூறி மகிமையைத் தெரியப்படுத்துவதுபோல பரமம் அக்ஷரம் என்று கூறியிருப்பதால் இங்கு விபூதி வாக்யத்தில் அந்த நாராயணனைக் குறிப்பிடுவதுதான் ப்ரத்யபிஞ்ஞா ப்ரமாணத்துக்கு உகந்ததாகும். பிரம்மாண்ட புராணத்தில இந்த விபூதி வாக்கியம் அர்த்தத்தால் அநுவதிக்கப்பட்டிருப்பதும் இதற்கு ஆதாரமாகும்.

ஸ ப்ரம்மா ஸ சிவஸ் ஸேந்த்ர : ஸோச்யுத : பரமஸ் ஸ்வராட் - அச்ச்யுத பதம கூறப்பட்டிருக்கிறது ஸ்வராட் - தன் சொந்தமான ஸவரூபத்தில் விளங்கும் ஈச்வரன் என்பதால், இவர்கள் ஈச்வரன் விபூதிகள் என்பது விளக்கம்.

ருதம் ஸத்யம் என்ற மூன்றாவது அநுவாகம் ஸ்வராட் பத விவரணமாக ஏற்பட்டிருப்பது ஈச்வரனைக் குறிக்கும். கைவல்

யோபநிஷத்திலும் 'உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும்' முதலிய மந்த்ரங்களால் உபாஸ்யன் பரமேச்வரன் என்பது ஸம்வாத மாகும் இங்கு.

லிங்க பூயஸ்த்வாத் தத்ஹி பலீயஸ் ததபி என்ற உத்தர மீமாம்ஸா சாஸ்திரத்தின் 3-3-44 வ்யாஸ ஸூத்ர ஸ்ரீ சாங்கர பாஷ்யமும், ஸ்ரீ ராமானுஜ பாஷ்யமும் விமர்சகர்களால் கவனிக் கப்பட வேண்டிய விஷயம். சங்கரர் அடுத்த பூர்வ விகல்ப: என்ற ஸூத்ரத்தின் முதல் ஸூத்ரமாக ஒரே அதிகரணமாக பாஷ்யம் செய்திருக்க, பின் வந்த ராமானுஜர் 3-3-44-வது ஸூத்ரத்தைத் தனி அதிகரணமாக வ்யாக்யானம் செய்துள் ளார். அதில் இந்த ஸஹஸ்ர சீர்ஷம் என்ற நாராயண அநு வாகத்தை விஷயவாக்யமாக எடுத்துக் கொண்டு விசாரித்து நாராயணன் தஹர வித்யாவில் மட்டும் உபாஸ்யனல்ல; மற்ற பிரம்ம, பரமாத்மாதி, பரவித்யா எல்லாவற்றிலும் நாராயணன் தான் உபாஸ்யர்; மற்று மஹேச்வரன் உபாஸ்யன் அல்ல என்று வ்யாஸர் அபிப்ராயப்படுகிறார் என்றும் ஸந்தம்ச ந்யாயத்தை ஒப்புக்கொள்ளாமல், இந்த நாராயண அநுவாகம் இந்த ப்ரகரணத்திலிருந்து லிங்கத்தை அனுஸரித்து அப்புறப் படுத்தி அர்த்தம் செய்யப்பட வேண்டும் என்றும் எழுதுகிறார். சங்கரர் அப்படி வ்யாக்யானம் செய்யாமலிருக்க ராமானுஜ பாஷ்யம் வேறாக வந்திருப்பதிலிருந்து அவருக்குப் பூர்வ காலத்திய சிதிகண்டபாஷ்யப்படி ஏற்பட்ட அபிப்ராயத்தை தூஷிக்க, இப்படி வ்யாக்யானம் ஏற்பட்டிருக்கலாம் என்பது ஊகிக்க வேண்டியிருக்கிறது.

இங்கு நமது ஹரதத்தருடைய சிதி கண்டபாஷ்யானுஸாரி விசாரத்தையும் பிறகு ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர், ஸ்ரீமத் நீலகண்ட தீக்ஷிதர், வித்யாவ்ருத்தி முதலிய 5 க்ரந்தங்கள் எழுதிய மாங்குடி மணிய சிவனார், ஐவர்களின் விசார முறையை யும், ஸ்ரீ ராமானுஜபாஷ்யானுஸாரி விசாரத்துடன் ஒத்துப் பார்த்து விமர்சகர்கள் நன்கு யோஜிக்க வேண்டும். விரிவாகும் என்று விமர்சன ப்ரகாரம் இங்கு எழுதப்படவில்லை.

## சுலோகம் 43

கீதாஸு யோகஜ விபூதி விபாவநாய
நாராயண : சிவபதம் ப்ரதிவாசமூசே |
யோகந் நிசாமய மகேச்வர கோசரம் மே
திவ்யம் ததாமி தவ சக்ஷுரிதி ப்ரஸன்ன : ||

நாராயணனுடைய மகிமையைத் தெரிவிக்கும் கீதைகளிலிருந்தும் நாராயணன் பரமேச்வரனுடைய உபாஸகன் என்பது,—தெளிவு என்று விளக்கம் செய்கிறார்.

### பதவுரை

திவ்யம் சக்ஷு : ஞானக்கண்ணை, தவ—உனக்கு, ததாமி - கொடுக்கிறேன். மஹேச்வர கோசரம் - மஹேச்வரனை உபாஸித்ததால் கிடைத்த, தத்விஷயமான, மே—என்னுடைய யோகம - உபாஸனு பலமான விச்வரூபத்தை, நிசாமய - பார். இதி - என்று, ப்ரஸன்ன :— ஸந்தோஷமடைந்த, நாராயண:- நாராயண அவதாரமாகிய வாஸுதேவன், பகவத் கீதாசார்யனான கிருஷ்ணன், கீதாஸு - கீதையில், யோகஜ விபூதி விபாவனுய - ஈச்வர உபாஸனையால் உண்டான விச்வருபத்தை ப்ரதிவாசம் - பதில் வார்த்தையால் ஊசே - கூறினார்.

பச்யமே யோக மைச்வரம் - ஈச்வர உபாஸனு ப்ராப்தமாகிய யோக பலத்தை. விச்வரூப பாவத்தைப்பார், இது உன் கர்மக் கண்ணால் பார்க்கமுடியாது, அதற்காக ஞானக்கண்ணைத் தருகிறேன். மே யோகம் என்பதால், விஷ்ணுவிற்கு கர்த்த்ருத்வ போக்த்ருத்வமும். ஐச்வரம் என்ற சைஷிக தத்தித ப்ரத்யயத்தால் அப்பயன் ஈச்வர உபாஸனு ப்ராப்த மென்பதும் நன்கு சொல்லப்பட்டிருப்பதால். நாராயணன் உபாஸகன் மஹேச்வரன் உபாஸ்யன் என்ற ந்யாய ஸித்த அர்த்தம் நிலை நாட்டப்படுகிறது.

ஏவ முக்த்வா ததோ ராஜன் மஹாயோகேச்வரோ ஹரி: |
தர்சயாமாஸ பார்த்தாய பரமம் யோகமைச்வரம் ||

என்ற பல இடங்களைக் குறிப்பதற்காக இங்கு கீதாஸு என்று பன்மை உபயோகப்பட்டிருப்பது காண்க.

## சுலோகம் 44

த்வா மந்தரேண ந கதஞ்சி துப்ாஸனீயம்
அன்யம் ப்ரவீதி ஸசிவஸ்துதி ரந்தகாரே |
யத் ப்ரம்மசப்த ஸமபிவ்யவஹார யோகாத்
ஸம்ஹார காரிணி ஹரே, சிவசப்த மாஹு : ||

விபூதி வாக்யத்திலுள்ள ஸ சிவ :

என்ற பாகத்தால் சிவன் உபாஸ்யனாக இருக்க முடியாது என்ற சங்கை நீககப்படுகிறது.

### பதவுரை

அந்தகாரே - யமனை அழிந்த கடவுளே ! ஸசிவஸ்துதி :— ஸ சிவ : என்ற அர்த்தவாத பாகம், த்வாமந்தரேண-உம்மைத் தவிர, அன்ய (உபாஸனீயம் - வேறு ஒருவரை உபாஸ்யாரக, கதஞ்சித் - எவ்விதத்திலும், ந ப்ரவீதி - கூறவில்லை, யத் - எந்தக் காரணத்தால், ப்ரம்ம சப்த ஸம்பிவ்யவஹார யோகாத்- ஆதிகாரிக இந்திரனைக் குறிப்பிட்டிருப்பதால், ப்ரம்ம சப்தமும் ஜகத்தின் படைப்பவனான ப்ரஜாபதி என்ற ஆதிகாரிக புருஷனைக் குறிக்குமாதலால், அவர்களுடன் கூறப்பட்டிருக்கும் சிவபதமும் ஸம்ஹாரத் தொழில் புரியும் ஆதிகாரிக புருஷனாகிய காலாக்னி ருத்ரனைத்தான் குறிக்குமாதலால், ஸம்ஹார காரிணி ஸம்ஹாரத் தொழிலைப் (முத்தொழிலில் மூன்றாவது தொழிலைப்) புரிய நியமிக்கப்பட்ட ஆதிகாரிக புருஷனாகிய காலாக்னி ருத்ர னிடத்தில், அவனைக் குறிக்கும் ஹரனிடத்தில், சிவ சப்த மாஹு :— சிவபதம் விபூதி வாக்யத்தில் குறிக்க வேண்டி உபயோகப் படுத்தப்பட்டிருப்பதாக சொல்லுகிறார்கள்.

## சுலோகம் 45

விச்வாதிக : த்வமஸி விச்வமயம் முராரி :
யக்ஞேச்வர : த்வமஸி யக்ஞமமும் க்ருணந்தி |
ஆத்யா ஜகத் ப்ரக்ருதிரேஷ பவாந் நிமித்தம்
ஆத : கதந்நு பகவன் ! யுவயோ ரபேத : ? ||

சிவபதம் காலாக்னி ருத்ரவாசகம் என்பது கைவல்யோப நிஷத்தில் தெளிவு. பல புராணங்களில் ஹரி, ஹர, அபேதம் சொல்லப்பட்டிருப்பதால். அதையனுஸரித்தும் பதிம் விச்வஸ் யாத்மானேச்வரம் சாச்வதம் சிவம் அச்யுதம் என்ற மந்திரத்தின் நடுவில் உபாஸ்ய வஸ்துவை பராமர்சிக்கும் போது. சிவம் அச்யுதம் என்ற பதங்களால், தெளிவாக, ஹரியும் ஹரனும் உபாஸ்ய வஸ்து ஒன்றுதான் என்று அபேதம் சொலலப்பட்டிருப்பதால் ஹரன் உபாஸ்யன். ஹரி உபாஸகன் என்று நாராயணோப நிஷத் தாத்பர்யார்த்தம் சொல்வது யுக்தமாகாது என்ற சங்கைக்கு, விருத்தமான தர்மங்கள் கொண்ட ஹரி, ஹரர்களுக்கு. அபேதம் சொல்வது இருட்டுக்கும் வெளிச்சத்துக்கும் அபேதம் சொல்வதுபோல் பிழை என்று எடுத்துக் காட்டுகிறார்.

## பதவுரை

த்வம் - நீர், விச்வாதிக: அஸி - உலகத்திலுள்ள எல்லாவற்றிற்கும் மேலானவராக இருக்கிறீர். விச்வாதிகோ ருத்ரோ மகர்ஷி என்பது சுருதி. அயம் முராரி: விச்வம் - முரன் என்ற அஸுரனைக் கொன்ற இந்த விஷ்ணுவோ, விச்வமாக, உலகமாக இருக்கிறார். 'விச்வம் நாராயணம் தேவம்' என்ற சுருதி நாராயணனை உலகமாகப் பறைசாற்றுகிறது. த்வம் யக்ஞேச்வரோஸி - நீர் யாகங்களுக்குத் தலைவராக இருக்கிறீர்.

காதபதிம், மேதபதிம் ருத்ரம் ஜலாஷ பேஷஜம்
ஆவோராஜானம் அத்வரஸ்ய ருத்ரம்

என்ற சுருதிகள் காண்க. அமும் - இந்த நாரயணனை யக்ஞம் யக்ஞரூபமாகத் துதிக்கிறார்கள்.

(யக்ஞோ வை விஷ்ணு என்பது சுருதி) ஏஷ: - இந்த நாராயணன். ஆத்யா ஜகத் ப்ரக்ருதி: - ஜகத்தைப் படைத்து நிலையாக விருக்கச் செய்யும் முதலாவது (ஈச்வரனுடைய) சக்தியாவார் - வாஸுதேவ: பராக்ருதி: (ப்ரக்ருதி:) என்ற சுருதியும், கூர்மபுராணம், விஷ்ணு புராண வசனங்களும் இதற்கு ப்ரமாணமாகும். மகேச்வரனைப் புருஷனாகவும், நாராயணனை ப்ரக்ருதியென்ற ஸ்த்ரீயாகவும் புராணங்கள் கூறுகின்றன. ஐயப்பன் உத்பத்திவரலாறும் இதைத் தெளிவாக்கும். பவாந் - தாங்கள் நிமித்சம் - நிமித்தகாரணமாக, (குயவன் மண்ணுக்குப்போல்) இருக்கிறீர், பகவன் - ஹே பகவானே, ஆத: - இந்த மூன்று

விருத்த தர்மங்களுடன் கூடியிருப்பதால், யுவயோ : - உங்கள் இருவர்களுக்கும் கதந்நு - எந்த விதமாக, அபேத : - அபேதம் (வேறானவர்கள் இல்லை - ஒருவரே என்பது) அங்கீகரிக்க முடியும்? சைத்ய, ஔஷ்ண்யமுள்ள ஜலமும், நெருப்பும் ஒன்றெனச் சொல்லலாமா ? புராணங்களில் சில வசனங்களால் ஹரி, ஹர அபேதம் எழுதிவைக்கப்பட்டிருப்பது, உண்மைக்கு விரோதம். ஸூத ஸம்ஹிதையில் பரமேச்வரன், விஷ்ணு பிரம்மாவைக்காட்டிலும் பெரியவர்; ஸமமாகக் கொள்ளக் கூடாது என்று தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. இவ்விதம் முரண்பாடு காணப்படும் போதும், ப்ரம்மவிஷ்ணு ருத்ரேந்த்ராஸ்தே ஸப்ரஸூயந்தே ந காரணம் - என்ற சுருதியை அனுஸரித்தும். ஆதித்ய புராணம், மகாபாரதம் முதலிய க்ரந்தங்களை யனுஸரித்தும் சொல்லும் ஸூதகீதா வசனங்கள் தான் க்ராஹ்யமாகும். ஸ்ம்ருத்ய நவகாசாதிகரண ந்யாயத்தால் வ்யாஸாசார்யார் தீர்மானித்த விஷயமாகும். அல்லது ஹரிஹர அபேதம் சொல்லும் வாக்கியங்களுக்கு ஈச்வரமூர்த்தி விசேஷங்களான ஹரிமூர்த்திகளும் அந்த அந்த பலனைக் கருதி உபாஸிக்கப் படலாம் என்ற கூர்ம புராண வசனப்படி விரோதமற்றவைகளாகக் கருதப்படலாம், மகாதேவோ அல்ப : என்று சொல்வது மே மாதா வந்த்யா என்ற வாக்யம்போல் முன் பின் முரண்பாடான அர்த்தம் கூறும் வாக்யம். மகாதேவன் = தேவர்களுக்கெல்லாம் பெரியவன் தேவர்களுக்கெல்லாம் பூஜிக்கப்படுகிறவன் எப்படி சிறியவனாக இருக்க முடியும் ? விஷ்ணு புருஷோத்தமன் என்று கூறப்பட்ட போதிலும், பிறவியுள்ளவர்களுள் சிறந்தவன் என்பதுதான் கிடைக்கும். மேலும் மகாதேவ : என்பது வாசகசப்தமாதலால் சுருதி எனப்படும், புருஷோத்தமன் என்பது அஸாதாரணமான வாசகசப்தமல்ல, ஆதலால் லிங்க மெனப்படும். சுருதி லிங்காதிகரண ந்யாயப் படி.. சுருதியான மகாதேவ : என்ற பதம் பல முள்ளதால், சிவன் சிறந்தவனாவான் விஷ்ணு உபாஸகனாகவும் பரமசிவனை உபாஸித்து வரம சக்தி பெற்றதாலும் மற்ற ஜீவராசிகளுக்குள் சிறந்தவராவார், ஆனால் பரமசிவனுக்குத் தாழ்ந்தவரே, ஸமமாகமாட்டார். என்பது நான் சுருதி ஸ்ம்ருதி புராண இதிகாஸங்களின் முக்கிய தாத்பர்யம்.

சிவ புராணங்கள் தாமஸ புராணங்கள் என்ற வாசகம் பொருந்தாது, சுத்த ஸ்படிக ஸங்காச மூர்த்தியான. ஸத்வகுண ப்ரதானரூப முள்ள, ஞான ப்ராதானமான பரமசிவனை ப்ரதிபாதிப்பதால் விஷயத்தால் தாமஸமல்ல, கர்த்தா வ்யாஸர் தாமஸர் என்றால், விஷ்ணுபுராணாதிகளும் தாமஸமாகிவிடும்

வைஷ்ணவ புராணங்களில் விஷ்ணு பெரியவர் என்றும், சிவ புராணங்களிலும் சிவன் பெரியவர் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இம்முரண்பாட்டை பராசர புராணம் நன்கு விளக்கி உண்மையை எடுத்துக் காட்டுகிறது. விஷ்ணு சிவாம்சத்தைக் காட்டிலும் பெரியவர் என்பதுதான் விஷ்ணுபுராணங்களின் தாத்பர்யம். பரமேச்வரனைக் காட்டிலும் பெரியவனே கிடையாது, அஷ்டாதச புராணானாம் நிஷ்டா காஷ்டா மஹேச்வர: என்பது ஸித்தாந்தம். த்ரிமூர்த்திகள் பரமேச்வரனிடமிருந்து உண்டானார்கள், அவர் விபூதிகள் என்பது திண்ணமாக நிலை நாட்டப்பட்டிருப்பதால், பரமேச்வரன்தான் பெரியவர்.

அவர் விபூதிகளான மூவர்களிலும், ருத்ரன் மற்ற இருவரைவிடப் பெரியவன் என்பது பாத்ம புராணத்திலுள்ள பிதா புத்ர ஸம் வாதத்தாலும், விஷபக்ஷணம், ததீசி மகரிஷியின் மகிமை, உபமந்யு சரித்திரம், தேவதாருவன ரிஷிகள் சாபக் கதை, ப்ருகு சாபாக்யானம் முதலியவைகளால் நிர் விவாதமாக ஒப்புக்கொள்ளப்படவேண்டிய விஷயமாகும்.

சம்ப்வாயுஷி இயத்தா ந காலகாலோ யத: சிவ: என்ற வாக்யத்தால் ஸதாசிவன்தான் காலத்துக்கு உட்படாத பெரியவர்.

## சுலோகம் 46.

விச்வாத்மன: ஸ்துதிஷு விச்வபதித்வவாத:
ஸங்கச்சதே ஸ்துதிதயைவ ரதாங்கபாணே: |
விச்வஸ்ய பத்யுரத விச்வ தயாபிதானம்
நாலம் குணய குணக்ருஹ்ய நிகர்ஷஹேது: ||

நாராயணன் விச்வாத்மகன் என்றால், பதிம் விச்வஸ்யாத்மேச்வரம் என்ற நாராயண அநுவாக மந்த்ரத்தில் விச்வபதி நாராயணன் என்று கூறப்படுவது எங்ஙனம் பொருந்தும் என்ற சங்கை தீர்க்கப்படுகிறது.

### பதவுரை

*விச்வாத்மன:* உலகத்தை ஸ்வருபமாகக் கொண்ட, *ரதாங்க பாணே:* - சக்ரபாணியான நாராயணனுடைய, *ஸ்துதிஷு* - ஸ்தோத்ரங்களில், *விச்வ பதித்வவாத:* உலகத்துத் தலைவன்

என்ற சொல், ஸ்துதிதயைவ ஸங்கச்சதே - ஸ்தோத்ரமாகவே பொருந்தும். விச்வஸ்யபத்யு : - உலகத் தலைவனுடைய, அத - பூராவும், விச்வதயாபிதானம் - உலகமாக இருப்பதாகச் சொல்வது, குணக்ருஷ்ய நிகர்ஷ ஹேது : - குணங்களைக் குறைக்கும் காரணமாக இருப்பதால், குணயநாலம் - ஸ்தோத்ரமாக முடியாது. உயர்ந்த குணங்களைச் சொன்னால் ஸ்தோத்ரமாகும். தாழ்ந்த குணங்களைச் சொல்வது நிந்தையாகும் ஆதலால், உண்மையில் விச்வ ரூபமான நாராயணன், ஸ்துதிக்காக விச்வபதியாகச் சொல்லப்படுகிறான். உண்மையாக விச்வபதியாகக் கொண்டால், விச்வனாகச் சொல்வது நிந்தையாகுமாதலால் பொருந்தாது. ஆகவே உண்மையில் விச்வனை ஸ்துதிக்காக சுருதி விச்வபதி என்று சொல்லுகிறது.

## சுலோகம் 47

விச்வம் மஹேச்வர! பவாந் அதிதிஷ்டதீதி
விச்வாத்மதாம் உபசரந்தி யதாகமாஸ்தே |
தத்பண்டிதா : விதிதவேத ரகஸ்ய சீலா :
ஜானந்தி மந்த மதயஸ்து ததேவ ஸத்யம் ||

சுருதிகளில் ஸர்வோவை ருத்ர : என்று ருத்ரனும் விச்வாத்மகனாகச் சொல்லப் படுகிறானே என்ற சங்கை நீக்கப்படுகிறது.

### பதவுரை

மகேச்வரா ! விச்வம் - உலகத்தை, பவான் - தங்கள் அதிதிஷ்டதீதி - தாங்குதலாக இருந்து கொண்டு தரிக்கிறீர் - என்ற காரணத்தால், ஆகமா : - ஸர்வோவை ருத்ர : என்ற வாக்கியங்கள், தே - உமக்கு, விச்வாத்மதாம் - உலக ஸ்வரூபமாக இருக்கும் தன்மையை உபசரந்தி - கௌணமாகச் சொல்லுகின்றன. இதியத் - என்பது யாதொன்று உண்டோ, தத் - அதை, விதித வேத ரகஸ்யசீலா : - அறியப்பட்ட உபநிஷத் வாக்கியங்களைத் திருப்பித் திருப்பி உபக்ரமாதி ஆறுவிதமான தாத்பர்ய லிங்கங்களால் பரிசீலனை செய்யும் ஸ்வபாவமுள்ளவர்களான பண்டிதா : - வித்வான்கள், ஜானந்தி - அறிகிறார்கள். மந்தமதயஸ்து - உழைப்பில்லாத மூடர்களோ, ததேவ - அந்த விசவாத்மதயை ஸத்யம் - லக்ஷணாவ்ருத்தி யில்லாமல் உண்மையானதென்று, ஜானந்தி - அறிவார்கள்.

புராணங்களில் பரமேச்வரனுடைய ஸத்யோஜ் ஜாதாதி பஞ்ச மூர்த்திகளும் பவாதி அஷ்டமூர்த்திகளும், அதிஷ்டாதா வாக இருப்பது பற்றியும், ப்ரவேச ச்ருதிகளை யனுசரித்தும், விச்வாதிஷ்டாதாவாகிய பரமசிவன் விச்வாத்மகனாக சொல்லப் படுகிறார். என்பது நன்கு விளக்கப்பட்டிருப்பதை இந்த சுலோ கத்தில் கூறிகிறார். ஆதலால் ருத்ரனுடைய விச்வாத்மகத்வம் கௌணம். அதிஷ்டாத்ருத்வம் முக்கியம் நாராயணனுடைய விச்வாத்மகத்வம் முக்கியம். விச்வபதித்வம் ஸ்துதி ரூபம். என்று வைலக்ஷண்யம் இரண்டு ச்லோகங்களால் விளக்கப் பட்டது.

## சுலோகம் 48

துப்யம் நமோ விதததீச்வர ! தந்தமர்த்தம்
ஆதிஷ்டதே ஸகல கர்மஸு விச்வதர்சீ |
ஸர்வானுவாதமிதம் உக்த ஸமர்த்தனாய
காத்யாயனோ முனிருதாஹரதிஸ்ம க்ருஹ்யே ||

## பதவுரை

ஈச்வர - பரமேச்வரனே ! ஸர்வதர்சீ - எல்லாம் அறிந்த, காத்யாயன : முனி : - காத்யாயன மகரிஷி, க்ருஹ்யே—க்ருஹ்ய ஸூத்ரத்தில், தந்தமர்தத மாதிஷ்ட தே - அந்தந்த மார்க்கம், மரம் மலை, முதலியவைகளுக்கு அதிஷ்டாதாவாகிய. துப்யம் - உமக்கு, ஸகல கர்மஸு - லௌகீக, வைதீக ஸகல கர்மாக்களில், நமோ விததத் - .நமஸ்காரத்தைச் செய்யும்படி மந்த்ரங்களை விதிப்பவராகக் கொண்டு, உக்த ஸமர்த்தனாய - சொல்லப்பட்ட விஷயத்துக்கு மந்த்ரங்களுக்கு ஆதாரமாக, அனுகுணமாக, இதம் - இந்த, ஸர்வானுவாதம் - ஸர்வோவை ருத்ர : ருத்ரோ ஹ்யேவை தத் ஸர்வம், என்ற இந்த இரண்டு மந்த்ரங்களை, உதாஹரதிஸ்ம - எடுத்துக் காட்டியிருக்கிறார்.

நமோ ருத்ராய பதிஷதே, வனஸ்பதிஷதே, கிரிஷதே, ஸ்வஸ்தி மா ஸம்பாரய — — — என்று

நமஸ்கார மந்த்ரத்தை விதித்து, ஸர்வாத்மக மந்த்ரத்தை ஆதாரமாகக் காண்பித்தால்.ஸர்வாத்மகமந்த்ரத்துக்கு ஸர்வாதி ஷ்டாதா என்றுதான் அர்த்தம் என்பது தெளிவாகிறது.

உண்மை ஸர்வஸ்ருபியானால், நமோருத்ராய பதே, வனஸ்பதயே, கிரயே, ஸ்வஸ்தி யா ஸம்பாராய என்ற மந்த்ரத்தைக் காத்யாயனர் விதித்திருக்க வேண்டும். யோ ருத்ரௌ, அக்னௌ யோ அப்ஸு, ய ஓஷதீஷு, யோருத்ரோ விச்வா, புவனு விவேச தஸ்மை ருத்ராய நமோ அஸ்து - என்ற மந்த்ரம் பரமேச்வரனை ஸர்வாதிஷ்டாதாவாகக் கூறுவதால் ஸர்வாத்மகத்வம் பரமசிவனுக்கு கௌணம் என்பது திண்ணம்.

## சுலோகம் 49

ஸ்தானம் யதாந்தர முபாஸ்தி ருபாஸகோ வா
யா ஸா பராபரதயா விவிதா விபூதி : |
யத்வா புன : விஷமநேத்ர முபாஸி தவ்யம்
நாராயணோப நிஷதாஹ ததத்ர ஸர்வம் ||

கீழே விவரிக்கப்பட்ட நாராயணோபநிஷத்தின் அர்த்தத்தை ஒன்று சேர்த்து முடிவு சொல்லப்படுகிறது.

## பதவுரை

யத் - யதொரு, ஆந்தரம் - ஹ்ருதயம் என்று சொல்லப் படுகின்ற, ஸ்தானம் - உபாஸனையின் இடம் உண்டோ, யா ச உபாஸ்தி :—யாதொரு உபாஸனையென்ற செய்கையுமுண்டோ, யஸ்யோபாஸக : - யாதொரு உபாஸிப்பவன் வேண்டுமோ, பராபரதயா - உயர்ந்ததும் தாழ்ந்ததுமாக, விவிதா - பலவாறன, யா ஸா விபூதி : - யாதொரு அந்த பிரஸித்தமான விபூதி என்ற மகிமையுண்டோ, விஷம நேத்ராக்யம் - முக்கண்ணன், மூவர்களின் தந்தை மூன்று சக்திகளுடன் கூடியவர், மூன்று மாத்திரைகள் உள்ள ஓங்கார ப்ரதிபாத்யன் என்ற, யத் உபாஸிதவ்யம் - யாதொரு உபாஸிக்கப்பட வேண்டிய வஸ்துவோ, தத்ஸர்வம் - அவை எல்லாவற்றையும், நாராயணோபநிஷத் - இந்த நாராயணோப நிஷத்தானது, அத்ர - இந்த வாக்கியங்களில், தஹ்ரம் விபாபம் என்ற மந்த்ரத்தில் இடத்தையும் தஸ்மிந் யதந்தஸ் ததுபாஸிதவ்யம், என்ற மந்த்ரத்தில் உபாஸனு க்ரியா விதியையும், ஸஹஸ்ர சீர்ஷம் தேவம் - என்ற 2-வது அநுவாகத்தில் உபாஸகனை நாராயணனையும், ஸப்ரம்மா ஸ சிவ : ஸ - ஹரி : ஸேந்த்ர : என்ற மந்த்ரத்தில் உபாஸ்ய

ஈச்வர விபூதியான ப்ரம்மா, விஷ்ணு, காலாக்னிருத்ரன், இந்திரன் முதலிய ஆதிகாரிக புருஷர்களையும்; யத்வாபுனரத்ர - யத் வேதாதௌ என்ற மந்த்ரத்தால் ஓங்காரப்ரதிபாத்ய, மகேச்வரனை உபாஸ்யவஸ்துவையும் ஆஹ - சொல்லுகிறது. ஆதலால இந்த தஹர வித்யா மூன்று அநுவாகங்களால சொல்லப்படுவது, அபேக்ஷிதமான ஸகல அம்சங்களையும் கூறுவதால், பரிபூர்ணமானது. உண்மை இவ்வாறாக, நாராயண அநுவாகம், இங்கு தஹர வித்யாப்ரகரணத்தில் பொருந்தாதென்று லிங்கத்தால் பிரகரணத்தை பாதித்து உத்கர்ஷிககப் படுகிறதென்றும், அந்த அந்த பரவித்யாக்களில் சொல்லப்பட்டிருக்கும் சமபு, பரமாத்மா, பரப்ரம்மா, பரதத்வம், அக்ஷரம் பரமபதம், சிவம், பரம்ஜோதி : என்ற பதங்களை இங்கு அநுவதித்து அவையாவும் நாராயணன்தான் என்று நாராயண அநுவாகம சொல்வதால் இந்த அநுவாகம் பூராவும் லிங்க பூயஸ்தத்வத்தால் ப்ரகரணத்தில் தஹர வித்தையில் அந்வயிக்காமல் உத்கர்ஷிக்கப்பட்டு, ஸகல பரவித்யா உபாஸ்யன் நாராயணன் ஒருவன்தான் மற்ற ஹிரண்ய கர்ப்பன், மஹேசன் அல்ல என்பது நிர்ணயிக்கப் படுகிறது - என்று - 3 3.44 வது வ்யாஸ ஸூத்ரத்துக்கு ஸ்ரீராமானுஜர் பாஷ்யம் பொருத்தமில்லை யென்பதை விமர்சகர்கள் அறியவேண்டும். அந்தர் பஹி : ச என்ற மந்த்ரத்தில் நாராயணன் உள்ளும் வெளியும் வ்யாபித்திருக்கிறான் என்பதில் நாராயணன் உத்தேச்யமாகத்தான் கொள்ள வேண்டும். அப்படியே பிறமந்த்ரங்களிலும் நாராயணன் பரமாத்மா, நாராயணன் பரம்பிரம்மா, நாராயணன் பரம் ஜோதி என்று சொல்வதுதான் பொருத்தம். அப்போது ப்ரகரண பாதத்துக்கு லிங்கமேது? பாரிசேஷந்யாய ஸித்த உபாஸகன் துதியல்லவா? தஹர வித்யா ஸம்பந்தமில்லாவிடில் இங்கு படித்தது வீணாகும். மற்ற எல்லா வித்யாஸம்பந்தம் கிடைத்த நாராயணன், தஹர வித்யா உபாஸ்யன் என்பது ஸித்தமாகாதா? எப்படி பாடஸார்தக்யம் சொல்ல முடியும்.

ஆதலால்தான் அத்வைத பாஷ்யகாரர்கள், அவர்கள் முன்னோர்கள் அனைவரும்.

லிங்க பூயஸ்வாத்தத் ஹி பலீயஸ் ததபி

என்ற ஸூத்ரதைத் தனி அதிகரணமாக பாஷ்யம் செய்யாமல் பூர்வவிகல்ப என்ற பின் ஏழு ஸூத்ரங்களுடன் சேர்தது. எட்டு ஸூத்ரங்கள் எல்லாம் மனஸ்சித:, வாக்சித: என்ற சதபத ப்ராம்மண வாக்யத்திலுள்ள உபாசனையைப் பற்றிய விசாரமாகக் கருதி, அங்கு லிங்கத்தைக் காட்டிலும் ப்ரபலமான சுருதி

முதலியன இருப்பதால், சுருதி லிங்க வாக்யங்கள் மூன்றும் ப்ரகரணத்தைப் பாதிப்பதாகவும், ஸ்வதந்த்ர உபாஸனையென்றும் சயன ப்ரகரணத்தில் படிக்கப்பட்டிருப்பது. சயனத்திலுள்ள பாஹ்ய ஸகல பதார்த்தங்களையும் ஞாபகப் படுத்தி, ஸ்வதந்த்ரமாக உபாஸித்துவிடக் கூடியதைச் சொல்வதற்கென்றும் சொல்லியிருக்கிறார்கள். ஏழு ஸூத்ரங்களுக்கு மற்றவர்களைப் போல வ்யாக்யானம் செய்த ஸ்ரீ பாஷ்யக்காரர் இந்த ஓர் ஸூத்ரத்தை நாராயணோபநிஷத் பரமாகப் பார்த்தது எதற்கோ? விமர்சகர்கள் கவனிக்க! எப்படியாவது நாராயண அநுவாகம் நாராயணன் சிறந்தவர் என்பதைக் காட்டி அவர் மஹேச்வர தஹரோபாஸனையில் உபாஸகர் ஆதலால் இது அனைவராலும் முக்திக்காகச் செய்யத் தகுந்தது. என்பதை வலியுறுத்தவே நடுவில் படிக்கப்படுகிறது, உத்கர்ஷமோ. உபாஸனா விதிகல்பனையோ, பல கல்பனையோ அனுவச்யம் என்பது ந்யாயசித்தம் என்பதை ஸ்ரீ ஹரதத்தர் வற்புறுத்திச் சொல்லுகிறார். இதற்கு ஆதாரமாக வ்யாக்யாதாவாகிய சிவ லிங்க பூபதி வாயவீயஸம்ஹிதையை விரிவாக விளக்குகிறார். ஆதலால் வேதங்களில், புராணங்களில், சாஸ்த்ரங்களில், ஸ்ம்ருதிகளில், எங்கு, எங்கு பரப்ரம்ம சப்தம் காணப்படுகிறதோ, அங்கு அங்கு முக்கண்ணனை பரமேச்வரன்தான் பரப்ரம்ம சப்தத்தின் பொருள் என்பது ஜய துந்துபிகளால் ஸகல உலகங்களிலும் உத்கோஷிக்கப் படட்டும் என்று முடிவுகாட்டியிருக்கிறார்.

நாராயண உபநிஷத் முதலிய எல்லா உபநிஷத்துக்களிலும் சொல்லப்படும் உபாஸனைகளால் உபாஸிக்கப்படுபவர் பரமேச்வரன் என்ற மூன்றாவது லக்ஷணம் அதிவ்யாப்தி, அவ்யாப்தி, அஸம்பவம் என்ற முத்தோஷமற்ற லக்ஷணமாக ஸ்தாபிக்கப்பட்டது.

## சுலோகம் 50

யக்ஞாத்மனா ஸ்வயமஸாவ்ருஷிணோபதிஷ்டா
நாராயணேன பவத: ப்ரதிபாதயித்ரீ |
ஸூக்தம் யதா புருஷ தைவத மந்தகாரே
நாராயணார்ஷ மிதி தத்வ்யபதிஷ்ட மாஹு: ||

நாராயணோபநிஷத் என்ற மஹோபநிஷத் ஈச்வர உபாஸனையைச் சொல்வது என்றால் நாராயண உபநிஷத் என்ற பெயர் பொருந்துமா என்ற கேள்விக்கு விடை விளக்குகிறார்.

## பதவுரை

அந்தகாரே - யமனே யடக்கினவரே! யதா - எவ்விதம் புருஷதைவதம் ஸூக்தம் - ஸஹஸ்ர சீர்ஷா என்று ஆரம்பிக்கும புருஷனை தேவதையாகக் கொண்ட ஸூக்தமானது (16 ரிக்குகள் கொண்டது) நாராயணர்ஷமிதி - நாராயண ரிஷியால் கண்டுபிடிக்கப்பட்டது என்ற காரணத்தால் (சைஷிக அணப்ரத்யயம் வந்திருக்கிறது என்று கருதி) தத்வ்யபதிஷ்டம் - அந்த நாராயண பதத்தினுல் குறிப்பிடப்படுகிறதோ, ததா - அவ்விதமே பவத: ப்ரதிபாதயத்ரீ - உம்மைத் தெரிவிக்கிற, அஸெள - இந்த உபநிஷத், ஸ்வயம் யச்ஞாத் மனு - உண்மையாக யக்ஞஸ்வருபயான, நாராயணேன ரிஷிணு உபதிஷ்டா - நாராயண ரிஷியால் கண்டு பிடிக்கப்பட்டு உபதேசிக்கப் பட்டிருக்கிறது. ஆதலால் இதையும் நாராயணேபநிஷத் என்று சொல்லுகிருர். தேவதை வேருகிலும் கண்டுபிடித்த ரிஷியின் பெயரால் புருஷ ஸூக்த மந்த்ரங்கள் நாராயண அநுவாகம் என்று சொல்லப்படுவதுபோல, மகேச்வரன் உபாஸ்யனுக இருக்கிற நாராயணேபநிஷத், மஹேச்வரோபநிஷத் என்று சொல்லப்படாமல் கண்டு பிடித்த ரிஷி பெயரால் சொல்லப்படுவது பொருத்தமே. புருஷ ஸூக்தத்தில் ப்ரதிபாத்யமான தெய்வம் பரமேச்வரன் தான் புருஷ பதத்தால் சொல்லப்படுகிருன் என்ற விஷயம் லிங்க புராணத்தைக் கவனித்தால் நன்கு விளங்கும்.

## சுலோகம் 51

ஏஷா மஹோபநிஷத் ஆஹ ஹிரண்ய கர்ப்பம்
ஜாதம் த்வதேவ பகவன் ப்ரதமம் ஸுராணும் |
நாராயணுபி ஜனமேனமதாபி மந்தா:
சம்ஸந்தி தத்ர பவத: கதிசித் ப்ரஸூதிம் ||

புருஷோத்தமனுலும் உபாஸிக்கப்படும் ஈச்வரன் நாராயணன் நாபி கமலத்திலுண்டான ஹிரண்ய கர்ப்பன் நெற்றியில் பிறந்தவன் என்ற கொள்கையையும், அப்புராணங்களின் அபிப்ராய பேதத்தையும், இந்த நாராயணேப நிஷத் மேலே நன்கு விளக்குகிறது என்கிருர்.

## பதவுரை

பகவந் - ஹே பகவானே ! ஏஷா மஹோபநிஷத் - இந்த யோ தேவானாம் ப்ரதமம் புரஸ்தாத் - - - ஸப யுனக்து என்ற மந்த்ரமானது, ஸுராணா ப்ரதமம் - தேவர்களுக்கு முந்தினவரான, ஹிரண்ய கர்பம் - ஹிரண்ய கர்ப்பனை, த்வதேவ - உம்மிடமிருந்தே, ஜாதமாஹ - பிறந்தவனாகக் கூறுகிறது. பிரம்மா விஷ்ணுவான பத்மநாபரின் நாபிக்கமலத்திலிருந்து பிறந்தார் என்ற ப்ரமை நீங்கிய நல்ல நினைவுள்ள அறிவைக் கொடுக்க வேண்டும் என்றும் இந்த மந்த்ரம் வேண்டுவது கவனிககத் தகுந்தது. அதா அபி - இப்படி தத்வமிருந்த போதிலும், எனம்- இந்த ஹிரண்யகர்ப்பன் நாராயணாபி ஜனம் - நாராயணனிடமிருந்து நாபிக்கமலத்தில் பிறந்தவராக, மந்தா : சப்ஸத்தி - ந்யாய விசாரத்தால் சுருதியர்த்தம் செய்ய இயலாத மூடர்கள் சொல்லுகிறார்கள். கதிசித் - சிலர், தத்ர - அந்த ஹிரண்ய கர்ப்பனிடத்தில் (அவன் நெற்றியில்) பவத : - உம்முடைய, ப்ரஸூதிம் சப்ஸந்தி - பிறப்பையும் சொல்லுகிறார்கள். புராணங்களில் பிரம்மாவும் விஷ்ணுவும், பரமேச்வரனால் படைக்கப்பட்ட பிறகு தந்தையைக் குறித்துக் கடும் தவம் புரிந்து தந்தைக்குச் சமமான விச்வ ரூபாத்மக மகிமையை அடைந்தார்கள். பிறகு அவ்விருவர்களுக்கும் ஓர் ஸமயம் யார் பெரியவன் என்ற கலகம் நேரிட்டது. அப்போது பிரம்மா விஷ்ணுவைப்பார்த்து என் சரீரத்துக்குள் புகுந்து என் மகிமையைப்பார் என்று சொல்ல விஷ்ணுவும் பிரம்மா சரீரம் புகுந்து மகிமையைப் பார்த்துவிட்டு வெளியே வந்தார். பிறகு விஷ்ணு ப்ரம்மாவைத் தன் சரீரத்தில் புகுந்து தன் மகிமையைப் பார்க்கச் சொன்னார். பிரம்மா விஷ்ணுவின் சரீரம் புகுந்தார். விஷ்ணுவின் மகிமையைப் பார்த்துவிட்டு, வெளியே வரவழியில்லாமல் சிறிது நேரம் தவித்துக் கடைசியில் நாபித்வாரம் வழியாக வெளிவந்தார். பிறகு ஈச்வரனைக் குறித்து பின்னும் கடும் தவம் புரிந்தார். சிலகாலம் கழித்து தவத்தில் உபாஸ்ய மூர்த்தியான ஈச்வரன் உபாஸனா ஸ்தானமாகிய ப்ருமத்யஸ்தானம் என்ற ஆக்ஞாசக்ரத்திலிருந்து தோன்றி, ப்ரம்மாவிற்கு வரம் கொடுத்து அனுக்ரஹித்தார் என்ற விளக்கம் நன்கு காணப்படுகிறது. ஆகவே விஷ்ணுவின் நாபி வழியாக வெளிவந்த ப்ரம்மாவை விஷ்ணு புத்ரன் என்று சொல்வது ஜன்ஹு ரிஷியின் காதிலிருந்து வெளிவந்த கங்கையை, ஜன்ஹுவின் புத்ரி ஜான்ஹவி என்று சொல்வது போல், தவறான அபிப்ராயம். வாயிற்படியின் வழியாக வெளிவருபவனை, வீட்டின் புத்ரன், வாயிற்படியின் புத்ரன் என்று சொல்லலாமா?

உபாஸிக்கப் படுகிற பரமேச்வரன் ப்ருமத்யஸ்தானத்தில் ஆவிர்பவித்ததால், பிரம்மாவின் புத்ரன் என்று சொல்வது தவறு.

## சுலோகம் 52

மத்யே லலாடமரவிந்த புவ: க்ஷணேன
த்ருஷ்டோ பவானிதி க ஏஷ நிகர்ஷ வாத |
யோகாதிரூடமனஸ: சிவ மாத்ருசோபி
ஸ்தானேஷு பஞ்சஸு ந கஸ்ய தவோபலம்ப:||

பிரம்மாவிற்கு பத்மஜன் என்று பெயர்; விஷ்ணுவிற்கு அக்ஷஜன் என்று பெயர்; அவ்விதமே ஈச்வரனுக்கு லலாடஜன் என்று பெயர். இந்தப் பெயர்கள் வெளிவந்த இடத்தைத் தான் குறிக்கின்றன. தந்தையைக் குறிக்கவில்லை யென்பது விளக்கப்படுகிறது.

### பதவுரை

அரவிந்தபுவ :— தாமரையில் வெளிவந்த ப்ரம்மதேவனுடைய, மத்யேலலாடம் - நடு நெற்றியில், பவான் - தாங்கள், க்ஷணேன த்ருஷ்ட :— ஒரு க்ஷணம் வரப்ரஸாதம் அளிக்க ஆவிர்ப்பவித்த ஸ்யயம் காணப்பட்டீர், இத்யேஷ :— என்ற இந்த வாதம், கோ நிகர்ஷவாத :— உம்மைக் குறைவாகச் சொல்லும் வாக்யம் ஆகுமா என்ன ?

தல்லலாடாதபூத் சம்பு: ஸ்ருஷ்ட்யர்த்தம் தத் ந தூஷணம் என்று ப்ரம்மாண்ட புராண வசனம், ப்ரம்மாவிற்கு படைக்கும் சக்தியைக் கொடுக்க வந்த பரமசிவனுக்கு நெற்றியில் ஆவிர்ப்பவித்தது குறைவாகாது. என்று ஸ்பஷ்டமாகச் சொல்லப் படுவது, புலப்படவில்லையா என்று சிவலிங்கபூபதி கேட்கிறார்.

சிவ - ஹே பரமேச்வரா ! யோகாதிரூடமனஸ :— உபாஸனையில் அமர்ந்த மனதை உடைய, மாத்ருசோபி - என்னைப் போன்ற ஸாதாரண ஜனங்களான, கஸ்ய - யாருக்குத்தான், பஞ்சஸு ஸ்தானேஷு - ஹ்ருதய கமலம், கர்ணரந்த்ரம், பிரம்மரந்த்ரம் தாடை புருவத்தின் நடுவு, என்ற ஐந்து (தாங்கள் ஆவிர்ப்பவிக்கும்) இடங்களில், தவ - உம்முடைய, உபலம்ப: ந : ஆவிர்ப்பவித்தல் ஏற்படுகிறதில்லை ? த்யானம் செய்யும்

என்னைப்போன்ற மனுஷ்யனுடைய ஐந்து ஸ்தானங்களில் ஏதாவது ஒன்றில் ஆவிர்ப்பவித்து வரமளிக்கும் ஆசுமேதாஷி யான நீர் ஹிரண்ய கர்ப்பன், ஆதிதேவன் தவத்திற்கு, சிறந்த ஸ்தானமான ப்ருமத்ய ஸ்தானத்தில் ஆவிர்ப்பவித்து படைக்கும் சக்தியை அளிக்காமல் எப்படி இருகக முடியும? அங்கு வரமளிக்க ஆவிர்ப்பவித்தீர் இந்த உணமை தெரியாத வர்கள, உம்மை பிரம்ம புத்ரன் என்று சொல்லுகிறார்கள். அதுவும் உம் புதல்வனுக்கு ப்ரஸம்சை தான். உமக்கும் ஸந்தோஷம்தான். புத்ரன் நன்மை தந்தைக் கில்லையா?

## சுலோகம் 53

ப்ரம்மாணி பஞ்ச தநவ: சிவ மந்த்ரரூபா
ஜீவாதவ: பசுபதே! சிவஸம் ஹிதானும் |
ருத்ரேஷு புண்யமிவ பஞ்சக மக்ஷரானும்
அஸ்யாம் மஹோபநிஷதீதி மஹத்வவாத: ||

ஏதத்வை மஹோபநிஷதம் வேதானும் குஹ்யம் என்ற சுருதி வாக்யம் நாராயணோப நிஷத்தை - மஹோப நிஷத் என்று கூறுகிறது, அதற்குக காரணம் விளக்கப்படுகிறது.

### பதவுரை

பசுபதே - ஹே பசுபதியே! சிவஸம்ஹிதானும் - சிவஸம் ஹிதைகளுக்கு, ஜீவாதவ:— உயிராக விருக்கும் (பரதானமான) பஞ்சப்ரம்மாணி - ஸத்யோஜ்ஜாதம் ப்ரபத்யாமி .........ஸதாசி வோம் - என்ற ஐந்து ப்ரமமங்களாகிய, சிவ மந்த்ர ரூபாஸ் தநவ:— ஸதா சிவங்களான சரீரங்கள், அஸ்யாம் மஹோப நிஷதி - இந்த உபநிஷத்தில், ருத்ரேஷு - ருதரானுவாகங்கள் பதினொன்றில், புண்ய மக்ஷரானும் பஞ்சகமிவ - கீர்த்தன மாத்ரத்தில் புண்ய ப்ரதமான பஞ்சாக்ஷரங்கள் போல அனுப் ரவிஷ்டா:— நடுவில் அடங்கியிருககின்றன, இதி - என்ற காரணத்தால், மஹத்வ வாத:— மஹோப நிஷத் என்ற பெயர் வழங்கப்பட்டு வருகிறது.

பஞ்சாக்ஷரமான "நம: சிவாய" என்பது நடுவில் இருப்பதால் ருத்ரமந்த்ரத்துக்குச் |சிறந்த மஹிமை அப்படியே ஸத்யோ ஜாதாதி ஐந்து மந்த்ரங்கள் நடுவில் அடங்கியிருப்

பதால் மஹோப நிஷத் என்ற பெயர். பஞ்சாக்ஷரம் அடங்கிய தால் ருத்ரானுவாகம், ருத்ரப்ரதி பாதகம் என்பது, எப்படி ஸந்தேக மற்றதோ அப்படியே, பஞ்சப்ரம்ம மந்த்ரங்கள் ஐந்தும் அடங்கியிருப்பதால், மஹோபநிஷத்தாகிய நாராயணோப நிஷத் பரமேச்வரன் உபாஸனையை விளக்குகிறது என்பதில் சிறிதும் ஸந்தேகமில்லை. இந்த முத்ரை வைக்கப்பட்டு விட்டதால் அந்யதேவதையைக் குறிக்கும் ஸம் பாவனைக்குக் கொஞ்சமும் இடம் கிடையாது.

## சுலோகம் 54

வித்யேச்வரஸ்த்வமஸி பூதபதிஸ் த்வமேக:
ஸ்ரஷ்டுர் பவானதிபதி: ஸ்ருஜதி ப்ரபஞ்சம் |
யத் ப்ராம்ஹ்ணன் ப்ரதி தவ ச்ருதமாதிபத்யம்
தத் ப்ரம்மணோ மம ஸதாசிவ! ஜன்மலாப: ||

முன் சுலோகத்தில் குறிக்கப்பட்ட பஞ்சப்ரம்ம மந்த்ரங்கள் ஐந்தில் ஐந்தாவது மந்த்ரத்தின் அர்த்தம் விளக்கப் படுகிறது.

### பதவுரை

த்வம் - நீர், வித்யேச்வரோஸி - 18 வித்யா ஸ்தானங்களுக்கும் தலைவராக இருக்கிறீர், ஏகஸ்த்வம் - நீர் ஒருவர் தாம், பூதபதிரஸி - ஸர்வ ப்ராணிகளுக்கும் தலைவராக இருக்கிறீர் ஷ்ரஷ்டு: - பிரம்ம தேவருக்கு அதிபதி: - தலைவராகிய, பவாந் - தாங்கள், ப்ரபஞ்சம் ஸ்ருஜதி: - உலகத்தைப் படைக்கிறீர். யத் - எந்தக் காரணத்தால், ப்ராம்மண ஜாதியான தவ - உமக்கு, ப்ராமணான் ப்ரதி - ப்ராம்மணர்களுக்கெல்லாம், ஆதிபத்யம் - தலைவனாயிருப்பது, ச்ருதம் - இந்த ஈசான மந்த்ரத்தில், ப்ரம்மாதிபதி: என்ற பதத்தில் கர்ம தாரய ஸமாஸத்தை நிஷாதுஸ்தபதி ந்யாயப்படி ஆச்ரயித்து, பிராம்மணராகவும், அவர்களுக்குத் தலைவராகவும், இருப்பவர் என்று அர்த்தம் கொள்வதால், சொல்லப் பட்டிருக்கிறதோ, தத் - அந்தக் காரணத்தால் ஸதாசிவ - ஸதாசிவ ஸ்வரூபனே, பவத: பிராம்மணராகிய உம்மிடமிருந்து, மம - பிராம்மணனாகிய எனக்கு, ஜன்மலாப: - ஜன்மா ஏற்பட்டது பெரிய லாபம், பெரிய பாக்யம். ப்ராம்மணராகிய தாங்கள். கூடஸ்த புருஷனாக விருக்கும் ப்ராம்மண வம்சத்தில் நான் ஜனித்தது பல ஜன்மாக்

களில் ஆர்ஜிதமான புண்ணியங்களின் பலன் - பெரியலாபம், க்ருத க்ருதயனானேன் என்று ஸ்ரீ ஹரதத்த பரமாசார்யார் தன் பிராம்மணப் பிறப்பைக் குறித்து மகிழ்ந்து பேசுகிறார்.

## சுலோகம் 55

வித்யேச்வரத்வ புனருக்த தயா ந வாச்யம்
வேதாதி பத்யமயமேவ மஹேச! வேத: |
வித்யாபவந்தி சதச: ப்ரவிபஜ்யமானா:
ஸ்ரோதாம்ஸி கின்ன ஸரிதேவ ப்ருதக்
க்ருதாநி ||

ப்ரம்மாதிபதி: என்ற பதத்திற்கு வேதத்தின் தலைவர் என்ற பொருள் கூறாமல் ப்ராம்மணர் என்றும், ப்ராம்மணர்களுக்குத் தலைவரென்றும் பொருள் கூறியதற்குக் காரணம் சொல்லப் படுகிறது.

### பதவுரை

வித்யேச்வரத்வ புனருக்ததயா - ஐந்தாவது மந்த்ரத்தில், ஈசானஸ்ஸர்வ வித்யானாம் என்ற பதத்தால் சொல்லப்பட்ட விஷயத்தாலேயே கிடைப்பதால், புனருக்தி தோஷம் வராமல் இருப்பதற்காக வேதாதிபத்யம் ந வாச்யம். பிரமமாதிபதி: என்ற பதத்துக்கு, வேதங்களுக்குத் தலைவன் என்று அர்த்தம் சொல்லக் கூடாது மஹேச - பரமசிவனே! சதச: பலவித மாக, ப்ரவிபஜ்யமானா: - பிரிக்கப்படுகின்ற, வித்யா: - வித்தைகள், அயம வேத ஏவ பவந்தி - இந்த வேதமாகவே இருக்கின்றன. வேதமூலகமான வித்தைகள் வேதந்தானே; மண் குடம் மண் தான. ஆகலால் வித்தைகளுக்கதிபதி என்றால், வேதாதி தி என்பதும் அதலிருந்தே கிடைத்துவிடும் மறுபடி சொன்ன தோஷம் (கூறியது கூறல்) வராத வண்ணம் ப்ராமம ணரும், அவர்கள் தலைவரும என்ற புது அர்த்தம் கைகொள்ளப் பட்டது.

ஸரிதா - பெரிய நதியால், ப்ருதக் க்ருதாநி - பிரிக்கப்பட்ட ஸ்ரோதாம்ஸி - ப்ரவாகங்கள். ஸரிந் ந பவந்தி கிம் - நதியாக ஆகாதா என்ன? நதியும் ப்ரவாகமும் ஒன்றுதான்.

ப்ரம்ம பதத்துக்கு பரப்ரம்மம், தாமரையில் வீற்றிருக்கும் படைப்பவன் (பிரம்மா) வேதம், ப்ராம்மணன் என்று நாலு அர்த்தங்கள் உண்டு. ப்ரம்ஹணோதி பதி: என்ற பாகம் படைக்கும் பிரம்மாவிற்கு அதிபதி என்று கூறிவிட்டது. வித்யாதி பதி: என்றதால், ஸகல வித்தைகளுக்கும் மூலமான வேத ஆதிபத்யம் கூறப்பட்டுவிட்டது, பரப்ரம்மம் தானே தனக்கு அதிபதியாக இருக்க முடியாது, பரப்ரம்மத்திற்கு அதிபதி மற்றொருவர் இல்லை.

யஸ்மாத் பரம் நாபரம் அஸ்தி கிஞ்சித் என்பது சுருதி வாக்யம். வாயவ ஸம்ஹிதையில் முனிவர்கள் பிரம்மாவைக் கேட்க ப்ரம்மா மஹேச்வரனுக்குமேல் உயர்ந்த தெய்வம கிடையாது என்று அவர் மகிமையை விளக்கும் வசனங்கள் பலவாருக விவரிக்கப்பட்டிருப்பது காண்க. மேலே கூறிய நாலு அர்த்தங்களில், மூன்றுக்கு அவகாசம் இல்லாததால் பாரிசேஷந்யாயத்தால் மிகுதியான, நாலாவதான ப்ராம்மண ஜாதி என்ற அர்த்தம் தான் பிரம்மாதிபதி: என்ற பதத்துக்கு அர்த்தங் கொள்ளவேண்டும். ஆதலால் இந்த மந்த்ரப்படி, பிராம்மணர்கள். பூஜிக்கவேண்டிய தெய்வம் பரமேச்வரன்தான் என்று வெளியாகிறது, பரமேச்வரனைப் பூஜிப்பவன் ப்ராம்மணனுகத் தான் இருப்பான்: கூடஸ்த புருஷன் வாஸனை அந்த வம்சத்திலுதித்தவனுக்குத் தானே ஏற்படும். விசேஷாத் ப்ராம்மணோ ருத்ரம் ஈசானம் சரணம் வ்ரஜேத் என்ற கூர்ம புராண வசனமும் காண்க.

இவ்விதம் 20 சுலோகங்களால் மூன்ருவது லக்ஷணமாகிய யாக்ஞிக்யோபநிஷத் ப்ரோக்தோபாஸனு கர்மத்வம் என்ற லக்ஷணத்தை விவரித்தார்.

## சுலோகம் 56

ஆதித்யம் ருக் யஜுஷஸாமநிதான கோசே
பிம்பே நிவிஷ்டமதிதிஷ்டதி பூருஷோ ய: |
ஏஷா தமேஷ இதி ஸாபிநயா பவந்தம்
பூதாதிபத்ய வசனேன சசம்ஸ நாம்னு ||

நான்காவதான காயத்ரீ ப்ரதிபாத்யன் என்ற லக்ஷணத்தை விவரிக்கும்முன் உபோத்காதமாக சூரியன் மகிமையைச் சொல்லுகிருர்.

## பதவுரை

ருக், யஜுஷ ஸாம நிதான கோசே - ருக், யஜுஸ், ஸாமம் என்ற மூன்று விதமான மந்த்ரங்களாகிற நிதியை வைத்திருக்கும் கஜானுவாகிய, பிம்பே - சூரிய பிம்பத்தில், நிவிஷ்ட - இருக்கும, சூர்யனே, ய : புருஷ : — எந்த புருஷன் அதிதிஷ்டதி - ஆதாரமாகத் தங்கி (அதிஷ்டித்து) உள்ளந்தர்யாமியாக இருக்கிருனே தம் - அவனே, ஏஷா உபநிஷத் - ஆதித்யோவா ஏஷ - புருஷ : என்ற ஆதித்யோபநிஷத்தானது, ஏஷ இதி - ஏஷ பூதானுமதிபதி :—என்று சுட்டிக்காட்டும ஏஷ : என்ற சப்தத்தால், ஸாபிநயா - சுட்டிக்காட்டி (ப்ரத்யக்ஷமாக எதிரிலிருப்பதைக் கைவிரலால் சுட்டிக்காட்டுவது போல்) பூதாதிபத்ய வசனேன - பூதங்களுக்கு அதிபதி என்ற அர்த்தை விளக்கும், நாம்ளு பூதாதிபதி : என்ற அஸாதாரணமான ரூடப் பெயரால், பவந்தம் - தங்களே சசம்ஸ - சொன்னது, புகழ்ந்து வெளியிட்டது, த்யேய : ஸதா — — சக்ர : என்ற ஸ்ம்ருதி, சுருதிக்கு விரோதமாதலால் தள்ளத்தகுந்தது, (விரோதாதிகரண ந்யாயம், மீமாம்ஸகர்கள் ஸம்மதப்படி)

‘ஸௌர மண்டல மத்யஸ்தம் ஸாம்பம் ஸம்ஸார
பேஷஜம் |
நீலக்ரீவம் விருபாக்ஷம் நமாமி சிவம் அவ்யயம் ||

முதலிய ஸ்ம்ருதிப்படிக்கும் ஸூர்ய மத்யவர்த்தீ புருஷன் பரமேச்வரன் தான். நாராயணன் அல்ல.

## சுலோகம் 57

உக்தோ ஹிரண்யபதிரேஷ ஹிரண்ய பாஹு :
உக்தோ அம்பிகாபதி ருமாபதிரேஷ உக்த : |
ஆஹுர் பவந்தம் அதிதைவதமுஷ்ணரச்மே :
ஆதஸ் ததர்ச்சன விதௌ பகவந் அபிஞா : ||

## பதவுரை

ஏஷ : இந்தபரமசிவன், ஹிரண்யபதி : உக்த : - உலகத்திலுள்ள தங்கமனைத்திற்கும் காரணமானவர் என்று சொல்லப்

பட்டிருக்கிருர். பரமேச்வரன் ரேதஸ்ஸால், மேரு உள்பட, ஆயிரத்துக்கு மேல்பட்ட மலைகள், தங்கமயமாக்கப்பட்டிருக்கின்றன வென்றும், ப்ரம்மாண்டமும் தங்கமயக் கோழிமுட்டையாகக் காணப்படுகிறதென்றும், பரமசிவனுடைய ரேதஸ்ஸின் திவிலை தான் கலியுகத்தில் மகாசக்தியுள்ள தெய்வமாக விளங்கும் சரவணபவனுன கார்த்திகேயன் என்றும், அக்னிக்கு அந்த ரேதஸ் அம்சமானதால் கொளுத்தும் சக்தி ஏற்பட்டதென்றும், கங்கைக்கு சரக்காட்டிற்கும் அந்த ரேதஸ் ஸம்பந்தத்தால்தான் மகிமை வளர்ந்ததென்றும், வாயவீய ஸம்ஹிதை, ஆதித்ய புராணம். ஸனத்குமார ஸம்ஹிதை, ஸ்ரீமத் வால்மீகி ராமயணங்களில் விளக்கப்பட்டிருக்கிறது. ஜம்பூபலம் என்று சொல்லப்படும் நாவல் பழம் மகிமையும் ஜாம்பூநதம் என்று தங்கத்தின் பெயரும், பரமசிவன் ரேதஸ்ஸின் திவிலையிலிருந்து உண்டானது பற்றியே என்பதும் விளக்கப்பட்டிருக்கிறது.

ஏஷ : இந்த பரமசிவன், ஹிரண்ய பாஹு : - உக்த : கை முதலிய ஸர்வ அங்கங்களும் ஸ்வர்ணமயம் என்று சுருதி, ஸ்ம்ருதி இதிகாஸ புராணங்களில் சொல்லப் படுகிறது; சாந்தோக்ய உபநிஷத்தில் நகசிகை பர்யத்தம் தங்க மயமாக, சூர்ய மண்டலத்தில், ஈச்வர உபாஸனை சொல்லப்பட்டிருக்கிறது. அங்கு யதா கப்யாஸம் புண்டரீக மேவம் அக்ஷிணீ என்று, சூர்ய கிரணத்தால் மலர்ந்த தாமரைபோல் இருகண்கள் என்று சொல்லப்பட்டிருப்பதால், அக்ஷ்யாதித்ய புருஷோபாஸனை முக்கண்ணனைக் குறிக்காது என்பது ஸரியல்ல, மூன்று பிள்ளைகளின் தந்தையைப்பற்றி, இவருடைய இரண்டு பிள்ளைகள் அக்னிக்கு ஸமமான தேஜஸ் உள்ளவர்களென்று சொன்னுல் மூன்ருவது பிள்ளை அக்னிதுல்யமாக இருக்கவில்லை யென்பது தான் பொருள்படும். அதுபோல் ஈச்வரனுடைய இரண்டு கண்கள் மலர்ந்த தாமரை போன்றது என்று சொன்னுல், அவருடைய மூன்ருவது கண் மலர்ந்த தாமரை போன்றதல்ல, தாமரை மொட்டு போன்றது என்பது கருத்நாகுமே யல்லாது இருகண்கள் உள்ளவனைத்தான் குறிக்கும் என்பது ந்யாய விருத்தம். காளிதாஸ மகாகவி மூன்ருவது கண்ணைப் பற்றி

உத்ப்ரேக்ஷித்திருப்பதும் இதற்கு ஸாதகமாகும். மன்மதன் எரிந்து சாம்பலாகிவிட்டதால், கருணா மூர்த்தி மூன்றாவது கண்ணைத் திறப்பதேயில்லை. இரவு, பகல் ஏற்பட சூர்ய சந்திரர்களான மற்ற இரண்டு கண்களைத்தான் திறந்து கொள்கிறார். இதை மகாகவி வெட்கத்தால் மூன்றாவது கண்ணை மூடியே வைத்திருப்பதாக உத்ப்ரேக்ஷிக்கிறார். கொளுத்திய ஒரு மன்மதனுக்குப் பதில், பராசக்தி தன் கடாக்ஷப் பார்வையால், பல மன்மதன்கள் முளைக்கச் செய்து விட்டாள். வெட்கித்து வெட்கித்து மூன்றாவது கண்ணை தேவி கடாக்ஷத்தின் அருகில் திறப்பதில்லை. ஆதலால் மொட்டுத் தாமரை போலிருப்பதென்று சொல்வதும் உசிதமே.

ஏஷ : அம்பிகாபதிருக்த : - இவர் அம்பிகாபதி யென்றும் சொல்லப்படுகிறார் துர்கா, லக்ஷ்மீ, ஸரஸ்வதீ, என்ற மூன்று சக்திக்கும், அகார, உகார, மகார என்ற மூன்று எழுத்துக்களுக்கும் தலைவனல்லவா, ஓங்கார ப்ரதி பாத்யனான பரமசிவன் ஏஷ : உமாபதிருக்த : - இவர் கேனோபநிஷத்தில் சொல்லியபடி ப்ரம்மவித்யா ரூபிணியான உமாதேவிககுத் தலைவன் என்றும் சொல்லப்படுகிறார். உஷ்ணரச்மே : - சூரியனுக்கு, அதிதைவதம் - அதிஷ்டாதாவான தேவதையாக, பகவந் - ஹே பரமேச்வரா ! பவந்தம் உம்மை, ஆஹு : - சூரியனுக்கு பரமசிவன் தைவதம் என்று கல்பகாரர்கள் சொல்லுகிறார்கள், ஆத : - ஆதலால், ததர்ச்சனவிதௌ - அந்த சூரிய பூஜை செய்யும் கார்யத்தில், அபிஜ்ஞா : - விஷயமறிந்தவர்கள், பவந்தம் ஆஹு : - உம்மைத்தான் தேவதையாக பூஜிக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள்.

ஈச்வரம் பாஸ்கரம் வித்யாத் ஸ்கந்தமங்காரகம் ததா |
சுக்ரம் சசீபதிம் வித்யாத் உமாம் சைவ நிசாகரம் ||

என்ற வசனங்கள் ஆதாரமாக் காணப்படுகின்றன. தேவர்ஷிகளின் ப்ரச்னத்துக்கு ஸூதர் பதில் அளிப்பதாகச் சொல்லப்படும் லிங்க புராண வசனங்கள், சூரியனைப் பரமசிவனாகவும், சந்திரனை உமாதேவியாகவும் ப்ரம்மா, விஷ்ணு மற்றதேவதைகளைப் பரிவாரதேவதைகளாகவும் அர்த்தநாரீச்வரரை உபாஸிக்கும்படி கூறுகின்றன. ராமாயணத்திலும், ராமனுக்கு ராவணனை ஸம்ஹாரம் செய்ய சக்தி உண்டாவதற்காக, ஸ்ரீ அகஸ்தியர் உபதேசித்த ஆதித்யஹ்ருதயத்தில், சூரியனை பாஸ்வதே ஸர்வபக்ஷாய ரௌத்ராய வபுஷே நம : என்று கூறப்பட்டிருப்பதும் ஆதாரமாகும்.

## சுலோகம் 58

யோ மண்டலம் தபதி ய : ச ததந்தராத்மா
யா சாநயோர் பவதி பூதபதே! விபூதி : |
ஜாஞன ஏததபி யத் பலமச்னுதே ச
ஸர்வம் யதாவதிஹ தத் கதிதம் க்ரமேண ||

ஆதித்யோ வா ஏஷ : என்ற அநுவாகத்தின் அர்த்தத்தைச் சுருக்கமாகச் சொல்லும் சுலோகம்.

### பதவுரை

பூதபதே - ஸகல ஜகத்துக்கும் ரக்ஷகனே. யோ மண்டலம் தபதி - எந்த சூரியன் வட்டமான மண்டலத்தில் ப்ரகாசிக்கிறனே. ய : ச ததந்தராத்மா - தேஜஸ்ஸுக்கும் அர்தர்யாமியான யாதொரு புருஷனே, அனயோ : - இவ்விருவர்களுடைய யா ச விபூதி : பவதி - தேஜஸ், ஓஜஸ், பலம், யசஸ், சக்ஷுஸ், காது, மந்யு, ம்ருத்யு, மித்ரன், வாயு. ப்ராணன், திக்பாலகன் முதலிய எவ்வளவு விபூதிகள் உண்டோ, ஏதத் - இதை, ஜாஞன : - அறிந்து உபாஸிப்பவன் யதபி பல மச்னுதே - எந்தப்பயனே அடைகிருனே, தத்ஸர்வம் ச - அவையனைத்தும், இஹ - இந்த இரண்டு அநுவாகங்களில், யதாவத் - உள்ளபடி, க்ரமேண கதிதம் - முறையாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஏஷ பூதானுமதிபதி : என்று தெளிவாக, ஸூர்ய ஜ்யோதிஸ்ஸில் உபாசிக்கப்படவேண்டிய ஸாயுஜ்ய, ஸாலோக்ய, ஸமானைச்வர்ய முக்தியைத்தரும் தெய்வம், பூத நாதனுகிய பரமசிவன் என்று கூறி, பிறகு ஸர்வோவை ருத்ர : என்று அடுத்த அநுவாகத்தால் விளக்கி. அம்பிகாபதயே, உமாபதயே நமோ நம : என்று கடைசியாக ஸூர்யோபாஸனை, உமாபதியாகிய பரமசிவனிடத்தில் முடிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் உபக்ரம, உபஸம்ஹாரம் மத்யே பராமர்சம் என்ற தாத்பர்ய க்ராஹக ப்ரமாணத்தால் ஸூர்யோபாஸ்தி தாத்பர்ய விஷயமான தெய்வம் பரமசிவன் என்பது, மீமாம்ஸா வாக்ய ந்யாயத்தால் ஸித்தாந்தித விஷயமாகும்.

ஸகல உலகமும் ஸ்த்ரீ புருஷாத்மகம். அர்த்த நாரீச்வரரின் விபூதியாகும். பெண்கள் உமாதேவியின் விபூதி. ஆண்கள் பரமேச்வரன் விபூதி. ஸர்வப்ரபஞ்சம் - சப்தாத்மகம். வாக்காகிய சப்த்ராசிகள், தேவியின் விபூதி; அர்த்தப்ரபஞ்சம் சிவனுடைய விபூதி என்பதும் வாயவீயஸம்ஹிதையில் விவரிக்கப் பட்டிருக்கிறது. இந்த அநுவாக தாத்பர்யத்தை யறிந்தால், ஸாவித்ரீ மந்த்ர தாத்பர்யம் நன்கு அறியப்படும் என்று அடுத்த சுலோகத்தில் சொல்லுகிருர்.

## சுலோகம் 59

மா நாம பூதகிலமன்யதிமம் ப்ரதேசம்
அத்யாபிதாஸ் ததிதி மந்த்ர விதோ பவந்தி |
வாச்ய : கிமஸ்ய ஸவிதா ஸவிதுர் வரேண்ய :
கிம்வா பவானிதி விதர்க்கபதம் ந தேஷாம் ||

### பதவுரை

அந்யத் - இந்த, ஆதித்யோவா ஏஷ ' என்ற அநுவாகங்களேத் தவிர மற்ற அகிலம் – எல்லா வேதவாக்கியங்கள் மா நாமபூத் - வெளிப்படுத்தப்படவேணடாம், இமம் ப்ரதேசம் - இந்த அநுவாகத்தை அத்யாபிதா : - அர்த்தஞானத்துடன் தெரிவிக்கப் பட்டவர்கள், ததிதி மந்த்ரவித : – '' தத் ஸவிதுர் வரேண்யம்'' என்று 24 எழுத்து, மூன்று பாதங்கள் கொண்ட நித்யகர்மானுஷ்டான யோக்யமான மந்த்ரத்தின் உண்மையான தாத்பர்யத்தை அறிந்தவர்களாக ஆகிவிடுவார்கள். தேஷாம் – அவர்களுக்கு, அஸ்ய - இந்த காயத்ரீ மந்த்ரத்துக்கு, கிம் ஸவிதா வாச்ய : - ஸூர்யன் உபாஸிக்கப்பட வேண்டியவராகத் தாத்பர்யமா, கிம் வா ஸவிதுர் வரேண்ய : பவாந் - அல்லது, சூர்யனுக்கும் அந்தர்யாமியாக வரம் அளிக்கும் தாங்கள் தாத்பர்ய விஷயமான பொருளா? இதி - என்ற, விதர்க்கபதம் ந - ஸந்தேக அவகாசமே ஏற்படாது. ஆதித்யாநுவாகத்தில் சூர்ய அந்தர்யாமியான பரம் ஜ்யோதி உபாஸ்யமாகச் சொல்லப் பட்டிருப்பதைக் கவனிப்பவர்கள், காயத்ரீ மந்த்ரத்தில், அந்த ஸூர்யாந்தர்யாமி ஜோதியே பர்க்கன் எனப்படுவர் உபாஸ்ய தேவதையாகும் என்ற நிச்சயத்தை அடைவார்கள் என்பது திண்ணம்.

## சுலோகம் 60

பாஸ்வந்தமேஷ விஷயீகுருதே ந மந்த்ர:
சக்னோதி வக்தும் அதிதைவதமீச்வரம் த்வாம் |
யஸ்மாதயம் த்வயி நிரோஹதி பர்க்க சப்த:
ப்ரக்ஞா ப்ரசோதகதயா தததீயஸே த்வம் ||

### பதவுரை

ஏஷ: - இந்த, தத்ஸவிது: என்ற காயத்ரீ மந்த்ரம் பாஸ்வந்தம் ஸூர்யனை, ந விஷயீகுருதே-குறித்துச் சொல்லவில்லை. அதிதைவதம் - அந்தர் யாமி யான, ஈச்வரம் - பரமேச்வரனாகிய, த்வாம் - உம்மை, வக்தும் சக்னோதி - தெரியப்படுத்த சக்தியுள்ளதாக இருக்கிறது. யத் காயத்ர்யா: பரம் தத்வம் தேவ தேவோ மஹேச்வர: என்று ஆதித்ய புராணத்தில் ப்ரஸித்தம். லிங்க புராணம் இதை நன்கு விளக்குகிறது. யஸ்மாத் – எந்தக் காரணத்தால் அயம் பர்க்க சப்த: - இந்த காயத்ரி மந்த்ரத்திலுள்ள பர்க்க என்ற அகாராந்த சப்தம், த்வயி உம்மிடத்திலேயே, நிரோஹதி - நிரூடமாக இருக்கிறதோ. பிறரைக் குறிக்கச் சக்தியற்றதாக இருக்கிறது. ஹரஸ் ஸமர ஹரோ பர்க்க: த்ர்யம்பக: த்ரிபுராந்தக: என்ற அகாராந்த சப்தங்களின் நடுவில் பர்க்க: என்று அமரஸிம்ஹன் சிவநாமாவாகப் படித்திருப்பது போதுமான சான்றாகும் ஸ்காந்தத்தில் ப்ருங்கியால் கூறப்படும் பசுபதி நாமாக்களில் அடங்கியது பர்க்க: என்ற சப்தம். ராவணன் ஸ்தோத்ரம் செய்யும்போதும் சம்போ பர்க்க பவ - என்று துதிக்கிறான். தத் - அந்தக் காரணத்தால், த்வம் - தாங்கள், ப்ரக்ஞா ப்ரசோதகதயா - தர்மாதர்ம புத்தியைத் தூண்டுபவராக, அதீயஸே - வேதங்களில் கூறப்படுகிறீர்.

## சுலோகம் 61

ஸாந்தோயம் அந்தகரிபோ ! யதி பர்க்க சப்தோ
யத்தத் பதத்வயம் அனன்வயி லிங்க பேதாத் |
அன்வேஷயேத் உபயமந்ய தபின்னலிங்கம்
அச்ரூய மாண மஸமஞ்சஸ ஏஷ பக்ஷ: ||

இந்த காயத்ரீ மந்த்ரத்தைச் சில பெரியவர்கள் சூரிய பரமாக அர்த்தம் செய்கிறார்கள். சூரியனல்லவா நமது புத்திகளைத் தூண்டி ப்ரவ்ருத்தியை உண்டுபண்ணுகிறார் என்ற ஸந்தேகம் நீக்கப்படுகிறது.

## பதவுரை

அந்தக ரிபோ - யமனை அழிப்பவரே! அயம் - இந்த, பர்க்க சப்த: - பர்க்க: என்ற பதம், ஸாந்த: யதி - ஸகாராந்தமான பர்க்கஸ் என்ற பதமாகக் கொள்ளப்பட்டால், யத்தத் பதத்வயம் - ய:, தத், என்ற (காயத்ரீ மந்த்ரத்தில் உள்ள) இரண்டு பதங்களும், லிங்க பேதாத் - புல்லிங்கம், நபும்ஸக லிங்கம் என்று லிங்கம் மாறியிருப்பதால், அனன்வயி - ஒன்றுக்கொன்று சேர்த்து அர்த்தம் பண்ணமுடியாமல் பிரிந்துபோய், அச்ருயமாணாம் - இந்த மந்த்ரத்தில் சொல்லப் படாத, அபின்னலிங்கம் - பொருத்தமான லிங்கத்தோடு கூடிய, உபயமந்யத் - வேறு இரண்டு விசேஷணத்தையும் விசேஷ்யத்தையும், அந்வேஷயேத் - ஆகாங்க்ஷித்து, அத்யாஹாரம் செய்து கொள்ளச் செய்யும். ஆதலால் ஏஷ பக்ஷ:- இந்த சூரிய பரமாக அர்த்தம் செய்யும் அந்வயபக்ஷம், அஸமஞ்சஸ: - பொருத்தமானதாகாது.

ய: ந: திய: ப்ரசோதயாத் - தஸ்ய - தேவஸ்ய ஸவிது: வரேண்யம் - யத் பர்க்க: தத்தீமஹி என்பது அவர்கள் மதப்படி அன்வயம் சொல்லவேண்டும். அப்பொழுது, ய: தத், என்று இருபதங்களுக்கு பரஸ்பரம் அன்வயம் சொல்லப்படவில்லை என்பது ஓர் தோஷம். தஸ்ய என்ற ய: என்ற சப்தத்துக்குத் தகுந்த புல்லிங்க விசேஷ்யபதமும், தத் என்ற நபும்ஸக லிங்கத்துக்குத் தகுந்த யத் என்ற விசேஷண நபும்ஸக லிங்கபதமும் இரண்டு விசேஷண, விசேஷ்ய. பதங்களைச் சேர்த்துக்கொண்டு அந்வயம் சொல்ல வேண்டியிருப்பதால், அத்யாஹாரத்வயம் என்ற மற்றொரு தோஷமும் ஏற்படுவதால், இந்த அன்வயபக்ஷம் ஸமஞ்சஸமாகாது, அகாராந்த பர்க்க: என்ற பதத்தைக் கைக்கொண்டால் மந்த்ரத்திலுள்ள ய: தத் பதங்களே அத்யாஹாரத்வயம் இல்லாமல் பரஸ்பரம் அன்வயிக்கும்படி அர்த்தம் சொல்லலாம். யோ் பர்க்க: ந: திய: ப்ரசோதயாத் - (தத் - தம்) தேவஸ்ய ஸவிதுர்வரேண்யம் (பர்க்கம்) தீமஹி என்பதல்லவா, ஸித்தாந்த பக்ஷத்தில் அன்வயம். இந்த பக்ஷத்தில் பரஸ்பராந்வயம் உண்டு. அத்யா ஹாரத்வய க்லேசமுமில்லை,

ஆனல், தத் என்ற நபும்ஸக லிங்கம் சாந்தஸ ரீதியாகப் புல்லிங்கமென்று அங்கீகரிக்கவேண்டும் இது சிறிய தோஷம் மேலும் மைத்ராயணீய சுருதியும், தலவகார ப்ராம்மணமும், கூர்மபுராண வசனமும், சைவபுராண வசனமும், யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதியும் சாதாதப வாக்யமும் ருத்ர ஏவ பர்க்க: என்ற சுருதி வசனமும், தத் பர்க்காக்யம் கிமபி பரம்தாம என்ற ஸாம்ப ஸ்துதி வாக்யமும், ததக்ஷரம், தத்ஸவிதுர் வரேண்யம் ப்ரக்ஞாச தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ - என்ற மந்த்ரோப நிஷத்துமாக - ஒன்பது பலமுள்ள ப்ரமாணங்கள் காயத்ரீ மந்த்ரத்திலுள்ள பர்க்க: என்ற பதம் அகராந்தம் என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. மேலும் தத் என்ற பதம் லிங்கம் மாறுதலால் சாந்தஸ முறைப்படி, தம் என்பதற்கு பதிலாக வந்திருப்பது என்பதை, தம் வரேண்யம் தீமஹி என்ற யாக்ஞவல்க்ய வசனம், வரேண்யம் தம் உபாஸ்மஹே என்ற சாதாதபவாக்யம், தம் பர்க்காக்யம் அஹம் பஜாமி என்ற சைவ புராண வசனங்கள் தெரிவிக்கின்றன. தத் என்ற நபும்ஸக லிங்கத்துக்குத் தகுந்தபடி தத் அக்ஷரம் தத் பரமம் தாம தத்பரம் தத்வம் விசேஷ்ய பதம் கொடுத்து, அர்த்தம் கூறப்பட்டுள்ளது. மந்த்ரோப நிஷத், ஸாம்பஸ்துதி, கூர்ம புராணங்களில். ஆதலால் பர்க்க: என்பது அகாரந்தம்தான் ஸமஞ்ஜஸம். ஸகாரந்தமல்ல என்பது அறியத் தகுந்தது. அகாராந்த பர்க்க: பதம் பரமசிவனிடம் நிரூடமானது. காயத்ரீ பரமேச்வரனைத்தான் குறிக்கும், சூர்யனை அல்ல. சூர்ய அந்தர்யாமியான பரமசிவனை என்பதை ஆதித்ய அநுவாகமும் கூறுகிறது.

## சுலோகம் 62

சப்தஸ்ம்ருதிர் ஹ்யஸுநிவா கஞிவா பதாந்தே
யுக்தம் வதத்யுபயதா ஸ்வரமாத் யுதாத்தம் ।
வ்யத்யஸ்த காரகமவைமி பதம் கஞந்தம்
மைத்ராயண ச்ருதி பராஹத ஸாந்த பாவம் ॥

ஸ்வரம் ஆதியுதாத்தமாக பர்க்க சப்தம் காணப்படுவது. அஸுந் ப்ரத்யயம் வைத்து, ப்ரஸ்ஜ்தாதுவிலிருந்து பாபங்களை வறுத்து நாசம் செய்கிறவர் என்ற வ்யுத்பத்தியிலும், கஞ்ப்ரத்யயம் வைத்து ஷி தாதுவிலிருந்து வ்யுத்பத்தி அகாரந்தமாகச் செய்வதிலும், பொருத்தமாகவே இருக்கிறது.

ஏனெனில் அஸுந்நித் எனப்படும் கஞ்ஞித் எனப்படும் இரண்டு ப்ரத்யயங்களிலும் ஆதியுதாத்தம் பாணினி வ்யாகரணத்தில் ஞ்ணித்யாதிர் நித்யம் என விதிக்கப்பட்டிருக்கிறது என்கிறது இந்த சுலோகம்.

## பதவுரை

அஸுநிவா கஞிவா பதாந்தே - ப்ரஸ்ஜ் என்ற தாதுவின் முடிவில், அஸுந் ப்ரத்யயம் வைத்தாலும், கஞ் ப்ரத்யயம் வைத்தாலும், சப்தஸ்ம்ருதி: - வ்யாகரண சாஸ்திரமாகிய ஆதியுதாத்த ஸ்வரம் விதிக்கும் ஞ்ணித்யாதிர் நித்யம் என்ற பாணினி ஸூத்ரம், ஆத்யுதாத்தம் ஸ்வரம் - முதல் உயிரெழுத்து உதாத்த ஸ்வரத்தோடு கூடியிருப்பதை, உபயதா - இரண்டு ப்ரத்யயத்திலும் யுக்தம் வததி - பொருந்தும் என்று சொல்லுகிறது மைத்ராயணச்ருதி. பராஹத ஸாந்தபாவம் • யோஸ்ய பர்க்காக்ய: என்றல்லவா மைத்ராயணச்ருதி, ஸகாரந்தமாகில் பர்க்க ஆக்ய: என்று மைத்ராயணச்ருதி இருக்கவேண்டும் என்ற காரணத்தால், மைத்ராயண சுருதியில் விலக்கப்பட்ட ஸகாராந்த பக்ஷத்தையுடைய கனுந்தம் பதம் - அகாரந்தமான கஞ் ப்ரத்யயம் வைத்த, வ்யத்யஸ்த காரகமவைமி – கர்த்தா என்ற அர்த்தத்தில் கஞ் ப்ரத்யயம் வராது என்று வ்யாகரண சட்டமிருந்தாலும் - சாந்தஸமாகக் கர்த்தரீ மாறி கஞ் ப்ரத்யயம் வந்திருப்பதாகத் தீர்மானிக்கிறேன். இல்லாவிடில் கீழ் சொன்ன ப்ரமாணங்கள் எப்படி கனுந்த்ரமான அகாரந்தபதத்தைக் கூறமுடியும்? ஆதலால் அந்யதானுபபத்தி ப்ரமாணத்தால், கர்த்தரி கஞ் ப்ரத்யயம் சாந்தஸம் என்பது திண்ணம்.

## சுலோகம் 63

மைத்ராயண ச்ருதிரஸௌ ததிதி ப்ரக்ருத்ய
பர்க்கம் பவந்தமபிதாய விசிந்த நீயம் |
ருத்ரஸ்ய பர்க்கபத கோசரதாம் ப்ருவாணு
ஸாந்தம் ப்ரதிக்ஷிபதி பர்க்கபதம் புராரே ||

அஸௌ மைத்ராயணச்ருதி: - இந்த மைத்ராயண ச்ருதியானது, ததிதி - தத் ஸவிதுர்வரேண்யம் என்ற காயத்ரீ மந்த்ரத்தை, ப்ரக்ருத்ய - வ்யாக்யானம் செய்யத் தொடங்கி,

பர்க்கம் பவந்தம் - அகாராந்த பர்க்கபத நிருடார்த்தமாகிய தங்களை, விசிந்த நியம் அபிதாய - விசிந்தயாமி என்ற பதத்தால், உபாஸிக்கப் படவேண்டியவராகச் சொல்லி, பர்க்கர் யார் என்ற கேள்வி ஏற்பட, ஏஷருத்ரோ பர்க்காக்யோ ப்ரம்மவாதின: என்ற அடுத்த வாக்யத்தில் சொல்லப்பட்ட ருத்ரஸ்ய—ருத்ரனாகிய உமக்கு, பர்க்கபதகோசரதாம் - பர்க்க பதத்தின் அர்த்தமாக, ப்ருவாண - சொலலிக்கொண்டு, பர்க்க சப்தம் - பர்க்க பதத்தை, ஸாந்தம் ப்ரதிக்ஷிபதி - ஸகாரந்த மல்ல என்று விலக்குகிறது. ஸகாரந்தமாகில், மைத்ராயண ச்ருதி பர்க்க ஆக்ய என்று இருக்க வேண்டும். தலவகார ச்ருதியும் ஸகாரந்த பர்க்கஸ் சப்தமல்ல என்று தெளிவாகச் சொல்லுகிறது.

## சுலோகம் 64

ஸாந்தம் பதம் ததபி நைவ ததாதி வக்தும்
யத் ப்ராம்மணந் தலவகாரிண ஆமனந்தி |
ப்ரச்னோத்தர க்ரம நிருபித பூர்வபாதம்
பாதம் த்வீதீயமபி பர்க்கமயம் ப்ரவீதி ||

### பதவுரை

தலவகாரிண: - தலவகார ப்ராம்மணத்தைச் சேர்ந்த ரிஷிகள், க: ஸவிதா என்று ப்ரச்னத்தை ஆரம்பித்து, பர்க்க மயம் என்பது இரண்டாவது பாதம் எனச் சொல்வதால், யத் ப்ராம்மணமாமனந்தி - எந்த ப்ராம்மணத்தைச் சொல்லு கிறார்களோ, ததபி - அந்த ப்ராம்மணமும், ஸாந்தம் பதம் வக்தும் நைவ ததாதி - ஸகாராந்தமாகச் சொல்ல, அவகாசம் கொடுக்கவே இல்லை. ப்ரச்னோத்தரக்ரம நிருபித பூர்வ பாதம் - யார் ஸவிதா என்று கேள்வி கேட்டுக்கொண்டு, ஏஷ ப்ரதம: பாதம் என்று முதல் பாதத்தை நிரூபித்துவிட்டு, த்விதீயம் பாதமபி - காயத்ரீ மந்த்ரத்தின் இரண்டாவது பாதத்தையும், பர்க்கமயம் ப்ரவீதி பர்க்க பதம் அடங்கியது என்று விவரிக்கிறது. ஸகாராந்தமாகில் பர்க்கோ மயம் என்று தலவகார ப்ராம்மணமிருக்க வேண்டும்.

## சுலோகம் 65

பர்க்க: ப்ரசோதயதி யோ தியமஸ்மதீயாம்
தம் தீமஹீதி கடனு விநிமாய லிங்கம் |
வாச்யஸ்ய பர்க்க! பவத: ஸ்வதாபிதானம்
பர்க்காக்ய மித்யபி ச ஸாம்பவசோனுரோத: ||

### பதவுரை

ய: பர்க்க: - எந்த பர்க்கன், அஸ்மதீயாம் தியம் - நமது புத்தியை, ப்ரசோதயதி - தூண்டுகிருரோ, தம் தீமஹி - அந்த பர்க்கனை த்யானம் செய்கிறோம், இதி என்று, லிங்கம் விநிமாய - நபும்ஸக லிங்கத்தைச் சாந்த ஸமென்று புல்லிங்க மாக மாற்றிக்கொண்டு, கடனு - க்ரியையில் விசேஷ்ய கர்ம காரகமாக அன்வயப படுத்தப்பட்டிருக்கிறது அப்படியாகில் பர்க்க - ஹே பரமேச்வரா! வாச்யஸ்ய - பர்க்க பதத்தால், நிருட சக்தியால் ப்ரதி பாதிக்கப்படுகிற பவத: - உங்களுக்கு ஸ்வபதாபிதானம் - ருத்ரன்தான் பர்க்கன் என்ற சொந்தப் பதத்தால் விளக்கப்படுவதும், பர்க்காக்யமித்யபி - தத் பர்க் காக்யம் கிமபி பரமம் தாம என்ற, ஸாம்ப வசோனுரோதஸ்ய - ஸாம்ப ஸ்துதிவாக்யத்தின் ஒற்றுமையும் ஏற்படுகிறது.

## சுலோகம் 66

த்வாமேவ மந்த்ரோப நிஷத் ப்ரவீதி
ததித்ய்ருசோஸ்யா: ப்ர திபாத்யமர்த்தம் |
ததக்ஷரம் தத் ஸவிதுர்வரேண்யம்
பிரக்ஞா ச தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ ||

### பதவுரை

ததக்ஷரம் தத் ஸவிதுர்வரேண்யம் - உபாஸிக்கப்படுவது அக்ஷரமெனப்படும். அது ஸூர்யனுக்கும் உபாஸ்யம், தஸ்மாத் புராணீ ப்ரக்ஞா ப்ரஸ்ருதா - அவரிடமிருந்து அநாதியாக புத்திகள் தூண்டப்பட்டு உண்டாகின்றன என்ற மந்த்ரோபநிஷத்தானது, அஸ்யா: - இந்த, ததித்ய்ருச : - தத்ஸவிதுர் வரேண்யம் என்ற காயத்ரீ ரிக் மந்த்ரத்துக்கு,

ப்ரதிபாத்ய மர்த்தம் - தாதிர்ஷ விஷயமான பொருளாக, த்வாமேவ ப்ரவீதி - உம்மைத்தான் சொல்லுகிறது.

## சுலோகம் 67

பார்க்கோபி ஸந் ஸவித்ரு சப்த ஸமந்வயேன
ஸாவித்ரதாமபி விகாஹத ஏவ மந்த்ர: |
தத் தத் பதாந்வய வசேன மஹேச மந்த்ராந்
தத் தேவதாநபி ஹி மந்தர வித: படந்தி ||

### பதவுரை

ஏஷ மந்த்ர: - தத் ஸவிதுர் வரேண்யம் என்ற இந்த மந்த்ரம், பார்க்கோபிஸந் - பர்க்கன் என்ற தேவதையை ப்ரதிபாதிப்பதால், பார்க்கம் என்று சொல்ல வேண்டியதாக இருந்தாலும், ஸவித்ருசப்த ஸமன்வயேன - ஸவிது: என்ற பதம வாக்யத்தில் ஸம்பந்தப்பட்டிருப்பதால், ஸாவித்ரதாமபி விகாஹத எவ - ஸவித்ரு தேவதாகம் என்று அர்த்தம் கொடுக்கும் ஸாவித்ர என்ற பதத்தால் கூறப்படும் தன்மையையும் அடைய முடியும். மஹேச ஹே பரமேச்வரா, மந்த்ரவித: - மந்த்ரங்களின் தத்வமறிந்த ரிஷிகள், தத் தத் பதாந்வய வசேன - அந்த அந்த பதங்கள் அடங்கியிருப்பதைக் கொண்டும், மந்த்ராந் மந்த்ரங்களை, தத் தேவதானபி - அந்த அந்த தேவதாகம் என்ற பதத்தால் கூறக் கூடியவைகளாக, படந்தி - சொல்லுகிருர்கள்.

## சுலோகம் 68

அப்யர்க்க தைவதவதீம் ருசமாம நாம:
சப்தேன விச்வஇதி சங்கர! வைச்வதேவீம் |
பித்ர்யாஞ்ச மர்த்தஇதி புஷ்யபதேன பௌஷ்ணீம்
ஏதாத்ருசானி கதிநாம நிதர்சனானி ||

ஒரு ரிக் அனேக தேவதையின் வாச்யபதம் அடங்கியிருப்பதால், பல தேவதாகமாக, அந்த அந்த பதங்களால் கூறப்படுவதைக் காட்டுகிருர்.

## பதவுரை

அர்க்க தைவதவதீம் அபி - மந்த்ரத்தின் அர்த்தப்படி தேவதை சொல்லப்படவேண்டும் என்ற நிருக்த விதிப்படி, சூர்ய தேவதாகமாகக் கருதப்பட்டபோதிலும். ருசம் விச்வோ தேவஸ்ய நேதுர் மர்த்த: வ்ருணீத ஸக்யம் என்ற ரிக் மந்த்ரத்தை, சங்கர ஏ பரமேச்வரா, விச்வ இதி சப்தேன - விச்வ பதம் வந்திருப்பதால், வைச்வ தேவீம் - வைச்வ தேவீ ரிக் என்றும், மர்த்த இதி சப்தேன - மர்த்த என்ற பதம் அந்த மந்த்ரத்தின் நடுவில் ஸம்பந்தப்பட்டிருப்பதால் பித்ர்யாம் ச - பித்ரு தேவதாக ரிக் என்றும், புஷ்யபதேன - புஷ்யஸே என்ற பதம் வந்திருப்பதால், பௌஷ்ணீம்—புஷ்ய தேவதாக மானது என்றும் ஆமநாம: - நாம் சொல்லிக் கொண்டிருக்கிரோம். யஜுர்வேத ப்ராம்மணவாக்யமும் இப்படிச் சொல்லுகிறது. ஸாவா ஏ ஷா ரிக் ஸர்வ தேவத்யா என்று விவரண முடிவில் கூறுகிறது ஏநாத்ருசா நி - இப் பேர்ப்பட்ட, நிதர்சனனி - உதாஹரணங்கள், கதிநாம - பல ஸம்பவிக்கக் கூடியவை ப்ரஸித்தமாக இருக்கின்றன.

## சுலோகம் 69

ஏஷா கதி: ச்ருதிகிராமிதி நிர்ணயேன
தத் தத் க்ரஹார்ச்சன விதௌ முனயஸ் ஸ்மரந்தி |
மந்த்ரேண சங்கர! சனை: சமுபக்ரமேண
புத்யஸ்வ சப்த ஸஹிதேன புதஸ்ய பூஜாம் ||

இந்த அபிப்ராயத்தை மனதில்கொண்டு, கல்ப ஸூத்ரத்தில் மந்த்ரங்கள் பத அந்வயத்தால் அந்தப் பெயரால் குறிப்பிடப்பட்டு வேறு அர்த்தத்தில் கூறும்படி விநியோகிக்கப்படுகின்றன.

## பதவுரை

ச்ருதி கிராம்—வேத வாக்யங்களுக்கு, ஏஷாகதி: - இது தான் முறை, இதி என்று, நிர்ணயேன - தீர்மானத்தை வைத்துக்கொண்டு, முனய: - கல்ப ஸூத்ரக்காரர்கள் தத் தத் க்ரஹார்ச்சனவிதௌ - அந்தந்த நவக்ரஹங்களில் ஒரு க்ரஹத்தை ஆராதிக்கும் கர்மாவில், சங்கர - பரமசிவனே

சமுபக்ரமேண மந்த்ரேண - சம் என்று ஆரம்பிக்கும் மந்த்ர மாகிய சந்நோ தேவிரபிஷ்டயே என்பதால், சனே: பூஜாம் - சனி க்ரஹத்தின் பூஜையையும், புத்யஸ்வ என்ற பதம் அடங்கிய மந்த்ரத்தால். புதஸ்ய பூஜாம் ச - புத க்ரஹத்தின் ஆராதனத்தையும் ஸ்மரந்தி - விதிமுகமாகத் தெரியப்படுத்து கிருர்கள்.

## சுலோகம் 70

ஆம்நாயம் ரிக் யஜுஷ ஸாம விதம் விசிந்த்ய
ஸாரம் ஸமுத் த்ருதவதா பரமேஷ்டிஞபி |
மந்த்ரஸ் த்ரிபாதய மத்ருஷ்ட விதாந்தரேண
த்ருஷ்ட: சராசர குரோ! மனுஞ யதோக்தம் ||

ஈச்வரனேத் தெரியப்படுத்தக் கூடிய வேத மந்த்ரங்கள் பல இருந்தபோதிலும் காயத்ரீ மந்த்ரப்ரதிபாத்யன் பரமேச்வரன் என்ற நான்காவது லக்ஷணம் கூறியதின் காரணம் சொல்லுகிருர்.

### பதவுரை

இந்த காயத்ரீ மூன்று வேதங்களின் மூன்று பாதங்களாக அமைக்கபபட்டிருப்பதால், வேதத்ரய ஸாரமான, நித்யானுஷ்டேயமான ஸர்வஜன ஸாதாரணமான, மந்த்ரம்.

ஹே சராசர குரோ - அசையும் பொருள், அசையாப் பொருள் அனைத்துக்கும் ப்ரேரகனே ரிக் யஜுஷ ஸாம விதம் - ரிக், யஜுஸ், ஸாமம் என்ற பிரிவுகளுள்ள, ஆம்ஞயம்- வேதத்தை, விசிந்த்ய - நன்கு பரிசோதித்து, அத்ருஷ்ட விதாந்தரேண - புதிதான வேறு முறைப்படி, ஸாரம் - அந்த அந்த ஸார பாகத்தை, ஸமுத் த்ருதவதா - எடுத்து, பரமேஷ்டிஞபி - ப்ரம்ம தேவராலேயே, த்ரிபாத் மூன்று பாதங்கள் உள்ள, அயம் மந்த்ர: இந்த காயத்ரீ மந்த்ரம், த்ருஷ்ட :- கண்டு பிடித்து, ஜனங்களுக்கு க்ஷேமார்த்தமாகக் கொடுக்கப்பட்டது. யதோக்தம் மனுஞ யத்வை கிஞ்சன மனு ரவதத் தத் பேஷஜம்

என்று மனுவாக்யமனைத்தும் மருந்தாகக் கருதப்படும். ஆதி ஸ்ம்ருதி கர்த்தாவாகிய மனுவால் சொல்லப் பட்ட விஷயம் இது.

த்ரிப்ய ஏவ து வேதேப்ய : பாதம் பாதம் அதூதுஹத் |
த தித்ய் ருசோஸ்யா : ஸாவித்ர்யா : பரமேஷ்டீ ப்ரஜாபதி: ||

மூன்று வேதங்களிலிருந்து, ஆதி கர்த்தாவான ப்ரம்ம தேவர், ஒவ்வொரு பாதமாக, தேனுவிடமிருந்து ஸாரமானப் பாலை கறப்பதுபோல், கறந்து மும்பாதம் கொண்ட, இந்த 24 அக்ஷரங்கள் அடங்கிய, தத் ஸவிதுர்வரேண்யம் என்ற ரிக் மந்த்ரத்தை ஜனங்கள் க்ஷேமத்திறகாகக் கொடுத்தார்.

வேதங்கள் மூன்றுதான். அதர்வண வேதம் ரிக் மந்த்ரங்களால் ஆகியது, மூன்று வேதத்தில் அடங்கியது. ஆதலால் மூன்று வேதங்களின் ஸாரம்தான் எடுக்கப்பட்டது. இந்த காயத்ரி மந்த்ரத்தை ஜபிக்காதவன், வேறு எந்த வைதீக கார்யத்திற்கும் தகுந்தவனல்லன் என்பது விதி. ஆதலால் மந்த்ர ஸாரமான காயத்ரீ ப்ரதிபாத்யன் வேத த்ரய ப்ரதிபாத்யன் பரமேச்வரன்தான் என்பது கைமுதிக ந்யாயத்தால் எளிதில் கிடைக்குமென்று காரணம்கொண்டே இந்த காயத்ரீ அர்த்தம் விசாரிக்கப்பட்டது. வேத த்ரய தாத்பர்ய விஷயீ பூதன் பரமேச்வரன் ஒருவனே என்பது பிண்டிதமான கருத்தாகும்.

## சுலோகம் 71

க்ருண்ணாது காமமனலஸ் ஸகலம் ஹவிஸ்தே
ராஜ்ஞோபலிம் ஹரது பாகதுத: ப்ரஜாப்ய : |
பார்த்தேன சங்கர ! நிவேதித மம்புஜாக்ஷ
நைசம் ஹவிஸ்புடமத்ருச்யத பாதயோஸ் தே ||

இவ்விதம் 15 சுலோகங்களால் காயத்ரீ மந்த்ரார்த்த ப்ரதிபாத்யன் பரமேச்வரன் என்று நாலாவது லக்ஷணத்தை முகவுரையுடன் நன்கு நிருபித்து விட்டுப் பிறகு உத்தேசக் ரமப்படி செய்யவேண்டிய பரமசிவன் க்ரதுசேஷீ என்ற ஐந் தாவது லக்ஷணத்தை 12 சுலோகங்களால் நன்கு விளக்கு கிறார்.

### பதவுரை

அனல: — அக்னி பகவான், காமம் - இஷ்டப்படி, ஸகலம் - எல்லா விதமான. ஹவி : — ஹவிஸ்ஸை, க்ருண்ணாது - நேரில் பெற்றுக் கொள்ளட்டும் அந்த

ஸோமரஸம், நெய் பால் தயிர் என்ற கவ்யம் பொரி, புரோடாசம், தான்ய ஹவிஸ் முதலிய அனைத்தும் தே - உமக்குத்தான் (சொந்தமானது.) பாகதுத: — வரி வசூலிக்கும் அதிகாரி, பலிம் - வரியை, ப்ராஜாப்ய: - ஜனங்களிடமிருந்து, ஹரது - வசூலிக்கட்டும். ஆயினும் அந்த வரிப்பணம், ராகஞ: - ஸ்வம் - அரசனுக்குச் சேரவேண்டிய சொந்தப்பணம், வசூலித்தவனுக்குச் சொந்தமாகாது. அவன் ஏற்றுக் கொள்ளக்கூடாது. வசூலான வரிப்பணத்தை அரசனிடம் செலுத்தி, வசூலித்ததற்கு உள்ள கூலியைத்தான் பெற்றுக் கொள்ளலாம். அவ்விதமே அக்னி பெற்றுக் கொள்ளும் ஹவிர்பாகமனைத்தும் பரமசிவனுக்குச் சேர வேண்டியது என்று கொள்ள வேண்டியது. சங்கர - ஸுகத்தைத் தரும் பரம் பொருளே! பார்த்தேன - அர்ஜுனனால், அம்புஜாக்ஷ - தாமரைக் கண்ணனாகிய நாராயணனுக்கு (கிருஷ்ணனுக்கு) நிவேதிதம் - ஸமர்ப்பிக்கப்பட்ட நைசம் ஹவி: - இரவில் தரப்பட்ட நைச ஹவிஸ்ஸானது, தே - உம்முடைய பாதயோ: – காலடிகளில் – ஸ்புடம் - தெளிவாக, ப்ரத்யக்ஷமாக, அத்ருச்யத - காணப்பட்டதல்லவா?

இந்த இதிஹாஸம், ஹவிஸ் அனைத்தும் உம்மைச் சேர்ந்தது என்பதற்குச் சான்றாகும். துரோணபர்வாவில் ஹவிர் நிவேதன க்ரியைக்கு வாஸுதேவன் அதிகரண காரகம்; பரமேச்வரன் ஸம்ப்ரதான காரகம் என்று விளக்கமாகக் கூறப்பட்டிருக்கிறது.

மகா பாரதத்தில் கிருஷ்ணன் ஸகாயத்தால் பாண்டவர்களுக்கு ஸகல கார்யங்களும் கைக்கூடி வந்தன என்று சொல்லப்பட்டிருப்பது ப்ரஸித்தம், எப்படி பரமசிவனுக்கு ஹவிஸ் அர்ப்பணம் செய்யப்படுவதாகக்கூற முடியும் என்ற சங்கைக்கு இடமில்லை. பாண்டவர்களுக்கும், அவர்களுக்கு ஸகாயமான கிருஷ்ணனுக்கும் பரமேச்வரன் அனுக்ரஹத்தால்தான் ஸகல கார்யங்களும் நிறைவேறின என்பதுதான் மகா பாரதத்தின் உண்மையான கருத்தாகும். அப்படியே அச்வமேத பர்வாவில் பீமஸேனன் தர்மபுத்திரரைப் பார்த்துக் கூறுவது—யாகத்திற்கு எல்லா த்ரவ்யங்களையும் பரமசிவன் அருளால் ஸம்பாதித்துவர முடியும்; முன்பு காட்டில் வசிக்கும் போது பாசுபதாஸ்த்ரம் கொடுத்தருளினார். அவர் அனுக்ரஹத்தால்தான் நமக்கு ராஜ்யம் திரும்பக் கிடைத்தது. ஜயத்ரதவத ப்ரதிக்ஞையை அவர்தாம் நிறைவேற்றி வைத்தார் என்று பலவிதமாக சிவன் மகிமையை வர்ணிப்பது தெளிவு. அனுசாஸன பர்வாவிலும், கிருஷ்ணனைப்பார்த்து, ஈசுவரன்

"நான் உன்னிடம் த்ருப்தி கொண்டுள்ளேன், வேண்டிய வரங்களைப் பெற்றுக் கொள்ளலாம்" என்று சொன்னதாக விளக்கப்பட்டிருக்கிறது. துரோணபர்வாவில் அர்ஜுனன் தனக்கு சிவப்ரஸாதம் கிருஷ்ணன் அனுக்ரஹத்தால் கிடைத்ததாகச் சொல்லுகிறான். நன்கு பரிசீலனை செய்தால், மகாபாரதம் முழுதும், பரமேச்வரன் மகிமைதான் தாத்பர்ய விஷயமானது என்பது தெளிவாகிறது. சாந்தி பர்வாவில் பிரம்ம, விஷ்ணு, ருத்ரர்கள், இந்த்ராதி தேவர்கள் எல்லாரும் பரமேச்வரனைப் பூஜித்துத் தங்கள் கஷ்டங்களை நீக்கிக் கொண்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆத்யம் புருஷ மீசானம் என்று பரமசிவனில் ஆரம்பமாகி, சாந்தி பர்வாவில், நாராயணனுக்கு அந்தர்யாமி பரமசிவன் என்று விளக்கப் பட்டிருப்பதால் உபக்ரம, உபஸம்ஹார மத்யே பராமர்சம் என்ற ந்யாயப்படி பாரதம் பரமசிவ ப்ரதிபாதகமாகும்.

இந்த்ராதி தேவதைகளுக்கு அந்த அந்தப் பெயரைச் சொல்லி, ஸ்வாஹா காரவ ஷட்காரங்களால் ஹவிஸ்ஸைக் கொடுப்பதாகவும், யஜமானனுக்குப் பயன் தருவதாகவும், வேதங்களில் தெளிவாகக் கூறப்பட்டிருந்த போதிலும், அந்த தேவர்கள் அனைவரும் பரமேச்வரன் விபூதியானதால், சேஷியான பரமசிவன்தான், ஹவிர்தானத்திற்கு ஸம்ப்ரதானமென்றும், அவர்தான் ஹவிஸ்ஸைப் புஜிப்பதாகவும், பயன் அளிப்பதாகவும் தாத்பர்யம் கொள்ள வேண்டும். சரீரத்தைக் குறிக்கும் பதங்கள் சரீரத்துடன் நிற்காமல் சரீர அதிஷ்டாத்ரு பர்யந்தம் தெரிவிக்கும் என்பது, நான் பெருமன், நான் குட்டை, என்ற வாக்கியங்களில் பிரஸித்தம், அவ்விதமே, ஜீவாத்மா வாசகமான இந்த்ராதி பதங்கள், அவர்களைச் சரீரமாகக் கொண்ட, அந்தர்யாமியான, சேஷியான பரமசிவனைக் குறிப்பது வாக்யந்யாய ப்ரஸித்தமே. கர்ப்பிணியான தாய் கர்ப்பம் வளர்வதற்காக பிறரால் கொடுக்கப்பட்ட, மசக்கை என்று சொல்லப்படும் ப்ரியமான ஆகாரங்களைக் கொண்டு, தான் திருப்தியடைகிறாள். தன் கர்பபத்தில் உள்ள குழந்தைக்கும் திருப்தி உண்டுபண்ணுகிறாள். அந்த ஆகாரம் கொடுத்தவரையும் இஷ்டபலன் நிறைவேறும்படி செய்து சந்தோஷப் படுத்துகிறாள். அவ்விதமே ஹவிர்பாகம் பெற்றுக்கொள்வதால், நேரில் பெற்றுக்கொள்ளும் இந்த்ராதி தேவர்கள் திருப்தியடைந்து, அந்தர்யாமியான பரமசிவனும் திருப்தியடைந்து. ஹவிர்பாகம் கொடுக்கும் யஜமானனும் விரும்பிய

பயனை அடைகிறான். அதேபோல் ஹவிர்பாகம் அனைத்தும் அந்தர்யாமியாகிய பரமசிவனுக்குத்தான் என்பது வெளியாகும். கூர்ம புராணவசனம் இக்கருத்தை விளக்குகிறது.

மகா பாரதத்திலும் சரீரமில்லாத கடவுள் தேவர்கள் சரீரத்தை சரீரமாகக் கொண்டிருக்கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பாரதத்தில், நியோகாத்யாயத்தில் பரமசிவன் கூறுவதாவது - அக்னி, என் அந்தர்யமன சக்தியான நியோகத்தால் ஹவ்ய கவ்யங்களைப் பெற்றுக்கொள்ளுகிறான் பாகம் செய்கிறான். அப்படியே இந்திராதி ஸகல தேவர்களும் அவர்கள் கார்யங்களைச் செய்கிறார்கள் என்ற உண்மையை அறியுங்கள் என்பது. நாம நாமைவ நாமமே என்ற சுருதியில் - நாம நாம எல்லா இந்திரன் முதலிய பெயர்களும் மே ஏவ நாம - என்னுடைய பெயராகவே கொள்ள வேண்டும்: ஹரிவம்சத்திலும் இந்த சுருதியின் அர்த்தம் இவ்விதம் விளக்கப்பட்டிருக்கிறது.

ரிக்வேத ஸூத்ரகாரர் பகவான் ஆச்வலாயன மகரிஷி சொல்வதையும் கவனிக்க. ஸர்வாணி ஹவா ஏதஸ்ய நாம தேயானி - உலகில் எவ்வளவு பதங்கள் உச்சரிக்கப்படுகின்றனவோ அவை அனைத்தும் இந்தப் பரமசிவன் பெயர்கள் ஆனதால், அவரைத்தான் குறிக்கும். ஸர்வாஸ்ஸேனா: ஏதஸ்ய ஹவா - எல்லா அரசர்களின் ஸேனைகளும், இந்த த்ரிபுரஸம்ஹாரம் செய்தவரின் ஸேனைகள்தான். அரசர்களும் இந்த்ராதி தேவர்களும் ருத்ராம்சம் என்பது தாத்பர்யம். ஸர்வாண்யுச்ச்ரயாணி ஏதஸ்யவா - உலகிலுள்ள உயர்ந்த பொருள்களனைத்தும் இந்த சிவபெருமான் அம்சமேயாகும். அல்லது உயரமான மலை முதலிய இடங்களில் இவர் வசிப்பதால் அவை இவருடையவை. எல்லா சப்தங்களும் பரமசிவனைத்தான் குறிக்கும். வாயவீய ஸம்ஹிதையில் சப்தமனைத்தும் தேவி ஸ்வரூபமென்றும், அர்த்தமனைத்தும் சிவஸ்வரூப மென்றும், உமாமகேச்வரர்கள் வாக், அர்த்தங்களாகச் சொல்லப்படுகிறார்கள்.

## சுலோகம் 72

ஸோமம் த்வதர்த்தம் அனுசுச்ரும ஸூயமானம்
ஆலம்பனம் பசுபதே! நியதம் பசூனாம் |
கவ்யம் ச தே கவி ஸதேவ ததத்வரேஷு
சண்டேச்வரேண ஸஹ நாகஸதாம் விவாத: ||

இவ்விதம் ப்ரதிக்ஞை செய்யப்பட்ட விஷயம் ஸகல ஹவிஸ்ஸுக்கும் சேஷீ பரமசிவன் என்பது விளக்கப் படுகிறது.

## பதவுரை

ஸூயமானம் - இடித்துப் பிழியப்படுகிற ஸோமம் - ஸோமரஸத்தை, த்வதர்த்தம் - உம்மைச் சேர்ந்ததாக, அனுசுச்ரும - மந்த்ரங்களால் தெரிந்து கொள்ளுகிறோம். அயம் ஸோமம் கபர்தினே, க்ருதம் ந பவதே மது என்பது, பிழியப்படும் ஸோமக் கொடியைக் குறித்துச் சொல்லப்படும் மந்த்ரம், பசுபதே - ஜீவராசிகளான பசுக்களை காக்கும் கருணா மூர்த்தியே! பசூனும் ஆலம்பனம் - பசுபந்தங்களில் ஆடுகளை யூப ஸ்தம்பத்தில் கட்டுவதும், நியதம் - தீர்மானமாக, த்வ தர்த்தம் அனுசுச்ரும - உமக்காகத்தான் என்பதை மந்த்ரங் களாலும், பசுபதி என்ற அஸாதாரணமான உமது நாமத் தாலும் தெளிவாக அறிகிறோம்.

இமம் பசும் பசுபதே தே அத்ய பத்னாமி அக்னே ஸுக்ருதஸ்ய மத்யே | அனுமந்யஸ்வ ஸுயஜா யஜாம ஜுஷ் டம் தேவானாமிதம் அஸ்து ஹவ்யம். ||

பசுபதே: பசவோ விரூபா: - பலவிதமான பசுக்கள் எல் லாம், பசுபதியான ருத்ரனைச் சேர்ந்தன என்பதை மற்றொரு மந்த்ரம் சொல்லுகிறது. கவி ஸத் - பசுவிடமிருந்து கிடைக் கும் சிறந்த ஹவிஸ்ஸான, கவ்யம் ச — தயிர், பால், நெய் முதலியதும், தே ஏவ அனுசுச்ரும - உம்முடையதுதான் என்றும் அறிகிறோம், ரௌத்ரம் கவி - என்றல்லவா சுருதி? தத் - ஆகையால், அத்வரேஷு - மூன்று விதமான ஹவிஸ் கொடுக்கப்படும் யாகங்களில், சண்டேச்வரேண ஸஹ - சண்டிகேச்வரரோடுகூட, நாகஸதாம் - தேவர்களுக்கு, விவாத : விவாதம் ஏற்படுகிறது.

## சுலோகம் 73

உத்பத்தித: சிவ ! க்ருஹீத ஸமந்வயாஸ்தே
ஸோம: பசுர்கவி ச ஸந்தி ஹவீம்ஷிதானி |
தேவா : பசௌ ஹவிஷி பாகமனுஞயா தே
க்ருண்ணந்தி தத்வத் இதரேஷ்வபி கல்பநீயம் ||

ஹவிஸ் தயாரிக்கும் ஆரம்ப காலத்திலேயே, பரமசிவன் ஸம்பந்தப்பட்டவைகள் என்பது ஸித்த விஷயமாதலால், உம்முடைய உத்தரவின் பேரில்தான் இந்திரன் முதலிய தேவர்கள் ஹவிஸ்ஸைப் பெற்றுக் கொள்ளுகிருர்கள்.

## பதவுரை

சிவ - பரமேச்வரா ! ஸோம: - ஸோமரஸம், பசு:—ஆடு என்ற வபாஹவிஸ், கவி ச ஸந்தி ஹவீம்ஷி - பசுவிடமிருந்து கிடைக்கும் சிறந்த பால், தயிர், நெய், என்ற ஹவிஸ் ஸுக்கள் எல்லாம்; உத்பத்தித ; - தயாரிக்கும் க்ஷணம் முதல், தே க்ருஹீத ஸமன்வயா: - உம்முடைய ஸம்பந்தம் பெற்றவைகள். அத: - ஆதலால், தேவா: - தேவர்கள், பசௌ ஹவிஷி - வபா என்ற பசு ஹவிஸ் விஷயத்தில், தே அனுஞயா - உம்முடைய அனுமதியின் பேரில்,

அனுமன்யஸ்வ, தேவாஞம் இதம் ஜுஷ்டமஸ்து - உத்தரவு கொடுங்கள், தேவர்கள் இதை, உம்முடைய சொந்தமான பாகத்தை ஸேவிக்கட்டும். என்று ப்ரார்த்திப்பதால், பாகம் கிருண்ணந்தி - தங்கள் பாகத்தைப் பெற்றுக் கொள்ளுகிருர்கள் இவ்விதம் வபா என்ற பசு ஹவிஸ் ஸித்தமாக விருப்பதால், தத்வத் - அதைப்போல, இதரேஷ்வபி - மற்ற ஸோம ரஸம், தயிர், பால், நெய், ஹவிஸ்ஸுகளிலும், உமது உத்தரவின் மேல்தான், உமது பாகமாகிய அவைகளை, இந்த்ராதி தேவர்கள் பெற்றுக் கொள்ளுகிருர்களென்று கல்ப்ப நீயம் - கல்ப்பித்துத் தீர்மானித்துக் கொள்ள வேண்டும். தத்ஸாமான்யாத் இதரேஷு ததாத்வம் என்பது ந்யாயம். பானை சோற்றுக்கு பருக்கை பதம் என்பதும், ஸ்தாலீபுலாகந்யாயம் உலகம் அறிந்ததே. அணிமாதி அஷ்டயோக ஸித்திபெற்ற தேவர்கள் ஒரே ஸமயத்தில் செய்யப்படும், பல தேசங்களிலுள்ள பல யாகங்களுக்கும் போய் ஹவிர்பாகம் பெற்றுக்கொள்ள முடியுமாதலால், சப்தம்தான் தேவதை, அர்த்தம் தேவதையல்ல என்ற கொள்கைக்கு அவசியமேயில்லை. கண்ணுக்குத் தெரியாத ஸ்வர்க்காதி விசேஷங்களைப்போல, இந்த்ராதி தேவர்களின் ஸ்வரூபம், உபாஸனுதி விதிகளில் காணப்படுவதால், அவசியம் ஏற்றுக் கொள்ளவேண்டிய விஷயமாகும். அவர்கள் பரமசிவன் அனுமதியால் பெற்றுக்கொள்ளுகிருர்கள் என்பதே தீர்மானம்.

## சுலோகம் 74

கர்மைகமேவ ந பரம் பசுபந்தனம் தே
கர்த்தவ்ய மாஹு ருபலப்ய தவாப்யனுஞாம் |
ஸர்வேஷு கர்மஸு பவத் ப்ரஸவேன பும்ஸாம்
ஆரம்பணம் ப்ரபத மந்த்ர விதோ க்ருணந்தி ||

ஸர்வகர்மா ஆரம்பத்தில் ஜபிக்கப்பட வேண்டிய, ஸாம வேதத்தில் உள்ள ப்ரபத மந்த்ரத்தின் அர்த்தத்தைக் கவனித்தால், எல்லா கர்மாக்களும், தங்கள் அனுமதியின் பேரில்தான் செய்யப்பட வேண்டும் என்பது தெளிவாகும் என்கிறார்.

### பதவுரை

பரம் பசுபந்தன மேக மேவ கர்மா - சிறந்த பசு பந்தனம் என்ற ஒரு கர்மாதான், தே - உம்முடைது, ஆதலால் தவ - உம்முடைய அனுக்ஞாம் - உத்தரவை—உபலப்ய அடைந்து, கர்த்தவ்யம் - செய்யப்பட வேண்டுமென்று ந ஆஹு: - சொல்லவில்லை. ஆனால் ஸர்வேஷு - கர்மஸு - எல்லா கர்மாக்களிலும், பும்ஸாம் ஆரம்பணம் – மனிதர்கள் ஆரம்பிப்பதை பவத் ப்ரஸவேன - உமது அனுமதியைப் பெற்று, கர்த்தவ்யம் – செய்யப்பட வேண்டியதாக, ப்ரபத மந்த்ர வித:— ப்ரபத மந்த்ரத்தின் அர்த்த மறிந்தவர்கள், க்ருணந்தி- சொல்லுகிறார்கள்.

எல்லாக் கர்மாக்களின் முதலில் ஜபிக்கப்பட வேண்டிய ப்ரபத மந்த்ரம் ஸாமவேதத்தில் காணப்படுகிறது. அது தப: ச தேஜ: ச என்று ஆரம்பித்து, ப்ரம்மண: புத்ராய நம: என்று முடிகிறது. அங்கு, விரூபா க்ஷோஸி - தாங்கள் முக்கண்ணராக இருக்கிறீர் என்று ஆரம்பித்து, த்வாம் - ப்ரபத்யே - உம்மைச் சரணமடைகிறேன். த்வயா ப்ரஸூத:- உம்முடைய உத்தரவின்பேரில், இதம் கர்ம - இந்தக் கார்யத்தை, கரிஷ்யாமி - செய்யப் போகிறேன் ; தன்மே ஸம்ருத்யதாம் - அந்தக் கார்யம் நன்கு நிறைவேறி, பயன் தரட்டும். தன்ம உபபத்யதாம் - அது எனக்கு உகந்த தாக, அனுகுணமாக ஆகட்டும். என்று வேண்டப்படுகிறது. ஆகவே, இந்த ப்ரபத மந்த்ரத்தின் அர்த்தத்திலிருந்து, எல்லாக் கார்யங்களும் பரமேச்வரன் அனுமதியால் செய்யப் படுகின்றன. எல்லா ஸங்கல்ப்பங்களும் பரமேச்வர

ப்ரீத்யர்த்தம் என்றும், சிவசம்போ ராக்ஞயா ப்ரவர்த்த மானஸ்ய என்றும் செய்யப்படுவது, ப்ரத்யக்ஷமாக அனுபவத்தில் இருந்து வருகிறது.

## சுலோகம் 75

ஸங்கல்ப்பத: ப்ரப்ருதி யக்ஞதனும் விபஜ்ய
தேவாந் ப்ரஜாபதி முகான்ப்ரதி தர்சயந்த: |
ஸோமாஹுதிம் ஹுதவஹார்ச்சிஷி ஹூயமானாம்
அத்வர்யவஸ் தவ க்ருணந்தி கிரீச ! பாகம் ||

ஸோமரஸம் தயாரிக்கும் ஸமயத்திலேயே பரமசிவ ஸம்பந்தமுள்ளது என்பதை அயம் ஸோம:கபர்தினே க்ருதம் ந பவதே மது, - என்ற மந்த்ரம் தெரியப்படுத்துவதுபோல, அந்த ஸோமரஸம் ஹோம காலத்திலும் ஈச்வர ஸம்பந்த முடையது என்பதை விளக்குகிறார்.

### பதவுரை

ஸங்கல்ப்பத :- ப்ரப்ருதி - அக்னிஷ்டோமேன யக்ஷ்யே- என்று ஸங்கல்ப்பம் செய்வது முதல், யக்ஞதநும்—யாககர்மாவின் சரீரத்தை, விபஜ்ய-பிரித்து ப்ரஜாபதிமுகான் தேவான் - அந்த அந்த பாகம் அந்த அந்த தேவதாஸ்வரூபம் என்ற வாக்கியங்களால், ப்ரஜாபதி முதலிய தேவர்களை, ப்ரதிதர்சயந்த: - நேரில் ஸாக்ஷாத்கரித்துக் காட்டுகின்ற, அத்வர்யவ:— யஜுர் வேத மறிந்தவர்கள், ஹுதவஹார்ச்சிஷி - அக்னி முகமான ஜ்வாலையில், ஹூயமானாம்-ஹோமம் செய்யப்படுகிற, ஸோமாஹுதிம்-ஸோமரஸம் என்ற ஹவிஸ்ஸை, கிரீச-ஹேகைலாஸ பதியே, வேதப்ரதிபாத்ய புருஷனே ! தவ பாகம்-உம்முடைய அம்சமாக, க்ருணந்தி-சொல்லுகிறார்கள்

ப்ரஜாபதிர் நமஸாந்தோச்சதே என்றபடி, யக்ஞத்து மந்த்ராங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளில் ருத்ர ஆஹுத: என்ற சுருதியில் கூறப்பட்டிருப்பதால், ஹோமம் செய்யப்படும் நிலையிலுள்ள ஹவிஸ்ஸுக்கு, ஸோமரஸத்துக்கு, ஈச்வரன் தாத்பர்யம் கூறப்படுவதால், ஸோமஹவிஸ், உத்பத்தி காலத்தில் போல் ஹோமகாலத்திலும் ருத்ரபாகம் தான்.

## சுலோகம் 76

ஸர்வம் தனம் தனபதே: உபபுக்தசிஷ்டம்
யத்தேவதாதிதி ஸமாச்ரித ப்ருத்யவர்க்கை: |
யக்ஞேச! யக்யபரி சிஷ்டமபி த்வதீயம்
மந்திக்ரஹவ்யதிகரே பவதா யதோக்தம்: ||

யக்ஞத்திலுள்ள மூன்று விதமான ஹவிஸ்ஸுகள் ஈச்வரனுககுச் சொந்தமானவை என்பதுபோல, யக்யஞ்களில் புஜிக்கப்பட்ட பிறகு, சிஷ்டமான பாகமும் பரமேச்வரனைச் சேர்ந்தது என்று விளக்கப்படுகிறது.

### பதவுரை

தேவதாதிதி ஸமாச்ரித ப்ருத்யவர்கை :— யஜமானன் அனுமதியின்பேரில் இந்திராதி தேவதைகள், அதிதிகள் அண்டின வேலைக்காரர்கள் இவர்களால் உபபுக்த சிஷ்டம் - அனுபவிக்கப்பட்டு மிகுதியான யத்ஸர்வம் தனம் - யாதொரு எல்லாப்பணமும், யதா தன பதே: ஸ்வம் - எப்படிப் பணத்தின், யஜமானனுக்கே சொந்தமோ அப்படியே, யக்ஞேச - யாகத்துக்குத் தலைவரே! யக்ஞ பரிசிஷ்டமபி தனம் - யக்ஞத்தில் உமது அனுமதியின்பேரில் இந்த்ராதி தேவர்களாலும, ருத்விக்குகளாலும் அனுபவிக்கப்பட்டு மீதியான ஹவிஸ் முதலிய, பதார்த்தங்கள், த்வதீயம் - உம்மைச் சேர்ந்தவை உமக்கே சொந்தமானது என்று மந்திரக்ரஹவ்யதிகரே - மந்தி என்று வ்யவஹரிக்கப்படும் ஓர் க்ரஹபாத்திரத்தின் விருத்தாந்த ஸமயத்தில், பவதா - உம்மாலேயே, யதா உக்தம் - சொல்லப்பட்டிருக்கிறதல்லவா?

### விசேஷவுரை

யஜுர் வேதத்தில் ஈச்வர வாக்யரூபமான வேதவாக்யம் காணப்படுகிறது. ஆதலால் வேதம் சொன்னால் ஈச்வரன் சொன்னார் என்றே கொள்ளவேண்டும். யத் யக்ஞவாஸ்தௌ ஹீயதே மமவை தத் யக்ஞசாலையில் அனுபவிக்கப்பட்ட பிறகு மிகுதியாக எவை இருக்கிறதோ அவையனைத்தும் என்னுடையது என்றும், அவ்விதமே பஹ்ருச ப்ராம்மணத்தில் மம வா இதம், மமவை வாஸ்துஹம

எல்லாம் என்னுடையது, அப்படியே, அநுபவித்த பிறகு யக்ஞபூமி என்ற வாஸ்து ப்ரதேசத்தில் இருக்கிறதெல்லாம் என்னுடையதுதான் என்றும், யக்ஞசிஷ்டம் ருத்ரனைச் சேர்ந்ததாகச் சொல்லப்படுவது காண்க. ஆதலால் ஆரம்பம் முதல், ஸங்கல்ப்பம் முதல், ஹவிஸ் தயாரிக்கும் காலத்திலும், ஹோமம் செய்யும் காலத்திலும், மற்றவர்கள் அனுபவிக்கும் காலத்திலும், பிறகு மிகுந்திருக்கும் காலத்திலும். ஸர்வகாலத்திலும் ஸர்வஹவிஸ்ஸுக்கும் உண்மையான சொந்தக்காரர் ஸாக்ஷாத் பரமேச்வரன். அவர் அனுமதியின்பேரில் மற்றவர்கள் பெற்றுக்கொள்ளுகிறார்கள்; புஜிக்கிறார்கள், அந்த ஸமயத்திலும் அவர்கள் உள்ளே அந்தர்யாமியாகப் பரமேச்வரன் வீற்றிருக்கிறார். ஆதலால் ஸர்வயக்ஞசேஷீ பரமசிவன் என்பது சுருதிப்ரமாண ஸித்தமாகும். இதையறியாமல் மேலாக இந்த்ராதி தேவர்கள் சொந்தக்காரர்கள் என்ற தவறுதலான அறிவால், தக்ஷன்செய்தயாகம், ஸர்வசேஷியான ஈச்வரன் இல்லாததால் அழிக்கப்பட்டு, அனைவருக்கும், யஜமானனுக்கும் தேவர்களுக்கும், ப்ருகு முதலான ரித்விக்குகளான முனிவர்களுக்கும் யாக கர்மாவிற்கும் கெடுதல் ஏற்பட்டது. கண்கூடாகத், தகராறில்லாமல் இன்றைக்கும் பாகவதாதி வைஷ்ணவக்ரந்தங்களிலும், வைஷ்ணவர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயமாக ப்ரஸித்தியடைந்திருக்கிறது.

வாயவீய ஸம்ஹிதையில் பரமேச்வரன் அத்வரராஜன் என்று விளக்கி முடிவில்.

நைவேச்வர பஹிஷ் க்ருதம் கர்மகுர்யாத் கதாசன என்று, பரமேச்வரனை நீக்கி ஒரு கர்மாவும், ஒருபோதும் செய்யக் கூடாதென்று விதிக்கப்பட்டிருக்கிறது. வ்ருதா யக்ஞோ வ்ருதா ஹோமோ சிவநிந்தாரதஸ்ய து - சிவத்வேஷத்துடன் செய்யும் யக்ஞம், ஹோமம் வீணுவதோடு, அனர்த்தங்களையும் கொடுக்கும் என்பதும் தெளிவு. ஆதித்யபுராணத்திலும் சிவனில்லாமல் யக்ஞம் செய்யாதே என்று பிரம்மா தன் புத்ரனான தக்ஷனைத்தடுத்ததாகவும்,

சம்போரவஞா யத்ராஸ்தே ஸ்தாதவ்யம் நைவ ஸூரிபி: என்றபடி சிவநிந்தை நடக்குமிடத்திலிருக்கக்கூடாதென்று, தக்ஷன் யக்ஞசாலையிலிருந்து, ப்ரம்மதேவர் வெளிச்சென்றதாகவும், ததிசி முனிவர் பிறகு தக்ஷனுக்கு சிவப்ரபாவம் உரைத்ததாகவும் கூறப்பட்டிருக்கிறது.

அவ்விதமே ப்ரம்மாண்ட புராணத்திலும் உத்தரபாகத்தில் ஹயக்ரீவ அகஸ்த்ய ஸம்வாத ப்ரகரணத்தில் சக்ரபாணியான

விஷ்ணுவிற்கும் வீரபத்ரருக்கும் நடந்த யுத்தம் முதலில் வர்ணிக்கப்பட்டு முடிவில் வீரபத்ரர் சக்ராயுதத்தை விழுங்கிவிட்டதாகவும் சொல்லபபடுகிறது. பிறகு விஷ்ணு. வீரபத்ரரைப் புகழ்ந்ததாகவும். தக்ஷனுக்கு நல்ல தண்டனை ஏற்பட்டதென்று மெச்சினதாகவும், 'தேவி த்ரோஹ பாபத்துடன் ஈச்வர த்ரோஹ பாபத்தையும் பெற்றான். எனக்கே சக்ராயுதம் இழக்கும் கதியென்றால், அவனை யார் காப்பாற்றுவார், நான் பரமேச்வரனை அர்ச்சித்து. தபஸ் பலத்தால் மற்றொரு சக்ராயுதம் பெற்றுக் கொள்ளுகிறேன்'' என்று விஷ்ணு சொன்னதாகவும் தெளிவாகக் கூறபபட்டிருக்கிறது. கூர்ம புராணத்திலும். எல்லா யக்ஞஸம்பாரங்களையும் கங்கை ப்ரவாகத்தில் எறிந்தாரென்றும் பகன கண்களை அனுயாஸமாகக் கரஞ்சத்தின் நுனியால் குத்திக் குளறிப் பிடுங்கினாரென்றும் சொல்லப்பட்டிருக்கிறது, அவ்வாறே பிரம்மாண்ட புராணத்திலும் ததீசமுனிவர் உபதேசத்தையும் கேளாமல் தக்ஷன் யாகம் செய்ததாகவும் தேவியின் தூண்டுதலால் வீரபத்ரர் ஸ்ருஷ்டிக்கப்பட்டு யக்ஞத்தை அழித்ததாகவும், மான் உருவமெடுத்து ஓடின. யாக கர்மாவை தொடர்ந்து சென்று அழித்ததாகவும். பிறகு பிரம்மதேவரால் துதிக்கப்பட்டு சிவனருளால், தலை வெட்டப்பட்ட விஷ்ணுவும், யாக கர்மாவும், மற்ற தேவர்களும, முனிவர்களும். மறுபடி பழைய உருவங்களை யடைந்ததாகவும்; சொல்லப்பட்டிருக்கிறது. பிறகு தக்ஷன் தன் தவற்றை உணர்ந்து ஈச்வரனை ஸ்தோத்திரம் பண்ணி பிரார்த்திக்கிறான். ஆசுதோஷியான ஈச்வரன் அவனை மன்னித்துக் கல்பத்தின் முடிவில் அவனுக்கு கணத்தலைவன் பதவியையும் அனுக்ரஹித்தார்.

மகா பாரதத்திலும்:—பூமி நடுங்கினது. ஸமுத்ரம் கலங்கியது; மலைகள் பிளக்கப்பட்டன; திக்குகள் மயங்கின; உலகத்தை இருள் சூழ்ந்தது. சங்கரனைப் பார்த்துப் பல்லைக் காட்டிச் சிரித்துக் கொண்டு புரோடாசத்தைப்புஜித்த பூஷாவின் பற்கள் உடைக்கப்பட்டன. (இன்றைக்கும் அப்பூஷ தேவதை மாவைச் சருவாகச் செய்து கொடுத்தால் பாகம் பெற்றுப் புசிக்க முடியும், பல் இழந்ததால் அன்னம் கூட சாப்பிட இயலாது போனான்). பிறகு எல்லாரும் எல்லா பாகமும் பரமேச்வரனைச் சேர்ந்ததாக ஏற்படுத்தினதால், பிழைத்து. முன் போல் அவரவர் ரூபங்களையும் பெற்றார்கள்.

ஆதலால் ஈச்வரனை நீக்கி செய்ய நினைத்த தக்ஷயக்ஞத்தின் கதியைப் படித்து அறிந்தவனும், ஸகலயக்ஞ ஹவிஸ்ஸும், யக்ஞபுக்த சிஷ்டமும் பரமேச்வரனுக்கே சொந்தம் என்று

சுருதி ஸ்ம்ருதி புராணங்களால், அறிந்தவனும் அந்வயவ்ய திரேக ந்யாயத்தால், ஈச்வரன் தான் யக்ஞசேஷீ என்ற உண்மையை அறிவான்.

## சுலோகம் 77

கவ்யேன ஸோம ஹவிஷா சருபி : ச பக்வை:
ஸாத்யாந் த்ரிஸப்த முனயா விபஜந்தி
யக்ஞாந் |
ஸர்வேஷ்வ தேஷ்வபி பவாநவிசேஷதஸ்த்வாம்
ராஜானம் அத்வரவிதௌ வயம் ஆமநாம : ||

### பதவுரை

21 யாகங்களுக்கும் பரமேச்வரன் தான் சேஷீ. கவ்யேன — நெய், பால், தயிர்களால், ஸாத்யான் - செய்யப்படும் ஔபாஸனய முதலாகிய, ஸ்தாலீ பாகம் ஆக்ரயனம் அஷ்டகா, பிண்ட பிதிர்யக்ஞம், மாஸி சிராத்தம் சைத்ரீ, என்ற சூலகவம் என்ற ஈசானபலி, ஆச்வயுஜீ என்ற ஏழு பாகயக்ஞங்களையும் ; ஸோம ஹவிஷா ஸாத்யான் - ஸோமரஸத்தால் செய்யப்பட வேண்டிய அக்னிஷ்டோமம், அத்யக்னிஷ்டோமம், உக்தியம, ஷோடசீ, வாஜபேயம், அதிராத்ரம், அப்தோர்யாமம், என்ற ஏழுவிதமான ஸோமஸம்ஸ்தை யக்ஞங்களையும், பக்வை: சருபி: ஸாத்யான் - அக்னியில் பாகம் செய்யப்பட்ட ஹவிஸ்ஸால் செய்யப்படவேண்டிய ஏழு ஹவிர் யக்ஞங்களையும் - ( ஆதானம் அக்னிஹோத்ரம், தர்சபூர்ணமாஸம் இஷ்டி, ஆக்ரேயணேஷ்டி சாதுர்மாஸ்யம், நிரூடபசுபந்தம், ஸௌத்ராமணி) முனய :- ஸூத்ரகாரர்களான ரிஷிகள், த்ரிஸப் தான் - மூவேழு - 21 யக்ஞங்களை, விபஜந்தி - பிரித்துக் கூறியிருக்கிறார்கள். தேஷு ஸர்வேஷு அபி - அவைகள் எல்லாவற்றிலும் பவாந்—தாங்கள், ஸ்வாமி யஜமானனாக இருக்கிறீர்.

'த்ரிஸப்த யத் குஹ்யாணி த்வே உத்' இருபத்தோர் யாகங்களும், த்வே உத - த்வய்யேவ - உமக்கே செய்யப்படுகின்றன என்று சுருதிகள் உத்கோஷிக்கின்றன. வயம் - நாங்கள், அவிசேஷத : - பிரித்துச் சொல்லாமல், பொதுவாக, த்வாம் - உம்மையே, அத்வரவிதௌ ராஜானம் - யக்ஞங்களுக்கெல்லாம் தலைவன் என்று ஆமநாம :—

ஆவோ ராஜானம் அத்வரஸ்ய ருத்ரம்
காதபதிம், மேதபதிம்

என்ற சுருதிகளைக் கொண்டு பொதுவாகச் சொல்லுகிறோம்.

## சுலோகம் 78

அக்னிம் ப்ரகாசயது சங்கர ருத்ரவந்தம்
மந்த்ரஸ் த்வமக்ன இதி வா ததநந்தரோ வா!
ரராஜன்வதீ க்ஷிதிரிதீவ விசேஷணஸ்ய
நாலம் ப்ரதீப மபநேதும் இமௌ ப்ரகர்ஷம் ||

அக்னயே ருத்ரவதே புரோடா சமஷ்டா கபாலம் நிர்வபேத்— என்ற யக்ஞத்தில் அக்னிக்கு விசேஷணமாக ருத்ரனைக் கொடுத்திருப்பது, ருத்ரனுக்கு அபஹர்ஷத்தைக் காட்டாது என்று விளக்குகிறார்.

### பதவுரை

சங்கர—பரமேச்வரா! த்வமக்ன இதி மந்த்ரோவா— த்வமக்னே என்ற மந்த்ரமும், ததநந்தரோவா - அதற்கடுத்த ஆவோராஜானம் என்ற மந்த்ரமும், யாஜ்யா புரோனுவாக்யா மந்த்ரங்களாகிய இவ்விரண்டும், ருத்ரவத் அக்னி தேவதையுள்ள யாகத்தில் விநியோகிக்கபபட்டிருப்பதால், ருத்ரவந்தம் அக்னிம் ப்ரகாசயது - ருத்ரவத் அக்னி தேவதையை வெளிப்படுத்தட்டும் ஆயினும், ராஜன்வத் க்ஷிதிரிதீவ - நல்ல ராஜாவையுடைய பூமி என்ற வாக்யம் போல, அங்கு பூமி விசேஷ்யமாகவிருந்தாலும், ராஜா விசேஷணமாகவிருந்தாலும் ராஜா தான் சிறந்தவன் என்பது வெளிப்படுவது போல இமௌ - இவ்விரு மந்த்ரங்கள், விசேஷணஸ்ய - அக்னி விசேஷணமான ருத்ரனுக்கு உள்ள, ப்ரகர்ஷம் - மேன்மையை, ப்ரதீபம் - எதிரடையாக, அபநேதும் - நீக்குவதற்கு விசேஷணமானதால் ருத்ரன் அக்னிக்கு கீழ்ப்பட்டவன் என்று சொல்வதற்கு நாலம் - சக்தியுள்ளவைகள் அல்ல.

## சுலோகம் 79

யா ரோஹிணீ பவதி தேவ! ததா த்வதீயா
தஸ்யாம் த்வேதேக விஷயௌ விஷமாக்ஷ!
த்ருஷ்டௌ!
மந்த்ரா விமௌ ததிஹ யக்ஞபதித்வ மீச
ஸ்பஷ்டம் த்வதேகவிஷயம் ப்ரதியாந்திதீரா:

ரௌத்ரீம் ரோஹிணீம் ஆலபேத என்ற யாகத்தில் இவ்விரு மந்த்ரங்களும், யாஜ்யா புரோநுவாக்யா மந்த்ரங்களாக விநியோகிக்கப்பட்டு, இதர ஸம்பந்தமில்லமால் சிவனையே வெளிப்படுத்துகிறபடியால், இம்மந்த்ரங்கள் ஈச்வர ப்ரகாசமாகத்தான் கொள்ள வேண்டும்.

## பதவுரை

விஷமாக்ஷ - முக்கண்ணனே! யா த்வதீயா ரோஹிணீ பவதி - யாதொரு, உமக்கு மாத்திரம் ரோஹிணீ என்ற ஹவிஸ் கொடுக்கப்படுகிறதோ, ததா - அப்பொழுது, தேவ - கடவுளே தஸ்யாம் - அந்த ரோஹிணீ ஹவிஸ்ஸில் இமௌ மந்த்ரௌ - இந்த இரண்டு மந்த்ரங்கள், த்வதேக விஷயௌ த்ருஷ்டௌ, உம்மை மட்டும் வெளிப்படுத்தும் மந்த்ரங்களாகக் காணப்படுகின்றன. தத் - ஆகையால், ஈச - பரமேச்வரனே! இஹ - இங்கு தீரா:-பெரியோர்கள் புத்திமான்கள், யக்ஞபதித்வம் - யாகத்தலைமையை ஸ்பஷ்டம்-தெளிவாக, த்வதேக விஷயம் - உம்மை மட்டும் சேர்ந்ததாக, ப்ரதியந்தி - அறிகிறார்கள்.

ப்ருது முதலிய 16 அரசர்கள், சிவனுக்கு யாகம் செய்து ஸ்வர்க்கம் சேர்ந்ததாகவும், ராமாயணத்தில் அச்வமேத யாகத்தில் ஈசனை நமஸ்கரித்ததாகவும் கூறப்பட்டிருப்பது காண்க.

## சுலோகம் 80

பித்ரா குமாரமிவ ப்ருத்ய மிவேச்வரேண
சிஷ்யம் கிரீச! குருணேவ குணாதிகேன |
அக்னிம் த்வயா க்ருதவிசேஷண மூசிவாம்ஸௌ
மந்த்ராவிமௌ கமயத: பரமம் ப்ரகர்ஷம் ||

ருத்ரவதக்னி யாகத்தில் ருத்ரனை விசேஷணமாகக் கூறுவது மேன்மையைத்தான் தெரிவிக்கிறது.

## பதவுரை

பித்ரா குமாரமிவ - தந்தையுடன் கூடிய பிள்ளை என்பதைப் போலவும், ஈச்வரேண ப்ருத்யமிவ - யஜமானனுடன் கூடிய வேலைக்காரன் என்பதைப் போலவும், குருணா சிஷ்யமிவ -

ஆசார்யருடன் கூடிய மாணுக்கன் என்பது போலவும், கிரீச - வார்த்:ஹதயின் உண்மையறிந்த கடவுளே! குணுதிசுன த்வயா- குணம் நிரம்பிய உம்மால், க்ருநவிசேஷணம் - அடைமொழி கொடுக்கபபட்டது, அக்னிம் - அக்னியை, ஊசிவாம்ஸொ - சொல்லுகிற இமௌ மந்த்ரௌ - இவ்விரண்டு மந்த்ரங்கள், பரமம் ப்ரகர்ஷம் - சிறந்த மகிமையை, கமயத :— அறிவிக்கின் றன. குறிக்கும் வாக்ய கத ப்ராதான்யம் வேறு; வஸ்து கத ப்ராதான்யம் வேறு என்ற ந்யாயம் இங்கு கொள்ளவேண்டும். அக்னிக்கே ருத்ரபத ப்ரயோகத்தால் தான் ஆங்காங்கு துதி காணப்படுகிறதென்ருல், ருத்ரனுக்குத் தான் சொந்த மகிமை அதிகம் என்பதில் ஸந்தேகம் இல்லே.

## சுலோகம் 81

ரிக் ஸம்ஹிதா வததி மேதபதிம் பவந்தம்
ராஜானம் அத்வரவிதே: அயமாஹ மந்த்ர: |
த்வத் ஸூக்த மந்த்ர கணமண்டன மௌளி
ரத்னம்
ரூபேண ச த்வதபிதான க்ருஹீத சக்தி: ||

### பதவுரை

ரிக்ஸம்ஹிதா - ரிக்வேதம், காதபதிம், மேதபதிம் என்ற மந்த்ரம், பவந்தம் - தங்களே, மேதபதிம் வததி - யக்ஞத்திற்கு அதிபதி யென்று சொல்லுகிறது, அப்படியே அயம் மந்த்ரம - ஆவோராஜானம் என்ற மந்த்ரம், அத்வரவிதே : ராஜானம் ஆஹ - யாகத்தலேவஞக உமமைச் சொல்லுகிறது, த்வத் ஸூக்த மந்த்ர கண மண்டன மௌளி ரத்னம் - உம்முடைய தான ருத்ர ஸூக்தத்தில் அலங்காரமான, சிரோமணியான இந்த மந்த்ரம் யஜுர் வேதத்தில், இமாருத்ராயேதி ஸூக்தக் கடைசியில் படிக்கப்பட்டிருப்பதாலும, ரூபேண ச - அர்த்த ஸ்வரூபத்தை யோசிப்பதாலும், த்வதபிதான க்ருஹீத சக்தி :— உம்மைச் சொல்லித் தெரியப்படுத்துவதில் ஸாமர்த்தியம் பெற்றது என்பது திண்ணம். அக்னி தேவதாகமாக ஸௌனகர் சொல்லியிருந்தாலும், யஜுர் வேத பாடத்தாலும், அர்த்தப்ரகா சன ஸாமர்த்யத்தாலும், ஆவோராஜானம் என்பது ருத்ரனேத் தான் குறிக்கும் மந்த்ரமாகும் என்பது தாத்பர்யம்.

## சுலோகம் 82

த்வத்கம் புரா மரணதஸ் ஸ்தனயித்னு கல்பாத்
ஆகாரணம் பரம காருணிக ப்ருவாண : |
மந்த்ரோயமாவ இதி யாவத் உபக்ரமாயா :
மூலம் மஹேச ! விதிதம் சிவதர்ம ஸூக்தே : ||

### பதவுரை

பரமகாருணிக - விஷமுண்டும், த்ரிபுரமெரித்தும் உலகம் காத்த கருணைக்கடலே ! மஹேச - பரமேச்வரனே ! ஆவ இதி அயம் மந்த்ர :— ஆவோராஜானம் என்ற இந்த மந்த்ரம், ஸ்தனயித்னு கல்பாத் - இடி போன்ற, மரணத: புரா - மரணம் கிழத்தனம், இந்த்ரிய சக்தி யிழத்தல் முதலிய நாசத்துக்கு முன், த்வத்கமாகாரணம் - உம்மைக் கூப்பிடுவதை ப்ருவாண :— சொல்வதால், யாவதுபக்ரமாயா :— யாவத் என்ற சப்தத்தில் ஆரம்பிக்கப்படுகிற, சிவதர்ம ஸூக்தே :— சிவதர்ம வசனத் துக்கு,

யாவந் ந யாதி மரணம் யாவந் நாக்ரமதே ஜரா |
யாவந் நேந்த்ரிய வைகல்யம் தாவத் பூஜய சங்கரம் ||

என்ற வாக்யத்துக்கு. மூலம் - ஆதாரபூத, வேதமந்த்ரமாக விதிதம் - அறியப்படுகிறது.

சிவதர்ம ஸூக்தத்திற்கு மூல பூதமான, ஆவோராஜானம் என்ற சுருதி, ஸ்ம்ருதிப்படி சங்கர பூஜையைத்தான் தெரிவிக் கும். அக்னியைத் தெரிவிக்க முடியாது என்பது கருத்து.

ச்ருதேரிவார்த்தம் ஸ்ம்ருதிரன்வ கச்சத் என்ற மகாகவி காளிதாஸர் வசனப்படியும், ஸ்மருத்யாதிகரண ஜைமினிய ந்யாயப்படியும், ஆவோ ரா ஜானம் என்ற மந்த்ரம் சிவ தர்ம வசனத்துக்கு மூலமானதால், இரண்டும் ஏக அர்த்தமாக வேண்டும். ஆதலால் ருத்ர ப்ரதி பாதகம் தான் என்பது நிச் சயம்.

இவ்விதம் ஐந்து லக்ஷணங்களால் பரமேச்வரனுடைய பரத்வம் ஸ்தாபிககப்பட்டது.

## சுலோகம் 83

பீமோஸி சங்கர ! ம்ருகோ நு நிதர்சனம் தே
தேஜோபி ருச்சலித ஸூர்யஸஹஸ்ர
கல்பை: |
அக்ரோதனஸ் ஸ்மிதமுகோபி நிஜானுபாவாத்
ஆபாததஸ்தனுப்ருதாம் ந்ருபதிர் பயாய ||

### பதவுரை

சங்கர—ஸுகத்தைத் தரும் தெய்வமே! உச்சலித ஸூர்ய ஸகஸ்ர கல்பை:—உதயமான ஆயிரம் ஸூர்யனுக்கு ஸமான மான, தேஜோபி:-ஒளிகளால் பீமோஸி-அனைவரும் பயப்படும் படி இருக்கிறீர். ஒரு ஸூர்யனே தன் ஒளியால் ஹிதம் செய்ப வனுயினும் உஷ்ணத்தால் கொளுத்தி பயப்படச் செய்கிருன். ஆயிரம் ஸூர்யனுக்கு ஸமமான ஒளியுள்ள, சங்கரனுகிய தாங் கள் ஜனங்களை பயமுறுத்துவதால் பீமனல்ல; தங்களுடைய ஒளி யாரும் ஸகிக்கமுடியாமல் இருப்பதுபற்றி-பீமன். பயப்படக் காரணமாக இருப்பது உமது ஒளியைத் தாங்க ஜனங்களுக்குச் சக்தியில்லாதது தான். அவ்விதமே பாணினீ ஸூத்ரம் பீமா தயோ அபாதனே என்று சொல்லுகிறது தே - உமக்கு ம்ரு கோநு - ஸிம்மம் அல்லவா, நிதர்சனம் - திருஷ்டாந்தமாக ருத்ரத்தில் சொல்லப்படுகிறது. அக்ரோதன —கோபிக்கும் ஸ்வபாவமே இல்லாத. ஸ்மித முகோபி— புன்சிரிப்புள்ள முகத் துடன் கூடியிருந்த போதிலும். ந்ருபதி :—அரசன் நிஜானு பாவாத் — அரசனுக்குரிய தேஜஸ்ஸின் பலத்தால், தநுப்ரு தாம் - ஜனங்களுக்கு ஆபாதத:—மேலாக, வெளிப்படையாக, பயாய பவதி—பயத்துக்கும் காரணமாக ஆகிருனல்லவா ?

ஸ்துஹி ச்ருதம்-என்ற ருத்ர மந்த்ரத்தின் தாத்பர்யமாவது ச்ருதம்-வேதாந்தங்களின் ப்ரஸித்தமான, கர்த்த ஸதம் ஹ்ருதய குகையில் பள்ளத்திலிருக்கும். யுவானா —அழிவில்லாமல் மாறு பாடு இல்லாமல். என்றைக்கும் யுவாவான, ம்ருகம் ந— ஸிம்மம் போல, பீமம் - தேஜோ பலத்தில் பிறர் பயப்படக் காரண மான, உக்ரம்-பிறரால் அவாதிக்கத்தகாத உபஹர்த்தும் பாபங்களை அழிக்கும் ஸதாசிவனை. ஓ மனமே. ஸ்துஹி-துதிப் யாக.

மகா கவி காளிதாஸர் தன் சாகுந்தல நாடகத்தில் ரிஷி சிஷ்யர்கள் துஷ்யந்த ராஜன் அருகில் செல்லும்போது, தங்கள்

அனுபவத்தால், மகாராஜா தேஜஸ்ஸை விளக்குவதாக வர்ணிக்கும் ச்லோகங்களில் இரண்டு இக்கருத்தை வெளிப் படுத்தும். வாசல் காவல்காரன் உத்தரவு கொடுத்து உள்ளே போகிறேன். கஞ்சுகி, அரசன் பக்கத்தில் பழகுகிறவன் என்னை அரசன்பால் அழைத்துப் போகிறுன்; ஆயினும் அரசன் இயற் கையான ஒளியால் கண் பார்வைகளைத் திருப்பி என்னை வெளி யே தள்ளுவதுபோல், வார்த்தையால் தடுக்காமலே, தேஜோ பலத்தால் தடுப்பதுபோல் எனக்கு உணர்ச்சி ஏற்படுகிறது என்கிருர் சாரத்வதன். மற்றெரு சிஷ்யர் சார்ங்கரவன் கூறு வது—அரசன் மதுப்பழக்கமுள்ளவனல்ல. அழகில்லாமல் குரூர மான உருவம் படைத்தவனல்ல, ஆயினும் அரசன் பக்கத்தில் செல்லும்போது, ஒரு வித அச்சம் ஏற்படுகிறது; அதே அரசன் பல தடவை பார்க்கப்பட்ட போதிலும், அவ்வப்போது ஸமுத்ர ராஜன் போல, புதுப் புது தோற்றமளிப்பது ஆச்சர்யமாக இருக்கிறது.

## சுலோகம் 84

அப்யுத்யதம் கிரிச வஜ்ரமதீமஹே த்வாம்
த்வத் பிப்யத : பவன பானு க்ருசானு சக்ரா : |
ம்ருத்யு:ச தத்தத் அதிகார ப்ருதஸ்ததான்யே
ப்ரம்ஹத்வ லக்ஷண மயம் பயஹேதுபாவ: ||

### பதவுரை

கிரிச - வேதாந்த ப்ரதி பாத்ய ப்ரம்மமே! த்வாம் - உம்மை. அப்யுத்யதம் - உயரத்தூக்கப்பட்ட, வஜ்ரம் - வஜ்ராயுதம்போல். (பய ஹேதுவாக) அதீமஹே - கடோப நிஷத்திலிருந்து அறி கிறேம். பவன பானு க்ருசானுசக்ரா :— வாயு, சூர்யன், அக்னி, இந்திரன் நால்வர்களும் ம்ருத்யு : ச யமதர்ம ராஜனும், ததா - அவ்விதமே. அன்யே - மற்ற, தத்தத் அதிகார பூத :— அந்த அந்த அதிகாரத்தில் அமர்ந்திருக்கும் புருஷர்கள் அனைவர் களும், த்வத் - உம்மிடமிருந்து, பிப்யத : பயப்படுகிறவர்களாக, பவந்தி - இருக்கிருர்கள். அயம் - இந்த, பயஹேது பாவ : பயப்படக் காரணமாக இருப்பது, ப்ரம்ஹத்வ லக்ஷணம் ப்ரம்மத் தின் லக்ஷணமாக வேதாந்தங்களில், தைத்ரீய முதலிய இடங் களில் கூறப்பட்டிருக்கிறது,

ஏகமேவாத்விதீயம் ப்ரம்மா
ஏக ஏவ ருத்ரோ ந த்வீதியாய தஸ்தே

இந்த இரண்டு ச்ருதிகளின் அர்த்த பர்யாலோசனையில், ப்ரம்ம சப்தமும், ருத்ர சப்தமும் ஸமானார்த்தகம் என்பது வெளியாகிறது, ஆதலால் ருத்ர சப்தவாச்யனை ஸதாசிவன்தான் ப்ரம்மம் என்பது வெளியாகிறது.

## சுலோகம் 85

கோரா சிவாச பகவந் உபயீ தனுஸ்தே
கோரா பிஷஜ்யதி பவார்த்த முபாஸ்யமானா |
அன்யா பிஷக் ஜனக்ருதாம் ருஜ மீக்ஷமாணா
த்ருஷ்ட்யா ததாதி சிவதா மசிவாத்மனேபி ||

### பதவுரை

பகவந் - பகவானே! தே - உமக்கு கோரா - பயங்கர மானது, சிவாச - சாந்தமானது என்ற உபயீதநு:—இரண்டுவித மான உருவங்கள் இருக்கின்றன. அவைகளுள், கோர - பயங்கர மான உருவம், உபாஸ்யமானா ஸதி - வாக்கால் துதிக்கப்பட்டு, உடலால் வணங்கப்பட்டு, மனதால் த்யானம் செய்யப்பட்டதாக பவார்த்தம் - ஸம்ஸாரரோக க்ரஸ்தனை, பிஷஜ்யதி - வைத்யம் செய்து, ஸம்ஸாரரோகத்தை நீக்குகிறது. அன்யா - மற்றொன் றாகிய சாந்த உருவம் பிஷக் ஜனக்ருதாம் ருஜம் - வைத்யம் பண்ணுவதாகிய துதி, நமஸ்காரம், த்யானம், செய்விப்பதால் ஏற்படும் துக்கத்தை, ஈக்ஷமாணா பார்த்துக்கொண்டு அதை ஸகிக்காமல், அந்தக் கஷ்டம் கூடக் கொடுக்காமல் வைத்யம் செய்யக் கருதி, த்ருஷ்ட்யா - அழகான தன் சந்திரசேகர மூர்த்தி தர்சனத்தாலேயே, அசிவாத்மனேபி - பாபம் செய்த வனுக்கும் சிவதாம் - மங்கள உருவத்தை, ஈச தாதாத்ம்யத்தை, ததாதி - கொடுக்கிறது.

## சுலோகம் 86

கோராந்நமோ வித்தத: சமயந்தி ருத்ரை:
ஆர்த்தா ஹி கோர முபயாந்தி சிகித்ஸிதாரம் |
ப்ரீணந்தி சங்கர சிவாம் சமகானுவாகை:
ஹோமஸ்ய யத்தவ பவந்த்யுபயேபி மந்த்ரா: ||

### பதவுரை

யத் - எந்தக் காரணத்தால், தவ ஹோமஸ்ய - உம்முடைய ருத்ர ஏகாதசினி முதலிய ஹோமத்துக்கு, உபயேபி மந்த்ரா:—

இரண்டுவிதமான நமகம், சமகம் என்ற பிரிவுள்ள மந்த்ரங்கள் பவந்தி - விநியோகப் படுத்தப்படுகின்றனவோ, தத் - அந்தக் காரணத்தால், ருத்ரை :— ருத்ரமந்த்ரங்களால், நமக அநுவாகங்கள் பதினொன்றால், நம :— நமஸ்காரத்தை, விதத :— செய்கிறவர்கள், கோராம் - பயங்கரமான உமது உருவத்தை, சமயந்தி - அடங்கச்செய்கிறார்கள் (சாந்தமாகச் செய்கிறார்கள்) ஹி - ஏனென்றால், ஆர்த்தா :— ரோகிகள், கோரம் - மருந்து கொடுப்பதால் பயத்தைத் தரும், சிகித்ஸிதாரம் - வைத்யனை, உபயாந்தி - அடைகிறார்கள், சங்கர - ஸுகத்தைத் தருகிறவரே ! சமகாநுவாகை :— சமக மந்த்ரங்களைச் சொல்லி, ஹோமம் செய்வதால், சிவாம் - உமது மங்கள உருவத்தை, ப்ரீணந்தி - ஸந்தோஷப் படுத்துகிறார்கள்.

## தாத்பர்யம்

வைத்யன் ரோகிக்கு மருந்து கொடுத்து, பத்தியம் வைக்கும்போது பயம் அளிப்பவனாகவும், பிறகு வ்யாதி தீர்ந்ததும் புஷ்டிக்கு நல்ல லேகியங்கள், பழரஸம் அளிக்கும்போது, மங்களகரமாகவும் இருப்பதுபோல, பரமேச்வரன் ஸம்ஸார ரோகம் நீங்க, மனோ வாக், காயங்களால், த்யாநிக்கவும், துதிக்கவும், நமஸ்கரிக்கவும் தூண்டிவிட்டு பயமளித்து, பிறகு அம்மூன்று கர்மாவாகிய மருந்தால் ஸம்ஸார ரோகம் நீக்கி, புஷ்டியளிப்பதற்காக அம்ருதத்வத்தைக் கொடுக்கும்போது மங்கள ஸ்வரூபியாக இருக்கிறார் என்பது தாத்பர்யம். பிரம்மாண்டபுராணத்தில் பரமேச்வரனுக்கு கோரமான தநுக்கள் சூரியன், விஷ்ணு, அக்னி முதலியவை. சிவமான (அகோர), தநுக்கள் ஜலம், சந்திரன், ப்ரம்ம ஸ்வரூபம், முதலியவை எனக்கூறப்பட்டிருப்பதும் ஆதாரமாகும்.

## சுலோகம் 87

விஷ்ணு ப்ரஜாபதி புரந்தர பூர்வகேஷு
வாஜாதி துல்ய மிதரேஷ்வபி தைவதேஷு |
ஆசம்ஸிதேஷு சமகா : பரிசிஷ்யமாணம்
தாதார மீச்வர ! பவந்த மசப்த மாஹு : ||

## பதவுரை

விஷ்ணு ப்ரஜாபதி புரந்தர பூர்வகேஷு— விஷ்ணு ப்ரம்மா, இந்திரன் முதலிய, இதரேஷு தைவதேஷ்வபி -

மற்ற தேவதைகளும், வாஜாதி துல்யம் - அன்னம் முதலியவை போல வேண்டிக்கொள்ளப்படும், கர்மகாரகனுகச் சொல்லப் பட்டிருக்கும்பொழுது, ஈச்வர - பரமசிவனே ! சமகா :-' சமக மந்த்ரங்கள், பரிசிஷ்யமான - யிச்சப்படுகிற, வேண்டிக்கொள் ளப்பட்ட வஸ்துக்களில் சேர்க்கப்படாத, பவந்தம் - தங்களை, அசப்தம் தாதா - கொடுப்பவர் என்ற பதமில்லாமலேயே, பரி சேஷ்யந்யாயத்தால், தாதாரம் ஆஹு :- 361 பயன்களையும், கொடுக்கிற தைவம் என்ற சொல்லுகின்றன.

வேண்டப்படும் வஸ்துக்களில், அன்னம்போல, ப்ரம்மா, இந்திரன் விஷ்ணுவின் பதவிகளும் சேர்க்கப்பட்டு. எல்லாம் கொடுபடுபெரருள்கள் ; சிவ : ச மே - என்று சமகத்தில் இல்லாத தால், அவர் மற்ற எல்லாவற்றையும் கொடுக்கும் தாதா என்று ஏற்படுகிறது.

## சுலோகம் 88

யுக்தம் நமானயிது மீச்வர ! ஸந்நிதௌ தே
தேவாந்தராணி மஹதாமிவ மர்த்ய மாத்ரம் |
அந்தர்த்தி மத்வரவிதௌ ததபேக்ஷமாணு :
த்வத்கர்மஸீம்னி பரிஷேசன மாசரந்தி ||

## பதவுரை

ஈச்வர - ஸகல தேவதைகளுக்கும் தலைவரே ! மஹதாம் - பூஜிக்கத்தகுந்த பெரியோர்களுக்கு, ஸந்நிதௌ - எதிரில், மர்த்ய மாத்ரமிவ - ஸாதாரண மனிதனைப்போல, தே - உம்முடைய ஸந்நிதௌ - எதிரில், தேவாந்த ராணி—மற்ற சில்லரை தேவதைகளை மானயிதும் - பூஜிப்பது ந யுக்தம் - தகுதியற்றது என்று கருதி, தத் - அந்தக் காரணத் தால் அத்வரவிதௌ : யாகம் முதலிய பூஜாகாலத்தில், அந்த்தர்தி மபேக்ஷமாணு : - உமது மறைவை விரும்பினவர்கள், த்வத்கர் மஸீம்னி - உம்மைப் பூஜித்த கார்யம் முடிந்ததும் பரிஷேசனம் ருத்ரதேவன் மறைந்தருள வேண்டுமென்ற நோக்கத்துடன் தீர்த்தத்தால் நனைத்தலை, ஆசரந்தி - செய்கிருர்கள்.

அப : பரிஷிஞ்சதி ருத்ரஸ்யாந்தர் ஹித்யை - என்ற சுருதி இந்த அர்த்தத்தை விளக்குகிறது. ருத்ர பூஜைக்குப் பிறகு, அப உபஸ்ப்ருச்ய என்று தீர்த்தத்தைத் தொட்டு நனைத்து விட்டு மற்றவர்களுக்குப் பூஜை செய்வது, அவர்

பெரியவர், அவர் ஸந்நிதியில் சிறியவர் பூஜை தகுதியற்றதால் அவரை அனுப்பிவிட்டு, அவர் மறைந்தபின் சிறியவர்களைப் பூஜை செய்யவேண்டுமென்ற நோக்கத்துடன், அவர் மறைவிற்கு அறிகுறியாக, அப உபஸ்ப்ருச்ய செய்ய வேண்டுமென்பது தாத்பர்யம்.

## சுலோகம் 89

ஆத்மாந்தராணி பசவ: பரதந்த்ரபாவாத்
ஸ்வாதந்த்ர்யத: பசுபதே! பதிரீச்வர த்வம் |
ஆத்மானம் ஔபநிஷதா: ப்ரவதந்த்யனீசம்
ஈசம் பவந்த முபயோ ருபயம் ஸ்வபாவ: ||

### பதவுரை.

ஆத்மாந்தராணி - பரமசிவனைத்தவிர மற்ற இதர ஆத்மாக்கள், பரதந்த்ரபாவாத் - பிறருக்கு அதீனமாக இருப்பதால் பசவ:— பசுக்களாவார்கள். ஈச்வர - ஹே பரமேச்வரா! பசுபதே - பசுக்களான ஸகல ஜீவர்களுக்கும் தலைவரே! த்வம் - நீர், ஸ்வாதந்த்ர்யத:— பராதீனமாக இல்லாததால், ஸ்வதந்த்ரமாக இருப்பதால், பதி: பசுபதி யாகிறீர். வாயவீயஸம்ஹிதை, ஆதித்யபுராணம், மகாபாரதம், லிங்கபுராணம் முதலியவைகளில் இவ்விஷயம் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது, ஔபநிஷதா: — உபநிஷத்தெரிந்தவர்கள், ஆத்மானம் - ஜீவனை, அனீசம் - ஸ்வாதந்த்ர்யம் அற்றவனென்றும், பவந்தம் - தங்களை, ஈசம் - ஸ்வதந்த்ரமாயிருப்பவரென்றும், ப்ரவதந்தி - சொல்லுகின்றனர்கள். உபயோ:— இருவர்களுக்கும், உபயம் - அவ்விரண்டும், ஸ்வபாவ:—இயற்கையாக அமைந்த குணமாகும். அதர்வசிரஸ் அதர்வ சிகை, ச்வேதாச்வதரம். வாயவீய ஸம்ஹிதை முதலிய க்ரந்தங்களில் ஜீவன் இயற்கையாகவே பரதந்த்ரன், பரமேச்வரன் - இயற்கையாகவே ஸ்வதந்த்ரன், பசுபதி என்ற விஷயம் தெளிவாக்கப்பட்டிருக்கிறது பசுபதி பாவம் வரம் பெற்றதால் ஏற்பட்டதாக சுருதியில் சொல்லப்படுவது, ஸ்துதிக்காக அர்த்தவாதமாகும், ஸ்வார்த்தம் தாத்பர்ய விஷயமாக விவக்ஷிதமாகாது.

ஸர்வலோக மஹேச்வரம் மாம் ஞாத்வா சாந்தி மிருச்சதி என்ற கீதாவாக்யத்தில், மாம் என்பது, கிருஷ்ணனுக்கும் உபதேசம் செய்த, வக்தாவாகிய பரமசிவனைக் குறிக்குமே

யல்லாது, அர்ஜுனனுக்கு உபதேசம் செய்த ப்ரவக்தாவாகிய கிருஷ்ணனைக் குறிக்காது, கிருஷ்ணனும் பசுபதி பரதந்த்ரன் ப்ரவக்தா மாம் பதார்த்தமானால், கீதை வாசிப்பவர்கள் பாடம் சொல்பவர்கள் கூட மாம் பதார்த்தமாகி அவர்களும் ஈச்வரர்களாகவும், உபாஸிக்கப்படவேண்டியவர்களாகவும் ஆகி விடுவார்களல்லவா ? கூர்ம புராணத்திலும், ச்வேதாச்வதர உபநிஷத்திலும், பாரதம் சாந்தி பர்வாவிலும் எல்லா வித்தைகளையும் பரமசிவன்தான் சொன்னார். நாராயணன் அர்ஜுனனுக்கு ப்ரவக்தா தான், வக்தா ஆகமாட்டான் என்பது கூறப்பட்டிருக்கிறது. உதயனாசார்யார் ந்யாயகுஸுமாஞ்ஜலி என்ற தன் புஸ்தகத்தில் அஸ்மத் சப்தத்துக்கு வக்தா தான் அர்த்தம் ப்ரவக்தா அர்த்தமாகா தென்பதைத் தர்க்க சாஸ்திர முறையில் ஸ்தாபித்திருக்கிறார்.

வ்ருஷ்ணீனாம் வாஸுதேவோஸ்மி - என்று கிருஷ்ணன் பாண்டவர்களுக்குள் அர்ஜுனன் போல விபூதி கோஷ்டியில் சேர்த்துக் கூறப்பட்டிருப்பதால், விபூதிமான் வாஸுதேவனாக இருக்க முடியாது, ஆனதுபற்றி கீதையில் சொல்லப்பட்ட விபூதி அவ்வளவும் மஹேச்வரனைச்சேர்ந்ததால் கீதையிலுள்ள மாம் சப்தார்த்தமாகப் பரமசிவனைத்தான் கொள்ளவேண்டும்.

ஸ்வதஸ் ஸித்தம் பதித்வம் மே யுஷ்மாகம் பசுதாபி ச என்ற புராண வசனமும், பசுபதயே நம : என்ற ச்ருதியாலும் ஈச்வரனுக்கு பசுபதித்வம் இயற்கை என்பது திண்ணம்.

## சுலோகம் 90

ஸம்ப்ராப்த ஏவ ஸதி சங்கர பாசுபத்யே
கஸ்மை வரேண்ய வரணம் க்ருபஞேசிதம் தே |
வித்யர்த்தமத்யயன் சோதனயாக்ருஹீதா
ஜல்ப்பந்தி யத்கிமபி வந்திவதர்த்தவாதா : ||

### பதவுரை

வரேண்ய - பிறருக்கு வரன்களை அளிப்பவரே ! சங்கர — ஸுகத்தைக் கொடுப்பவரே ! பாசுபத்யே - பசுக்களுக்குத் தலைவராயிருப்பது கஸ்மை - ஏதற்காக ? அத்யயன சோதனயாக்ருஹீதா — (ஸ்வாத்யாயோத்யேதவ்ய :) குல பரம்பராப்ராப்த சாகையை அர்த்தத்துடன் முழுவதும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற விதியால் உட்படுத்தப்பட்ட அர்த்தவாதா :—

அர்த்தவாத பாகங்கள். வித்யர்த்தம் - அந்த விதியில் ப்ரவ்ருத்தியை உபநீதர்களுக்கு உண்டு பண்ணுவதற்காக, வந்திவத் - அரசனை ஸ்துதிபாடகர்கள் துதிப்பதுபோல, யத்கிமபி – இருக்கும் குணங்களாலோ, இல்லாத குணங்களாலோ, ஜல்ப்பந்தி - ஸ்தோத்ரம் செய்கின்றன. ஆதலால் அர்த்த வாதங்களுக்கு ஸ்வார்த்த தாத்பர்யம் இல்லாததால். பசுபதித்வம் வரப்ராப்த என்பது உண்மையல்ல; இயற்கை என்பதுதான் உண்மை.

உத்தரமீமாம்ஸா சாஸ்திரப்படியும் விரோதமில்லாத அர்த்த வாதம்தான் பூதார்த்தவாதம், அந்த அர்த்தம்தான் க்ராஹ்யம், ஆதலால் இந்திராதி தேவர்களுக்கு சரீரம், ஆயுதம், வீர்யம் உண்டு என்று ஸித்தாந்தமானதால், பசுபதித்வம் வரமாக அடையப்பட்டதாகச் சொல்லும் அர்த்தவாதம் பசுபதயே நம; என்ற நித்ய ஸித்த, பசுபதித்வ, போதக, ப்ரத்யக்ஷ, சுருதிக்கு விருத்தமாதலால் பூதார்த்தவாத மாகாது, குணவாதமாகி - ஸ்துதியில்தான் தாத்பர்யமுள்ளதாகும்.

## சுலோகம் 91

நா நாபதானவசஞதபி வாரணீய:
த்வத்பாசுபத்ய வரண ப்ரதிலம்பவாத: |
லப்தும் வரீதுமதவா கதமேக ஏவ
வாரான் பஹுனபி மஹேச்வர! சக்ய
தேர்த்த: ||

### பதவுரை

த்வத் பாசுபத்ய வரணப்ரதிலம்பவாத: - தாங்கள் பசுபதியாக இருக்கவேண்டும் என்று வரம்கேட்டு, அதைப் பெற்றுக் கொண்டதாகச் சொல்லும் அர்த்தவாத வாக்யம், நானாபதான வசஞதபி - விஷ்ணு முதலிய மற்ற தேவதைகளால் செய்ய முடியாத த்ரிபுரஸம்ஹாரம், காமதகனம், விஷபக்ஷணம், காலஸம்ஹாரம், அந்தக, ஜலந்தராசுரஸம்ஹாரம், தக்ஷயக்ஞ பங்கம், பிரம்மாவை சிக்ஷித்தது, முதலிய பல அரிய வீரச் செயல்கள் புரிந்ததிலிருந்தும், வாரணீயம்: - பரிஹாரம் சொல்லப் படவேண்டும், ஸ்வார்த்த தாத்பர்யகமில்லை என்று தள்ளப் பட வேண்டும். அதவா - அப்படியில்லாவிடில் மஹேச்வர-ஸ்வதஸ்ஸித்த ஈச்வரத்வமுள்ளவரே! ஏக ஏவ அர்த்த: - ஒரே பசுபதித்வ விஷயமானது, பஹுன் வாரானபி - பலதடவை,

வரீதும் - வரமாகக் கேட்பதற்கும், அதவா லப்தும் - அப்படியே அடைவதற்கும், கதம் - எப்படி, சக்யதே - முடியும்? த்ரிபுரஸம்ஹாரத்திலும், பிரம்மா சிரஸ்ஸைக் கிள்ளின சரித்திரத்திலும், வேடவேஷம் பூண்ட சரிதத்திலும் பலதடவை பசுபதித்வ வரம் சொல்லப்பட்டிருப்பது எப்படிப் பொருந்தும்? ஸ்வதஸ்ஸித்தம் என்பதை பலவாருகத் துதிப்பதுதான் பொருத்தம்.

## சுலோகம் 92

அங்கைஸ் ஸ்திரேபிரிதி ரூபமனச்வரம் தே
பூரீணி தாநி ச புஜங்கமமால பாரிந் |
மந்த்ரேண சாந்தரிதி யுஷ்மதுபஸாகாஞும்
ஆர்க்வைதிகா யதசனம் ததமோக மாஹு: ||

### பதவுரை

புஜங்கமமால பாரிந் - பாம்புமாலைகளையணிந்த கடவுளே, ஸ்திரேபிரங்கைரிதி - ஸ்திரேபிரங்கை: என்ற சுருதியால், தே - உம்முடைய, அனச்வரம் ரூபம் - அழிவில்லாத உருவத்தையும் தாநிச பூரிணி இதி - அந்த உருவங்களும் ஏராளமானவை என்றும், ஆர்க்வைதிகா: ரிக்வேத மறிந்தவர்கள், ஆஹு: - சொல்லுகிருர்கள். தங்கமயமான அழிவில்லாத, அழுக்கற்ற நிர்மலமான அங்கங்களால் ஈச்வரன், பல உருவங்கள் உள்ளவராகவும், பல நிறமுள்ளவராகவும், பிறரால் அவமதிக்க முடியாதவராகவும் விளங்குகிருர். என்பதாக, ஸ்திரேபிரங்கை: என்ற ரிக்வேத மந்த்ரத்தின் பொருள். யதசனம் - பக்ஷ்ய, போஜ்ய லேஹ்ய, சோஷ்ய, என்று நான்கு விதமாக ப்ரஸித்தியடைந்த ஆஹாரம் யாதொன்று உண்டோ தத் - அதை, அந்த ரிதி மந்த்ரேண - அந்தரிச்சந்தி என்ற மந்த்ரத்தால் யுஷ்மதுபாஸகாஞும் - உம்மை உபாஸிக்கும் பக்தர்களுக்கு, அமோக மாஹு :- ஏரானமாக வேண்டியது கிடைக்குமென்று, ரிக்வேத மறிந்தவர்கள் சொல்லுகிருர்கள். புத்திபூர்வகமாக எவர்கள் ஹ்ருதயாகாசத்தில், எல்லாவற்றையும் விட சிறந்த பரம் பொருளாகிய, பரமசிவனை உபாஸிக்கிருர்களோ, அவர்கள்தாம் நாக்கால் நாலுவிதமான அன்னத்தை அருந்தி ஸுகமடைவார்கள் என்பது, அந்தரிச்சந்தி என்ற ரிக்வேத மந்த்ரத்தின் அர்த்தமாகிறது, ஹ்ருதயாந்தருபாஸனைக்குப் பிறகு, வெளியிலும் பரமசிவனை உபாஸிக்கவேண்டும். என்று சிவதர்ம ஸூக்த வசனம் இருக்கிறது, அதாவது

வரம் ப்ராண பரித்யாக :— உயிரை விடுவதும் நலம் ; அபிவா சிரஸ : சேதனம் வரம் - தலையறுபடுவதும் நலம், பகவந்தம் த்ரிலோசனம் - முக்கண்ணைக்கடவுளை, அநப்யர்ச்ய - பூஜை செய்யாமல், ந து புஞ்ஜீயாத் - ஒரு நாளும் சாப்பிடக்கூடாது, என்ற சிவதர்ம ஸூக்தி இந்த அந்தரிச்சந்தி என்ற மந்த்ரத்தின் மூலமாகவே ஏற்பட்டது, ஆதலால் ப்ரதிதினம் முக்கண்ண ஈச்வர பூஜை செய்த பிறகுதான் சாப்பிடவேண்டும்.

## சுலோகம் 93

பாவோபபந்ந மனஸாம் த்வதுபாஸகானாம்
பும்ஸாம் அமோக மசனம் பகவந் ப்ருவாண : |
மந்த்ரோயம் அந்தரிதி ந : ப்ரதி பாதிமூலம்
ப்ராக் புக்தம் அர்ச்சன விதே : அநுவாஸரம்
தே ||

## பதவுரை

பகவந் - ஹே பகவானே ! பாவோபபந்ந மனஸாம் - உள் அந்தரங்கத்துடன் கூடிய மனதையுடைய, த்வதுபாஸகானாம் - உம்மை உபாஸிக்கும், பும்ஸாம் - ஜனங்களுக்கு, அமோக மசனம் - வேண்டிய ஆகாரங்கள் ஏராளமாகக் கிடைக்குமென்று ப்ருவாண :— சொல்லுகின்ற அய:ம் அந்தரிதி மந்த்ர :— அந்தரிச்சந்தி என்ற ரிக்வேத மந்த்ரத்தின் பொருள் அநுவாஸரம் - தினந்தோறும், ப்ராக்புக்தம் - சாப்பிடுவதற்கு முன்பு தே - உம்முடைய, அர்ச்சனவிதே :— பூஜை செய்யப்பட வேண்டும் என்ற சிவதர்ம ஸூக்தி விதிக்கு, (வரம் ப்ராண பரித்யாக :) மூலம் - மூலபூத ச்ருதி என்று ந :— எங்களுக்கு ப்ரதி பாதி - தோன்றுகிறது. ஸ்ம்ருத்யதிகரண ந்யாயப்படி, சுருதியை மூலமாகக் கொண்ட ஸ்ம்ருதியல்லவா க்ராஹ்யம். ஆதலால் சிவதர்மஸூக்தி, அந்தரிச்சந்தி சுருதி மூலமான தால் க்ராஹ்யம் என்பது தாத்பர்யம்.

## சுலோகம் 94

நரத ! த்வயா பித்ருமதோ மருதஸ்துவாநா :
த்வாம் ஆமனந்தி பரதம் நடனுபியோகாத் |
வைசேஷிகே ஸதி கலு வ்யபதேசஹேதௌ
ஸாதாரணேன பரணேன ந கச்சிதர்த்த : ||

### பதவுரை

நாத - பரமேச்வரா ! த்வயா – உம்மால், பித்ருமத :— தந்தையுள்ளவர்களாக மருத :— தேவர்களை, ஸ்துவாநா :- துதிக்கிற ரிக் வேதிகள், நடனுபியோகாத் - நடனத்தில் கை தேர்ந்தவர்களானதால், த்வாம் - உம்மை, பரதம் - பரதன் என்று, ஆமனந்தி - சொல்லுகிறார்கள், யாகங்களில் ஒன்று கூடி சேர்ந்திருப்பவர்களும், யாகத்துக்காகப் புறப்பட்டுச் செல்லும் போது பலவர்ணமுள்ள ஆயுதங்களால் ப்ரகாசிப்பவர்களும் நகைகளில் ப்ரியமுள்ளவர்களும், பரதன் பிள்ளைகளுமாகிய (நடராஜராகிய உமது பிள்ளைகளாகிய) தேவர்கள் இந்த யாகத்துக்குவந்து. போத்ர சமஸம் என்ற பாத்ரத்தில் வைக்கப் பட்டுள்ள ஸோமரஸத்தை சூரர்களான, ப்ரகாசிக்கிற தேவர்கள் அனைவரும் பானம் செய்து, திருப்தியடைய வேண்டுமென்பது யக்ஞை : ஸம்மிச்லா : என்ற மந்த்ரத்தின் முக்யதாத்பர்யார்த்தமாகும். நர்த்தகனைச் சொல்லும் பரத பதம் நடராஜ மூர்த்தியான உம்மைத்தானே குறிக்கும்? அக்னே மஹாம் அஸி ப்ராஹ்மண பாரத - என்று அக்னியை. பரத பதத்தால் குறிக்கப்பட்டிருப்பதும் ஹவிர்பரணம் என்ற விசேஷமான கார்யத்தை அக்னி செய்வதால் தான். வைசேஷிகே - வ்யபதேச ஹேதௌ – விசேஷமான பெயரின் காரணமிருக்கும்போது, ஸாதாரணேன பரணேன - பொதுவான தாங்குதல் என்ற காரணத்தால், ந கச்சிதர்த்த : கலு - ஒரு பெயர் வந்திருப்பதாகச் சொல்வது சரியல்லவன்றோ.

## சுலோகம் 95

ஹிம்ஸா ப்ரதீதிரபிமான பதைகதேசாத்
சப்தாத பேரிதி பயேன ஸமுத்வபந்தி |
காமாந்தக த்ரிபுர தக்ஷமகாதிபங்க
விக்யாத விக்ரமதயா கதிதோஸி வீர: ||

### பதவுரை

அபிமானபதைகதேசாத் - அபிபமானபதத்தின் முன் பாகமாகிய, அபேரிதிசப்தாத் - அபி என்ற சப்தத்திலிருந்து, ஹிம்ஸா ப்ரதீதிரிதி பயேன - ஹிம்ஸா என்ற அர்த்தம் தோன்றும் என்கிற பயத்தினுல், அபிநோ வீரோ 'அர்வதி க்ஷமேத என்ற மந்த்ரத்தில் அபி சப்தத்தை, ஸமுத்வபந்தி -

எடுத்துவிட்டு அதற்கு பதிலாக, த்வம் நோ வீர : என்று, த்வம் ந: என்ற பதத்தை, அபி ந: என்ற பதத்துக்குப்பதிலாக சேர்த்து சொல்லும்படி, ஆவா போத்வாபத்தைக் கூறுகிறார்கள். ஆதே பித: என்ற மந்த்ரத்திலுள்ள வீர சப்தம் உமக்கே பொருந்தும் ஏனெனில், காமாந்தக - மன்மதன், யமன், த்ரிபுர தக்ஷ மகாதி- த்ரிபுர அஸுரர்கள், தக்ஷ யாகம் முதலியவைகளை, பங்க - அழித்ததால், விக்யாத விக்ரமதயா - ப்ரஸித்தமான பராக்ரமம் உடையவராதலால், த்வம் - நீர். வீர: கதிதோஸி - வீரன் என்று உண்மையாகச் சொல்லப்படுகிறீர்.

அந்தக ஜலந்தராதி ஸம்ஹாரமும் இங்கு வீர பத ப்ரவ்ருத்தி நிமித்தமாகக் கொள்ளப்படவேண்டும். ரகாரம் ஆரம்பிக்கும், ரத்னம், ரதம் என்ற பதங்களைக் கேட்டாலே. ராமர் பதம் ஞாபகம் வருவதால் பயமாக இருப்பதாக மாரீசன் ராவணனிடம் சொல்லுகிறான். அவ்விதம் அபி என்ற பதம் அபி மம்ஸ்த என்ற ஹிம்ஸா வாசக பதத்தின் ஆரம்ப ஏக தேசமானதால், ஹிம்ஸையை ஞாபகப்படுத்தும் என்று கருதி ஆபத்பாந்தவரான, வீரனை உம்மைத் துதிக்கும் மந்த்ரத்தில், அபி பதத்தை எடுத்துவிட்டு, அபி நோ வீர என்பதற்கு பதிலாக த்வம் நோ வீர என்றல்லவா உச்சரிக்கும்படி ப்ராம்மணம் கூறுகிறது.

## சுலோகம் 96

ஹிம்ஸாபிதாத்ரு பதஸந்நிதிஞ ஜ்வரார்த்தம்
ருத்ரேதி நாம பரிசங்க்ய பராவபந்த : |
மந்த்ரே யதான இதி மங்களவாசி த்ருஷ்டம்
தேவேச ! ருத்ரிய பதம் புனராவபந்தி ||

### பதவுரை

ஹிம்ஸா பிதாத்ரு பத ஸந்நிதிஞ-ஹிம்ஸையைக் குறிக்கும் அபி என்ற பதத்துக்குப் பக்கத்திலிருப்பதால், ருத்ரேதி நாம - ருத்ர என்ற பதத்தை. ஜ்வரார்த்தம் - ஜ்வரம் என்ற அர்த்தத்தை ஒரு ஸமயம் கொடுத்து விடலாமென்று. பரிசங்க்ய ஸந்தேஹித்து, பராவபந்த:- அப்பதத்தை நீக்கி வேறு பதம் சொல்லச் செய்கிறவர்களாய், தேவேச - தேவதைகளுக்குத் தலைவரே! யதான இதி மந்த்ரே - யதா நோ அதிதி: கரத் என்ற மந்த்ரத்தில் மங்கள வாசித்ருஷ்டம் - மங்களம் என்ற அர்த்தத்தைச் சொல்வதாக அநுபவிக்கப்பட்ட, ருத்ரிய பதம் ருத்ரிய என்ற

பதத்தை, புன,-ருத்ரபதத்துக்குப் பதிலாக ஆவபந்தி-அதை எடுத்து விட்டு, ருத்ரிய பதத்தைப்போட்டு ஷை மந்த்ரத்தை உச்சரிக்க வேண்டுமென்று ப்ராம்மணம் கூறுகிறது.

தேவர்களுக்குத் தந்தையான பரமசிவனே! உமக்கு ஸுக முண்டாக வேண்டும். எங்களுடைய சூரியன் உபாஸனையை நீக்க வேண்டாம். தாங்கள் எங்கள் குற்றத்தைப் பொறுத்து, எங்கள் குதிரை முதலிய இஷ்டமான வஸ்துக்களை அழிக்காமல் காக்க வேண்டும் என்பது ஆதே பத: என்ற மந்த்ரத்தின் அர்த்தமாகும். உங்கள் உத்தரவால் நாங்கள் புத்ர பௌத்ர, ப்ரபௌத்ர பரம்பரையாக ஸந்ததி வளர்ச்சியுடன் ப்ரகாசிக்க வேண்டும் என்றும் வேண்டப்படுகிறது. ருத்ர சப்தத்துக்கு பதில் ருத்ரிய என்ற மங்கள வாசக பதத்தையும் அபி நோ வீர என்பதற்கு பதிலாக, த்வம் நோ வீர என்ற பதங்களையும் போட்டு, ஆதே பித: மந்த்ரத்தை உச்சரிக்கும்படி ப்ராம்மணம் கூறுகிறது.

## சுலோகம் 97

சாகாஸு சங்கர! ஸஹஸ்ரதயீஷு ஸாம்நாம்
ஆம்னயதே தவ ந கேவல மானுபாவ: |
ஸர்வாத்மனும் அதிபதே: அவிசேஷிதஸ்தே
தேவ வ்ரதாதிஷு கணு: கதிதானுபாவா: ||

### பதவுரை

சங்கர —ஸுகத்தைத் தருபவரே! ஸஹஸ்ரதயீஷு - ஆயிரம் பிரிவுள்ள. ஸாம்னும் சாகாஸு - ஸாம வேதத்தின் சாகைகளில், தவ கேவலமானுபாவ: நாம்னயதே - உம்முடைய மகிமை மட்டும் சொல்லப்படவில்லை. அவி சேஷித: ஸர்வாத்மனும் அதிபதே:—குறிப்பிட்டு சிலரைச் சொல்லாததால், ஸகல சராசரங்களுக்கும், தலைவரான, தே - உம்முடைய, கணு:— ப்ரமத கணங்களும், தேவ வ்ரதாதிஷு - தேவ வ்ரதம் முதலிய ஸந்தர்ப்பங்களில், கதி தானுபாவா:-விவரிக்கப்பட்ட மகிமையை உடையவர்களாக இருக்கிறார்கள். ஸாமவேதத்தில் உம்முடைய வும், உமது கணங்களுடையவும் மகிமைகள் சொல்லப்பட்டிருக் கின்றன. நீங்கள் ஸர்வாதிபதியாகக் கூறப்பட்டிருக்கிறீர் என் பது கருத்து. மகாபாரதத்திலும், லிங்க புராணத்திலும் ருத்ர கணங்களின் மகிமை விவரிக்கப்பட்டிருக்கிறது. நந்தி கேசர்

ப்ரமதகணத் தலைவர். அவர் உத்பத்தி, விவாகம் சரிதம் முதலியவை புராணங்களில் நன்கு கூறப்பட்டிருக்கின்றன. ஸாம விதான ப்ராம்மணத்தில், ஈச குமாரர்களான விநாயகர், ஸுப்ரமண்யர் மகிமை சொல்லப்பட்டிருக்கிறது.

## சுலோகம் 98

ஸ்கந்தம் விநாயக முபாவபி தே குமாரௌ
ஸர்வைர்குணை: பிதரமேவ நிதர்சயந்தௌ |
ஸாமோபகாய முபகாயம் ருசாம் கணேஷு
ஸம்ப்ரீணயந்தி சிவ! ஸாமவிதௌ யதோக்தம் ||

### பதவுரை

சிவ—பரமேச்வரா! ஸர்வை: குணை:—எல்லா குணங்களாலும், பிதரமேவ-தந்தையாகிய உம்மையே, நிதர்சயந்தௌ அனுஸரித்து விளங்குகிற, ஸ்கந்தம்-ஸுப்ரமண்யர், விநாயகர்-விநாயகர் இதி - என்ற, உபாவபி குமாரௌ - உம்முடைய இரண்டு பிள்ளைகளையும். ஸாமோபகாயம் - ஸாமாவை கானம் செய்து. ஸாமோபகாயம் — திரும்பத்திரும்ப கானம் செய்து ருசாம் கணேஷு – ரிக்கின் கூட்டங்களில், ஸாமவிதௌ யதோக்தம் - ஸாம விதான ப்ராம்மணத்தில் சொல்லியபடி ஸம்ப்ரீணயந்தி - ஸந்தோஷப்படுத்துகிறார்கள்.

உம்மையும் உமது கணங்களையும் ஸந்தோஷப்படுத்துவது போல், உமது குணங்களையும் மகிமைகளையும் பரிபூர்ணமாக கொண்ட புத்ரர்களான ஸ்கந்த, விநாயகர்களை ஸாமவேதிகள் ரிக்குடன் ஸாமாவைச் சேர்த்து, கானம் செய்து ஸந்தோஷப்படுத்துகிறார்கள்- அந்த முறை ஸாமவிதான ப்ராம்மணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது லிங்க புராணம். ராமாயணம், பாரதம் முதலியவைகளில் விநாயகர் உற்பத்தி, ஸ்கந்த உற்பத்தி கூறப்பட்டிருப்பது தெளிவு. பரமசிவன் கூட விக்னநிவாரணத்துக்கு விநாயகரை உபாஸித்து ஸகல கார்யங்களையும் செய்யவேண்டுமென்ற விதியை அனுஸரித்து, த்ரிபுர ஸம்ஹாரத்துக்குப் புறப்படுமுன், விநாயக பூஜை செய்ததாகப் புராணம் கூறுகிறது.

## சுலோகம் 99

ப்ரம்மாதிகம் ஸகலமந்யதபோஹ்ய பும்ஸாம்
த்யாதவ்ய மேக மபிதாய சிவம் கரம் த்வாம் |
வக்தவ்ய மந்யதனபேக்ஷ்ய விமோக்ஷஹேதும்
ஆதர்வண: பரிஸமாப்திமுவாச வேத: ||

ஆதர்வண: வேத:—அதர்வ வேதமானது, அந்யத் - மற்ற ப்ரம்மாதிகம் - பிரம்மா முதலிய ஸகலம் - எல்லா தேவ கணங்களையும், அபோஹ்ய - விட்டு விட்டு, பும்ஸாம் - ஜனங்களுக்கு - த்யாதவ்யம் - த்யானிக்கப்பட வேண்டியவராகவும், சிவம் கரம் - மங்களத்தைக் கொடுப்பவராகவும், த்வாம் – உம்மை, ஏகம் - ஒருவரையே, வக்தவ்யமந்யத் - சொல்லவேண்டிய மற்றெல்லாவற்றையும், அனபேக்ஷ்ய - ஸகாயமாக எதிர்பாராமலேயே, விமோக்ஷ ஹேதும் - மோக்ஷத்திற்குக் காரணமாகச்சொல்லி விட்டு பரிஸமாப்திம் உவாச - இத்துடன் முடிவு என்றும் சொல்லி யிருக்கிறது. (ஸமாப்தா அதர்வ சிகா - என்று முடிவு.)

ஈச்வர த்யானம் ஒன்றே முக்திக்குக் காரணம் வேறு த்யானம் சொல்லவேண்டிய அவசியமில்லையென்று முடிவடைந்துவிட்டது அதர்வவேதம். ஸ்காந்தம், காளிகாகண்டம் மற்ற புராணங்களிலும். அதர்வசிகை உபநிஷத்தின் அர்த்தம் நன்கு விளக்கப்பட்டுள்ளது.

## சுலோகம் 100.

யாமாமநந்தி தவ சங்கர ! தர்மதாராந்
அத்வர்யவஸ் ஸஹஜ ஸித்ததயா ஸ்வஸாரம் |
ஆதர்வணு யதுபஸ்ருஷ்டதயா பவந்தம்
த்யாதவ்ய மாஹுரபஹாய பிதாமஹாதீந் ||

### பதவுரை

சங்கர - ஸுகத்தைக் கொடுக்கும் கடவுளே ! தவ - உம்முடைய, தர்மதரரான் - தர்மபத்தினியான பார்வதியை அத்வர்யவ :- யஜுர்வேதிகள், ஸஹஜஸித்ததயா - இயற்கையாக அமைந்திருப்பதால், யாம் ஸ்வஸாரம் - ஸ்வஸா என்ற பதத்தால் கூறுகின்றனரோ. : (இயற்கையாக அமைந்திருப்பதால், விட்டுப்பிரியாமல் இருப்பதால், அக்கினியும் சூடு சக்திபோல,) பார்வதிதேவி, ஸ்வஸா என்று - தங்கை என்ற அர்த்தம் கொடுக்கும் பதத்தால், யஜுர் வேதத்தில் கூறப்படுகிருள். - ஸஹஸ்வஸ்ரா அம்பிகயா - என்பது யஜுர்வேதம ப்ரதி பூருஷம் ஏககபாலம் என்ற அநுவாகத்தில் ' ஹேருத்ரா ! ஆகு என்ற வாரகம், உமக்கு ஹவிர்பாகமான பசுவாகும்; அதைப் பெற்றுக்கொள்ள வேண்டும். இது ருத்ர பாகம். தங்கையான,

ஸ்வதஸ்ஸித்த சக்தியான, விட்டுப்பிரியாத பார்வதி தேவியுடன் இந்த வராஹம் என்ற பசுபாகத்தைப் பெற்றுக்கொண்டு திருப்தியடைய வேண்டும்.'' என்பது யஜுர்வேத மந்திரத்தின் கருத்து.

ஆதர்வணு:— அதர்வ வேதிகள், யதுபஸ்ருஷ்டதயா. அந்தப் பார்வதியுடன் கூடியிருப்பதால். பிதாமகாதீனபஹாய - பிரம்மா முதலியவர்களை விட்டுவிட்டு, பவந்தம் - தங்களையே, த்யாதவ்யம் - முக்திக்காக த்யானம் செய்யவேண்டுமென்று, ஆஹு:- சொல்லுகிறார்கள். தேவா யத்யக்ஞம் தந்வாணு: என்று வேதத்தில் கூறப்பட்டிருப்பது இந்த ரகஸ்யம்.

வராக அவதாரம் பூண்ட புருஷனை யாகம் செய்ய யத்னித்த தேவர்கள் பசுவாக யூபத்தில் கட்டிப்ரோக்ஷித்தார்கள். அந்தப் பசுவால் ஸர்வேச்வரனை ஸாத்யர்களும் முனிவர்களும் ஆராதித்தார்கள். என்று கூறப்பட்டிருப்பது வேத ரகஸ்யம். ஆதலால் அத்வரராஜன் சிவன் என்பது ஸித்தம்.

அபித்வா சூரணோ நும: என்ற ஸாமகானுதாரமான ரிக், சராசரமான இந்த உலகத்துக்கு ஈசன் ஈசன சக்தியுடன் கூடியிருப்பதால் அந்வர்த்தமாகச் சொல்லப்படுகிறான், என்று நன்கு கூறுகிறது. சக்தியில்லாமல் அணுவும் அசையாதன்றோ, ஆதலால், ஈசானசக்தியான உமாதேவியால், சங்கரன் மஹேசன் ஆகிறான் என்பது அபித்வா ரிக்கின் உட்கருத்தாகும்.

## சுலோகம் 101

ஏக: ச்ருதோஸி பரமேச்வர! ஸத்விதீயம்
மந்த்ரா யயா வ்யபதிசந்தி புன: புனஸ்த்வாம் |
தஸ்யா: ப்ரபாவம் அதிவாங் மனஸம் சிவாயா:
கார்த்ஸ்ன்யேன வக்து மனலம் கமலாஸனோபி ||

### பதவுரை

பரமேச்வர - பரமேச்வரனே! ஏக: ச்ருதோஸி — நீர் ஒருவர் ஒப்பற்றவர் (அத்விதீய ப்ரம்மம்) என்பதாக சுருதியால் போற்றப்படுகிறீர்

ஏக ஏவ ருத்ரோ. ந த்விதீயாய தஸ்தே
ய ஏகோ ருத்ர உச்யதே—

என்றெல்லாம் சுருதிகள் உத்கோஷிக்கின்றன. யயா யுக்தம் - எந்தப் பார்வதியோடு கூடியிருப்பதால். த்வாம் – உம்மை, மந்த்ரா : - மற்ற மந்த்ரங்கள். புன : புன : - அடிக்கடி ஸத்விதீயம் வதந்தி - ஸஹ ஸ்வஸ்ராம்பிகயா அம்பிகாபதயே - உமாபதயே என்றபடி, இரண்டாவதாகிய சக்தியுடன் கூடிய வராகச் சொல்லுகின்றனவோ, தஸ்யா : - அப்பேர்ப்பட்ட, சிவாயா:- பராசக்தியின். அதிவாங்மனஸம் ப்ரபாவம் - வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத மகிமையை. கமலாஸனோபி - வேதங்களை உபதேசித்த ப்ரம்மாவும், கார்த்ஸ்ன்யேன - பூராவும், வக்துமனலம்– சொல்லச் சக்தியற்றவர், நிச்சயம்.

வாயவீய ஸம்ஹிதையில் தேவியின் மகிமை நன்கு விளக்கப்பட்டிருப்பது இங்கு கவனிக்க வேண்டும். கூர்ம புராணத்தில், பார்வதி தன் தந்தை மலையரசனை ஹிமவானுக்கு. தன் விபூதியை விசுவரூபமாகக் காட்டியதாகவும், பிறகு பயமடைந்த தந்தைக்குத் தன் பழைய குழந்தை உருவத்தைக் காண்பித்து அனுக்ரஹித்ததாகவும், வரலாறு கூறப்பட்டு உமாதேவி மகிமை விளக்கப்பட்டிருக்கிறது.

### சுலோகம் 102

ஏகம் முகம் த்ரிதய மீச்வர ! லோசனம் ச
சத்வாரி தோம்ஷி விசதம் வபுரத்புதம் தே |
நித்யம் ததேவ பஜதாம் உபகார ஹேதோ:
நானா பவந்தி தநவஸ்தவ திவ்யரூபா : ||

### பதவுரை

ஈச்வர ! ஏகம் முகம்- உம் உருவத்துக்கு முகம் ஒன்று லோசனம் ச திரிதயம் - கண்கள் மூன்று, தே-உமக்கு. தோம்ஷி - கைகள், சத்வாரி, நான்கு; விசதம் வபு :- நிர்மலமான சரீரம் ; அத்புதம் - ஆச்சர்யத்தை உண்டுபண்ணுகிறது தவ - உம்முடைய நித்யம் - நித்யமான, அழியாத, சாச்வதமான, தத் ஏவ - அந்த உருவத்தையே, பஜதாம் - உபாஸிக்கிறவர்களுக்கு, உபகாரஹேதோ : - உபகாரமாக, திவ்யரூபா : — ஜரா, மரணமற்ற திவ்யரூபங்கள். நானா தனவா .- பல சரீரங்கள், தவ - உமக்கு, பவந்தி - ஏற்படுகின்றன.

ஸ்திரேபிரங்கை : புருரூப உக்ர : என்று ஒரே சாச்வதமான உருவமுள்ள குணமூர்த்தி உபாஸகர்களின் ருசிப்படி பல உருவங்கள் கொண்டவராக ஆகிறார், தோன்றுகிறார் என்பது கருத்து.

## சுலோகம் 103

கைராத மீச்வர! பிநாகதரம் வபுஸ்தே
க்ருத்திம் வஸான முமயா ஸஹ தர்மதாரை: |
ஆராதயந்தி கலு பர்வணி ஸாகமேதே
புண்யை ஸ்த்ர்யம்பக ஹவிர்பிரனன்ய பாவா: ||

### பதவுரை

ஈச்வர! பிநாகதரம் - பிநாகவில்லை தரித்ததும், க்ருத்திம் - யானைத்தோலை, வஸானம் - அணிந்ததுமான, கைராதம் வபு: வேட சரீரத்தை, தே - உம்முடைய, தர்மதாரை: தர்மபத்னியான உமயா ஸஹ - உமாதேவியோடுகூட, ஸாகமேதே - சாதுர்மாஸ்ய யக்ஞத்தின் மூன்றாவது பர்வாவாகிய, த்ரிதின ஸாத்யமான ஸாகமேதக்ரதுவில், (பார்வதியுடன் பரமேச்வரன் ப்ரகாசிக்கும் யாகமாதலால் அந்த யாகம் ஸாகமேதம் என்று அன்வர்த்தமாகக் கூறப்படுகிறது.) பர்வணி - பர்வகாலத்தில், அனன்யபாவா:- வேறு தெய்வத்தில் மனது வைக்காமல், ஏகாக்ரமனதுடன், புண்யை: - புண்யத்தையளிக்கும் பரிசுத்த, த்ரயம்பக ஹவிர்பி: - த்ரயம்பகம் என்ற ஹவிஸ்ஸால், த்ரயம்பகம் யஜாமஹே என்ற மந்த்ரத்தால், ஆராதயந்தி கலு - ஆராதிக்கிறார்கள் அல்லவா.

இந்த விஷயம் கல்ப ஸூத்ரங்களில் தெளிவாகக் கூறப்பட்டிருப்பது காண்க.

## சுலோகம் 104

மீட்வாஸமந்த விநிவேசித மீடுஷீகம்
அந்தர்ஜயந்தம் அஜராமரவிக்ரஹம் த்வாம் |
த்வத்வாரபம் தயிதயா ஸஹ தேவஸேனம்
க்ஷேத்ரஸ்ய நாதமபி நாத! யஜந்தி தன்யா: ||

### பதவுரை

நாத - தலைவரே! ஈசானபலி என்ற கர்மாவில், மீட்வாம்ஸம் - இஷ்டங்களை வர்ஷிக்கிற, உலகத்தை ஸ்ருஷ்டிப்பதற்காக வீர்யஸேகஞ் செய்த, ஜகத்காரண வஸ்துவான, அந்த விநிவேசித மீடுஷீகம் - மீடுஷீ என்ற தேவியைப் பக்கத்தில் வைத்து, அந்தர் ஜயந்தம் - நடுவில் ஜயந்தன் என்ற ஸ்கந்தனை

வைத்து. அஜராமரவிக்ரஹம் த்வாம் - கிழத்தனம், மரணம் இல்லாத உருவம் கொண்ட உம்மையும் தயிதயாஸஹ தேவ ஸேனம் - த்வாரபியுடன் கூடிய ஸேனையுடன் கூடிய, த்வத் த்வாரபம் - உமது த்வாரபாலகனையும், க்ஷேத்ரஸ்ய நாதமபி— க்ஷேத்தரபாலகனையும், தன்யா :— பாக்யம் பெற்றவர்கள் யஜந்தி - ஹவிர் பாகம் கொடுத்து ஆராதிக்கிறார்கள்.

## சுலோகம் 105

பத்னியா ஸமம் ஸஹ கணை: ஸஹ வா
ஸூதாப்யாம்
ஸார்த்தம் ததா பரிஷ தா விஷமேக்ஷண ! த்வாம் |
அத்யஷ்டமீ திதி நிசாமுக மர்ச்சயந்த :
பாபம் தரந்த்யபி ஜயந்தி மஹேச ! ம்ருத்யும் ||

### பதவுரை

பத்னியா ஸமம் - பார்வதியோடுகூட, கணஸ்ஸஹ - ப்ரமதகணங்களோடுகூட, ஸூதாப்யாம் வா ஸஹ - ஸ்கந்த விநாயகர்களுடன் கூட, ததா - அவ்விதமே, பரிஷதாஸஹ - ஸபையோர்களோடுகூட, விஷமேக்ஷண - முக்கண் கடவுளே, த்வாம் - உம்மை, அத்யஷ்டமீதிதி நிசாமுகம் - அஷ்டமீதிதியின் ப்ரதோஷகாலத்தில், த்ரயம்பகம் யஜாமஹே என்ற மந்த்ரத்தால், அர்ச்சயந்த:- பூஜை செய்கிறவர்கள், பாபம்-பாபங்களை, தரந்தி- அழித்துத் தாண்டிச் செல்லுகிறார்கள். அபி - இன்னும், மஹேச - பரமசிவனே ! ம்ருத்யும் ஜயந்தி - மரணத்தை ஜெயித்து, முக்தியையும் அடைகிறார்கள். இது போதாயனர், கல்ப்பகாரர் சொல்லிய பூஜாவிசேஷமாகும்.

## சுலோகம் 106

மந்த்ரா பவந்தி விரளா விபுதாந்தராணும்
ஸத்பாவஏவ சிவ தர்சித சக்தயஸ்தே |
த்வந் நாமரூப குணவர்ணன லப்தவர்ணு
மந்த்ரா ந சக்ய மவகந்துமியத்தயா தே ||

### பதவுரை

விபுதாந்தராணும் - மற்ற தேவர்களுக்கு, மந்த்ரா : - மந்த்ரங்கள், விரளா : பவந்தி - ஸ்வல்ப்பமாக இருக்கின்றன, சிவ -

சிவனே, தே - அந்த மந்த்ரங்கள் ஸத்பாவ ஏவ—மற்ற தேவர்களின் ஸத் பாவத்தை மாத்ரம், தர்சித சக்தய : - காண்பிக்கப்பட்ட ஸாமர்த்தியத்தை உடையவைகள். த்வந்நாம ரூப குண - உம்முடைய பெயர், உருவம், குணங்கள் இவைகளை வர்ணன - விவரித்துச் சொல்வதில், லப்தவர்ணு :- ஸாமர்த்யம் வாய்ந்த, தே - உம்முடைய, மந்த்ரா : - மந்த்ரங்களோ, இயத்தயா - இவ்வளவு என்று கணக்கிட்டு, அவகந்தும் ந சக்யம - அறிய முடியாதவைகளாக இருக்கின்றன.

## சுலோகம் 107

ருத்ரானுவாக படிதாநி பரஸ்ஸஹஸ்ரம்
நாமானி திவ்யமபி ரூபமனேகசஸ்தே ।
சக்யம் குணு கணயிதும் கணு யதிஸ்யாத்
பௌமேஷு பாம்ஸுஷு விநா தவ தேவ
மாயாம் ।

### பதவுரை

தே - உம்முடைய, நாமாநி - பெயர்கள், ருத்ராநுவாகபடிதாநி - சதருத்ரீயம் என்ற அநுவாகங்களில் சொல்லப்பட்டிருப்பவை, பரஸ்ஸஹஸ்ரம் - ஆயிரத்துக்கு மேற்பட்டவையாகும். தே - உம்முடைய திவ்ய மபி ரூபம் - மனோஹரமான உருவமும், அனேகச:—ஏராளமானவை. பௌமேஷு - பூமியிலுள்ள, பாம்ஸுஷு - தூளிகளை தேவ - கடவுளே! தவ மாயாம் விநா - உமது தேவ மாயையைத் தவிர மற்றவர்களால், கணுயதிஸ்யாத் - எண்ண முடியுமானால், தே - உம்முடைய குணு:—குணங்களும், கணயிதும் சக்யா:—எண்ண முடியும்

புழுதிகளை எண்ண முடியாதது போல குணங்களைடம் எண்ண முடியாது

யாவந்த : பாம்ஸவோ பூமே : ஸங்க்யாதா தேவ மாயயா — என்ற சுருதியை அனுஸரித்து தேவ மாயை ஒன்றினுல் தான் புழுதிகளை எண்ண முடியும். மற்றதால் முடியாது என்பது விளங்குகிறது.

இவ்விதம் வேத மந்த்ரங்களனைத்தும் பரமேச்வரனை வெளிப்படுத்துவதிலேயே நோக்கமுள்ளவை என்று விளக்கிக் காட்டியுள்ளார்.

## சுலோகம் 108

வேதஸ் ஸ்வயம் பவது வா தவ வா ப்ரணீதி:
ஸர்வப்ரமாண மவிஹாய க்ருணுதி லோக: |
தத் தத் ப்ரவக்த்ரு குணா தர்சித தாரதம்யம்
அந்யத் ப்ரமாணம் அவிரோதினி வேதவாக்யே ||

வேதத்தின் ப்ராமாண்யத்தை ஜைமினி, வ்யாஸ முனிவர்களால் கூறப்பட்ட பிரகாரம் விஸ்தரிக்க ஆரம்பிக்கிருர்.

### பதவுரை

வேத:—வேதமானது, ஸ்வயம் பவது - பிறரால், ஈச்வரனுல் கூட இயற்றப்படாமல். சாச்வதமாக, ப்ரளய காலத்திலும் அழியாப் புத்தகமாக மீமாம்ஸக மதப்படி. ஜைமினி விளக்கப்படி இருக்கட்டும், நையாயி க வைசேஷிக முனிவர் மதப்படி, தவ ப்ரணீதி: வா - உம்மால் அருளப்பட்ட கிரந்தமாகவாவது பவது - இருக்கட்டும், ஸர்வலோக:—எல்லா ஜனங்களும் ப்ரமாண மவிஹாய - வேதமென்ற ப்ரமாணத்தை யனுஸரித்துத் தான், க்ருணுதி - துதிக்கிருர்கள். வேத வாக்யே அவிரோதினி ஸதி - வேத வாக்யம் சொல்லும் விஷயத்தோடு, முரண்பாடு இல்லாமல் இருந்தால், தத் தத் ப்ரவக்த்ரு - அந்த அந்த இயற்றிய கர்த்தாவுடைய, குணா - குணங்களால், தர்சித - காண்பிக்கப்பட்ட, தாரதம்யம் - உயர்வு, நடு, தாழ்வு என்ற வித்யாஸமுள்ளதாக அன்யத் - சுருதி மூலகமான மற்ற ஸ்ம்ருதி வாக்யமும், ப்ரமாணம் பவதி - ப்ரமாணமாகக் கருதப்படுகிறது.

மனு,யாக்ஞவல்க்யர், பராசரர், ஆபஸ்தம்பர், போதாயனர் ஆச்வலாயனர், காத்யாயனர் முதலிய முனிவர்கள் செய்த க்ரந்தங்கள், ஸம்ருதியானதால், வேதார்த்தத்தைக் கூறுவதால், வேதம் அவைகளுக்கு மூலமானதால், வேதத்துக்கு அடுத்தபடியாக ஸ்ம்ருதிகள் ப்ரமாணம், வேதத்துக்கு முரண்பாடான முனிவர் வசனம் ப்ரமாணமாகாது. இவை ஜைமினியால் நன்கு தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

## சுலோகம் 109

வேதா: ப்ரமாண மிதி ஸங்கிரமாண ஏவ
திவ்யம் தவாகம மவைதி ஜன: ப்ரமாணம் |
த்வத் த்யான வாக்ய விஷயௌபயிகை:
பதார்த்தை:
ஆமூர்த்த மாகலித விக்ரமாச மூலாத் ||

வேதா:—வேதங்கள். ப்ரமாணம், ஸ்வத: ப்ரமாணமாகின்றன, இதி - என்று, ஸங்கிரமாண ஏவ - ப்ரதிக்ஞை செய்கிற போதே, த்வத் - உம்முடைய, த்யான - த்யானத்தை விதிக்கும் வாக்ய - வாக்யத்துக்கு, விஷய - விஷயமாக விருப்பதை ஓள பயிகை:— அடைகின்றதுதான, பதார்த்தை:—பதி, பசு, பாசம், ஞானம், யோகம், க்ரியை, சரியை என்ற ஏழு பதார்த்தங்களால், ஆமூர்த்தம் - தலை முதல், ஆசமுலம் - அடிவரையில், ஆகலித விக்ரஹம் - அமைந்த சரீரத்தையுடைய, திவ்யம் தவ-திவ்யமான உம்முடைய, ஆகமம் - சிவாகம க்ரந்தங்களை, ஜனா :- ஜனங்கள், ப்ரமாணம் அவைதி - ப்ரமாணமாக அங்கீகரிக்கிறார்கள்.

த்ரி பதார்த்தம் சதுஷ்பாதம் மஹாதந்த்ரமிதி ஸ்திதி:— சைவாகமம் என்ற மஹாதந்த்ரத்தில் பதியான பரமசிவனும், ப்ரம்மாதி ஸ்தம்ப பர்யந்தமான பசுக்களும், ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களும், மூன்று பதார்த்தங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஸம்ஸாரத்தைத் தாண்டுவதற்கு, சரியை, க்ரியை, யோகம், ஞானம் என்ற நாலு மார்க்கங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

ச்வேதாச்வதர உபநிஷத், ஸனத்குமார ஸம்ஹிதை, விஷ்ணு புராணம் 6 வது அம்சம், ஐந்தாவது அத்யாயத்தின் இறுதி பாகம், மகாபாரதம் ஆனுசாஸனிக பர்வம் முதலிய பல க்ரந்தங்களில், பரமசிவன் ஞானத்தைத் தவிர மற்ற ஞானம் ஞானமாகாது. ஸம்ஸார தாரகமாகாது; சிவனை யறிந்தவனுக்கு வேறு த்யானம் ருசிக்காது, என்று சொல்லப்பட்டிருக்கிறது.

நம : சங்கராய ச நம : சிவாய ச
நம : சிவதராய ச நம : ப்ரதரணய
சோத்தரணய ச

என்பது சதருத்ரீய மந்த்ரம். பரமசிவன்தான் ஸம்ஸாரக் கடலைத் தாண்டச் செய்பவர் என்பது தெளிவு. வேத துல்யமாக சிவாகமம் ப்ரமாணமாகக் கருதப்படுகிறது. எனெனில் வேதம் பூராவும் பரமசிவனை ப்ரதிபாதிப்பதுபோல், சிவாகமங்களும் ஆரம்பம் முதல். முடிவுவரை பரமேச்வரனையே ப்ரதிபாதிக்கின்றன.

## சுலோகம் 110

த்யானம் யதா பவதி தத்விஷயோ யதா த்வம்
யாத்ருக்குண : ச பகவந் அதிகாரிவர்க : |
ஸர்வாணி தாநி பவதாகம ஸம்ஹிதாபி :
கல்ப்பைரிவாத்வரவிதே : உபபாதிதாநி ||

## பதவுரை

த்யானம் - மனதை ஒரே விஷயத்தில் ஏகாக்ரமாக செலுத்துவது. யதா பவதி - எப்படிச் செய்யவேண்டுமோ. அதுவும் தத் விஷய: த்வம் - அந்த த்யானத்துக்கும் விஷயமானது, த்யானம் செய்யப்பட்ட வேண்டிய நீர். யதா - எந்த எந்த குணங்களோடு கூடியிருக்கிறீர் என்பதும், அதிகாரி வர்க்க : - த்யானம் செய்ய யோக்யதையுள்ள ஜனங்கள் யாத்ருக்குண : ச - எவ்விதமான குணங்களோடு கூடியிருக்க வேண்டுமென்பதும், பகவந் - பகவானே, தாநி ஸர்வாணி - அவையெல்லாம், பவத் ஆகம ஸம்ஹிதாபி : - உமது ஆகமம் என்கிற. சிவாகமம் என்ற ஸம்ஹிதைகளால் (வேத துல்யமானதால் வேதவாசகமான ஸம்ஹிதாபதம், ஆகமத்துக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது) அத்வரவிதே : - யாகம் செய்ய வேண்டிய விதியின், தந்த்ராணி—முறைகள் கல்பைரிவ - கல்பஸூத்ர க்ரந்தங்களில் போல, உபபாதி தாநி - ரிஷி, சந்த்ஸ் தேவதா, விந்யோகம், ப்ராம்மணம் இவ்வைந்துகள் உள்பட நிருபிக்கப்பட்டிருக்கின்றன.

## சுலோகம் 111

அத்வானம் அத்வபதிம் அத்வநி தாரதம்யம்
ச்ரேஷ்டாத்வ பாரகமனம் ச பலம் ப்ரவீதி |
மந்த்ரோத்வனுமிதி மஹேச்வர ! க்ருஹ்ய
காரः
பித்ரா குமார முபநீய வதன்ஹி வாக்யம் ||

## பதவுரை

மஹேச்வர - பரமசிவனே ! க்ருஹ்யகார : - ஆபஸ்தம்பாதி க்ருஹ்ய ஸூத்ரம் எழுதிய முனிவர், பித்ரா - தகப்பனைக் கொண்டு, குமாரம் - பையனுக்கு, உபநீய - உபநயனம் என்ற ஸம்ஸ்காரத்தைச் செய்துவைத்து, வாக்யம் - வாக்யரூபமாக, உள்ள, யந் - எந்த மந்த்ரத்தை. ஆஹ - சொல்லச் சொல்லுகிறுரோ, ஸ : - அந்த, அத்வனுமிதி மந்த்ர : - அத்வ நாம் அத்வபதே ச்ரேஷ்டஸ்யாத்வந : பாரமசீய - என்ற மந்த்ரமானது அத்வானம் - வர்ணம் பதம், தந்த்ரம். கலா, தத்வம், புவனம் என்ற ஆறு வழிகளேயும் அத்வபதிம் - டி ஆறு அத்வாக்களின் தலைவனேயும், அத்வநி தாரதம்யம் - டி ஆறு அத்வாக்களில்

ஒன்றுக்கொன்று உள்ள பரஸ்பர வித்யாஸத்தையும் ச்ரேஷ்டாத்வ பாரகமனம் - சிறந்த அத்வாவின் அக்கரை அடைவதாகிய. பலம் ச - பரம பிரயோசனத்தையும், ப்ரவீதி - சொல்லுகிறது.

ஆறு மார்க்கங்களில் சிறந்த அத்வாவாகிய வர்ணாத்வாவின் ஸாரபூதமான. ஓங்காரம் என்ற ப்ரணவத்தின் தாத்பர்ய விஷயமாகிய மஹேச்வரனை அடையும்படி செய்யவேண்டுமென்பது அம்மந்திரத்தின் முக்ய ப்ரார்த்தனையாகும். உபநயனம் செய்து, வேதம் கற்று, அர்த்தம் அறிந்து, க்ரியை செய்து, பரமதாத்பர்ய விஷயமான, மஹேச்வரனை ஓங்கார ப்ரதிபாத்யனை அடைவதுதான் முக்கிய பலன். இது ஆரம்பத்தில், பூணூல் போடும்போது, வேண்டிக்கொள்வது கவனிக்கத் தகுந்தது.

## சுலோகம் 112

கல்ப்பா : ப்ரமாணம் ரிஷிபி : யதி ந : ப்ரணீதா:
கிம் ந ப்ரமாணம் ரிஷிணு மகதா மஹர்ஷே |
சக்யம் ந வக்து மபரிக்ரஹ தூஷிதா நி
தந்த்ரா ந்தராணி பவதா சிவ கர்த்ருமந்தி |

### பதவுரை

ரிஷிபி : - ஆபஸ்தம்ப ஆச்வலாயன, காத்யாயன ஸௌனக, போதாயன முனிவர்களால், ப்ரணீதா : - இயற்றப்பட்ட கல்ப்பா : - கல்ப்பக்ரந்தங்கள், ந : - நமக்கு, ப்ரமாணம் யதி - ப்ரமாணமானவைகள், நிச்சயம். மகர்ஷே - பெரியரிஷியான, வேதமுழுவதும் கண்டறிந்து உபாஸிக்கப்பட்ட கடவுளே ! மஹதா ரிஷிணு - பெரிய ரிஷியாக உம்மால், ப்ரணீதம் - இயற்றப்பட்ட, ஆகமம், காமிகாதிகள், கிம் ந ப்ரமாணம் - ப்ரமாணங்கள் ஆகாதா என்ன - நிச்சயம் எல்லாம் ப்ரமாணம் தான். சிவ - பரமசிவனே ! ஆதலால், பவதா - மகர்ஷியான உம்மால், கர்த்ருமந்தி - இயற்றப்பட்டவைகளாகக் கருதப்படும் காமிகாதி, தந்த்ராந்தராணி - வேறு பல தந்த்ரங்கள், அபரிக்ரஹ தூஷிதானி - பின்பு வந்தவர்களால் ஏற்றுக் கொள்ளப்படாததால், குற்றமுள்ளவைகளாக, வக்தும் - சொல்வதற்கு, ந சக்யம் - முடியாது, சில த்வேஷிகள் அங்கீகரிக்காத காரணத்தால், மகரிஷியான உம்மால் ப்ரோக்த காமிகாதி சைவ ஆகமங்கள் ப்ரமாணமாகாது என்று சொல்லக்கூடாது.

## சுலோகம் 113

ஆசக்ஷதே யம் ரிஷி மார்ஷவிதஸ் தபோபி :
ஏகைக மந்த்ரத்ருச மீச்வர ! வேதராசே : |
த்ரஷ்டார மஸ்ய நிகிலேன நிஜானுபாவாத்
அந்யான் ரிஷீனதி மகர்ஷி மதோ விதுஸ்த்
வாம் ||

### பதவுரை

ஆர்ஷவித : – வேதமறிந்தவர்கள், யத் – எந்த காரணத்தால், தபோபி : - பல தவ பலத்தால், ஏகைக மந்த்ர விதம் - ஒவ்வொரு மந்த்ரத்தைக் கண்டுபிடித்தவரை ரிஷிமாசக்ஷதே - ரிஷி என்று சொல்லுகிருர்கள். அத : - அந்தக் காரணத்தால், ஈச்வர - பரமசிவனே ! அஸ்ய - இந்த, வேதராசே : - வேதக் கூட்டத்தை, நிகிலேன - பூராவும், நிஜானுபாவாத் - செயற்கையில்லாத, இயற்கையான, தன் சொந்த சக்தி விசேஷத்தினுல், த்ரஷ்டாரம் - கண்டு பிடித்து. வெளிப்படுத்திய, த்வாம் - உம்மை. அந்யாந் – மற்ற, ரிஷீன் - ரிஷிகளை, அதி - தாண்டி, மேலாகவிருக்கிற, மகர்ஷிம் - மகரிஷியாக. விது : - அறிகிருர்கள்.

விச்வாதிகோ ருத்ரோ மகர்ஷி : என்ற வேதம் உலகத்திலுள்ள பல ரிஷிகளுக்கு மேல்பட்டவர். ருத்ர பகவான் மகர்ஷி எனப்படுகிருர், அஸாதாரணமாக என்று கூறுகிருர். ஈச்வர பதம் போல, மகரிஷி பதம் பரமசிவனுக்கே முக்கியமாகப் பொருத்தமான பதம் ஆகுமென்பது கருத்து.

## சுலோகம் 114

உக்தம் ப்ரதான புருஷேச்வரமேவ ஸாங்க்யை :
ஆக்யாய பாசபசுபத்யபிதான பேதாத் |
ஞேயம் த்வதாகம வித : சிவ ! ஸங்கிரந்தாம்
ஏதாவதா கிமிதி நஸ்த துபேக்ஷணீயம் ||

### பதவுரை

ஸாங்க்ய மதத்தில் சொல்லப்படும் தத்வங்கள்தான் பாசுபத மதத்திலும் கூறப்படுகின்றன என்று சொல்லப்படுகிறது.

ஸாங்க்யை : - கபிலர், பஞ்சசிகாசார்யார், ஆசூரி, ஈச்வர க்ருஷ்ணர், பதஞ்சலி முதலிய ஸாங்க்ய சாஸ்திர ப்ரவர்த்தகா சார்யார்களால், உக்தம் - சொல்லப்பட்ட, ப்ரதான புருஷேச் வரமேவ ப்ரக்ருதி பாசம் அதனுல் கட்டப்பட்ட புருஷன் ஜீவன் அவ்விரண்டுக்கும் தலைவன் ஈச்வரன், என்ற மூன்று தத்வங் களையே, பாசம், பசு பதி என்ற பதங்களின் மாறுதலால், அர்த்த மாறுதல் கொஞ்சம்கூட இல்லாமல், சிவ - பரமேச்வரா! ஞேயம் - அறியப்படவேண்டிய, தத்வத்ரயம் என்ற மூன்று தத்வங்களை, த்வதாகமவித : - உமது சிவாகமம் அறிந்தவர்கள் ஆக்யாய - சொல்லி விவரித்து, ஸங்கிரந்தாம் - பிரதிக்ஞை செய்யட்டும். ஏதாவதா - இந்தப் பதவேற்றுமையால் மாத்திரம், தத்-அந்த ப்ரதான புருஷ ஈசதத்வத்ரயம், ந : - நம்மால், கிமித்யுபேக்ஷ ணீயம் - எங்ஙனம் அனுதரவு செய்ய முடியும் ?

ஸாங்க்யமதக் கொள்கைதான் பூராவும் பெயர் வேற்றுமை யால், பாசுபதமதத்தில் கூறப்படுகிறது. ஆதலால் கபில மதம் தேவஹூதிக்கு, அன்னைக்குப் புத்ரனுல் உபதேசிக்கப்பட்டது எப்படி ஸகல ஜன க்ராஹ்யமோ, அவ்விதமே பாசுபத மதம், ஸகலஜனங்களால் அங்கீகரிக்கப்பட வேண்டிய உண்மை யாகும்.

## சுலோகம் 115

ப்ரத்யக்ஷவேத விஹிதம் ப்ரதிதம் புராணை :
போதாயனேன முனிநா பஹுச : ப்ரணீதம் ।
ஸர்வார்த்த தர்சன பரைரபி க்ருஹ்யகாரை :
யக்ஞோப வீதமிவ விஸ்ம்ருத மர்ச்சனம் தே ॥

ப்ரதிதினம் ஈச்வர பூஜை போஜனத்துக்குமுன் செய்யப் பட வேண்டுமென்பது நித்திய கர்மாவாக வேதங்களிலும், அதன் தாத்பர்யத்தை விளக்கும் புராணங்களிலும், சிவ தர்ம ஸூக்திகளிலும், ஸ்பஷ்டமாக விதிக்கப் பட்டிருக்கிறது. ஆத லால். தினப்படி செய்யவேண்டிய கார்யங்களை விதிக்கும் க்ருஹ்ய க்ரந்தங்களில், ஸந்த்யாவந்தனம், ஔபாஸனம் போல, சொல்லப்படவில்லையே என்ற சங்கைக்கு இடமில்லை. போதா யன மகரிஷியால் சொல்லப்பட்டிருப்பதால், மற்ற க்ருஹ்யகாரர் களுக்கும் சிவார்ச்சனம் பரமஸம்மதம் என்று விளக்கப்படுகிறது.

### பதவுரை

ப்ரத்யக்ஷவேதவிஹிதம் - தமுஷ்டுஹி, ஆவோ ராஜானம், அந்தரிச்சந்தி முதலிய, ரிக்குகளாகிய, ப்ரத்யக்ஷ வேதங்களால்

விதிக்கப்பட்டதும், புராணை : ப்ரதிதம் - புராணங்களால் விஸ் தரிக்கப் பட்டதும், போதாயனேன முனிநா - போதாயன மக ரிஷியால், பஹுச : - மகாபிஷேகம், சூலகவம், ஈசார்ச்சனை என்று பல விதமாக, ப்ரணீதம் - விரித்து விவரிக்கப்பட்டிருக் கும், தே - உம்முடைய, அர்ச்சனம் - நித்திய பூஜையானது, ஸர்வார்த்த தர்சனபரை : அபி - எல்லா நித்திய கர்மாக்களை யும் தெரிவிக்கும் நோக்கமுள்ளவர்களாயினும், க்ருஹ்யகாரை :- மற்ற க்ருஹ்ய ஸூத்ரம், வீட்டில் செய்யவேண்டிய நித்ய கர்மாக்களைத் தெரிவிக்கும் க்ரந்தம் எழுதினவர்களால், யக் ஞோப வீதமிவ - உபநயனத்தில் பூணூல் தரிப்பது போல, விஸ் ம்ருதம் மறக்கப்பட்டது. ஆயினும், ஆசீர்வாதங்கள் செய்த பிறகு ஸமிதா தானத்துக்கு முன்பு யக்ஞோப வீதம் தரிக்கும் காலம் என்று சிவஸ்வாமி அபிப்ராயத்தை, மற்றவர்களால் சொல்லப்படாமல் விடப்பட்டாலும், அங்கீகரிக்கப்பட்டு, அனுஷ் டிக்கப் படுவதுபோல, சிவார்ச்சனமும் ஸர்வஸம்மதமாக அங்கீ கரிக்கப்பட்டதால், அனுஷ்டிக்கப்பட வேண்டும்.

## சுலோகம் 116

வேதோபப்ரம்மக புராணவச : ப்ரபஞ்சை :
ஆகோஷ்யதே விஷமநேத்ர ! ஸமர்ச்சனம் தே |
தந்த்ரைரலம் தத் உபப்ரம்மக வேதமூலை :
வாத்யாஹதம் ந ஹி முகானலஸவ்யபேக்ஷம் ||

### பதவுரை

விஷம நேத்ர - முக்கண்ணனே! தே ஸமர்ச்சனம் — உமது பூஜையானது, வேத - வேதங்களாலும், உபப்ரம்மக - அதன் அர்த்தத்தை விளக்கும், புராணவச : - புராண வாக்யங் கள், ப்ரபஞ்சை : — மற்றவைகளாலும், ஆகோஷ்யதே - உத் கோஷம் செய்யப்பட்டிருக்கிறது. ஆதலால், ததுபப்ரம்மக வேத மூலை : - அந்த சிவார்ச்சனையை வெளிப் படுத்தும் வேதத்தை மூலப்ரமாணமாகக் கொண்டு அதனுல் வேதமூலகத்தால், ப்ர மாணமென்று கருதப்படும் ஸ்ம்ருதி க்ரந்தங்களான தந்த்ரை : - தந்த்ரங்களால், (சிவார்ச்சனை சொல்லப்படாமல் இருந்தாலும்) நாலம் - பாதகமில்லை. அவைகளுக்கு மூலாதாரமான வேதங் கள் சொல்லிவிட்டதால் ஈசார்ச்சனம் நிர்விவாதமான நித்ய கர்மா. வாத்யாஹதம் - புயல் காற்ருல் அடிக்கப்பட்ட வஸ்து, முகானலஸவ்யபேக்ஷம் - வாயால் ஊதித்தள்ளவேண்டியதாக, ந ஹி பவதி - ஆகாதல்லவா ?

## சுலோகம் 117

வேதார்த்த நிர்ணய விதௌ ஹி புராண மங்கம்
நிர்ணீத வேதவிஷயா ஸ்ம்ருதயோ பவந்தி |
ஆத : ச்ருதேரிவ புராண கிரஸ் ஸகாசே
நாலம் ப்ரகாசயிதும் ஆத்மபலாவ லேபம் ||

### பதவுரை

வேதார்த்த நிர்ணய விதௌ - வேதங்களின் உண்மையான அர்த்தங்களை அறிந்து சொல்ல, புராணம் அங்கம் - புராணங்கள ஸாதனமாக இருக்கின்றன. ஸ்ம்ருதய : - யாக்ஞவல்கயர், மனு முதலிய ரிஷிக்ரந்தங்களாகிய ஸ்ம்ருதிகள், நிர்ணீத வேத விஷயா : பவந்தி - புராணங்களால் தீர்மானிக்கப் பட்ட, வேதார்த்தத்தை மூலமாகக் கொண்டு, வேத புராணங்களுக்குப் பிறகு செய்யப்பட்டவைகளாக இருக்கின்றன. ஆத :- ஆதலால், அந்த ஸ்ம்ருதிகள், ச்ருதேரிவ – வேதங்களுக்கு முந் நிலையில்போல, புராணகிர : ஸகாசே—புராண வசனங்களின் முன்னிலையிலும், ஆத்ம பலாவலேபம் - தன் பலத்தின் கர்வத்தை, ப்ரகாசயிதும் - வெளிபடுத்துவதற்கு, நாலம் - சக்தியற்றவைகள். சுருதிக்கு விரோதமான ஸ்மிருதி எப்படி ப்ரமாணமாகாதோ, அப்படியே, சுருதியர்த்தத்தை அறிய உபகாரகமான புராண வசனங்களுக்கு விருத்தமான ஸ்ம்ருதிகளும் ப்ரமாணமாகாது.

புராணங்களிலோ, சிவார்ச்சனை பலவாறுகக் கூறப்பட்டு விதிக்கப்பட்டிருக்கிறது. வாயவீய ஸம்ஹிதை. லிங்கபுராணம், ப்ரம்மாண்ட புராணம், வாமனம், மார்க்கண்டேயம், சிவதர்மம், ஸ்காந்தம், ப்ரம்ம கைவர்தம், சைவ ஏகாதச ருத்ர ஸம்ஹிதை, கூர்ம புராணம் முதலிய க்ரந்தங்களில் விஷ்ணுப்ரம்மாதி தேவர்களால், தங்கள் பதவி, சிவ பூஜையின் மகிமையால் கிடைத்ததாகவும்,

த்யேய : பூஜ்ய : ச வந்த்ய : ச ஜ்ஞேயோ லிங்கே மஹேச்வர :—

என்று முடிவான ஸித்தாந்தம் லிங்கத்தில் ஸந்நிஹிதனை மகாதேவன் ஒருவன்தான் துதிக்கவும், நமஸ்கரிக்கவும் அறியவும் தகுந்தவன் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

அக்னௌ திஷ்டதி விப்ராணும் - கர்மடர்களுக்கு அக்னியில் ஹோமம் செய்வதால் மகாதேவன் பூஜிக்கப்படுகிறுன். ஹ்ருதி லிங்கே ச யோகிஞம் - த்யானம் செய்பவர்களுக்கு,

பூஜிப்பவர்களுக்கு ஹ்ருதயத்திலிருந்து லிங்கத்தில் ஆவாஹனம் செய்யப்பட்டு, ஷோடசோபசார பூஜை செய்தபிறகு லிங்கத்திலிருந்து, அதே ஹ்ருதய கமலத்தில் ப்ரவேசிக்கச் செய்யப்படுகிறார் - ஆதலால்தான், ப்ரதிதினம் சிவார்ச்சனையில் ஆரம்பத்தில்

ஹ்ருத் பத்மகர்ணிகா மத்யாத் உமயாஸஹ சங்கர |
ஆகச்ச த்வம் மகாபாக! ஸர்வை ராவரணைஸ் ஸஹ ||

என்ற மந்த்ரரூபமான சுலோகமும், முடிவில்,

ஹ்ருத்பத்ம கர்ணிகா மத்யம் உமயா ஸஹ சங்கர |
ப்ரவிச த்வம் மஹாபாக ஸர்வை ராவரணைஸ் ஸஹ ||

என்ற மந்த்ரரூபமான சுலோஹமும் உச்சரிக்கப்படுவது, ஸம்ப்ரதாய ஸித்தமாக இருக்கிறது.

ப்ரதிமாஸ்வல்ப்ப புத்தீனும்—மந்த புத்திகள் ப்ரதிமைகளில் சிவபடம் முதலியவைகளில் பூஜிக்கவேண்டும். அவர்கள் ப்ரதிமோபாஸகர்கள் வித்யுல்லோகம் வரையில்தான் உபாஸனு பலத்தால் போகிறார்கள். அங்கிருந்து அமானவ புருஷன் இந்திர ப்ரஹஸ்பதி, ப்ரஜாபதி உலகங்கள் வழியாக அவர்களை ப்ரம்மலோகம அழைத்துச் செல்லுகிறதில்லை யென்பதும் வ்யாஸ மீமாம்ஸ சாஸ்திர ஸித்தாந்தம் காணப்படுகிறது.

ஸர்வத்ர ஸமதர்சினும்--ஸமதர்சி எனப்படும் ஞானிகளுக்கு ஜீவன் முக்தாவஸ்தையில், கீதை இரண்டாம் அத்யாயத்தில் சொல்லப்பட்ட ஸ்திதி பிரஞ்ஞ லக்ஷணப்படி 12வது அத்யாயத்தில் சொல்லப்பட்ட பக்தலக்ஷணப்படியும், 14வது அத்யாயத்தில் சொல்லப்பட்ட குணா தீத லக்ஷணப்படியும், எந்த வஸ்துவும் மகேச்வரனுகத் தோன்றும் என பிரித்து சிவ கீதையில் கூறப்பட்டிருக்கிறது. 32 வித்யைகள், உபநிஷத்துக்களில் கூறப்பட்டவைகளில், தஹரோ பாஸனை எப்படிச் சிறந்ததோ, அப்படிப் பலவித சிவார்ச்சனைகளுள், லிங்கார்ச்சனை, ஹ்ருதய கமலத்திலுள்ள சிவார்ச்சனையானதால் சிறந்தது, ஏகலிங்கார்ச்சனம் ப்ரபத்தி மார்க்கமானதால், மிகச் சிறந்தது என்பது தாத்பர்யம்.

தஞ்சாவூர் ஜில்லா, பாபநாசம் தாலுக்கா, அய்யம் பேட்டைக்கு அடுத்த, வெட்டாறு மிலட்டூர் ஸமீபமான அகரமாங்குடியில் அவதரித்த ஸாம்பஸ்ரீ மணிய சிவனுர் சரித்திரம் ஏகலிங்கார்ச்சனை மகிமையை நன்கு விளக்கும்.*

* ஸாம்பஸ்ரீ மணிய சிவனுர் சரித்திர புத்தகம் மதுரை மேலகோபுர வீதி வி. எஸ். ஸ்வாமிநாதன் புத்தக வ்யாபாரிகளிடம் கிடைக்கும்.
சென்னையிலும் 3/27 பிராட்வே என்ற விலாஸத்தில் அவர்கள் கிளை ஆபிஸ் இருக்கிறது.

## சுலோகம் 118

மூலச்ருதே ரனுபலம்ப பராஹதாயா :
தூ தீவ யா ந பவதி ஸ்வரஸாத் ப்ரமாணம் |
ப்ரத்யக்ஷ வேத விஹிதம் யஜனம் த்வதீயம்
தஸ்யாஸ் ஸ்ம்ருதேரபி கிமிச்சதி த்ருஷ்டி
பாதம் ||

### பதவுரை

அனுபலம்ப பராஹதாயா :— காணப்படாததால், இல்லை யென்று, யோக்யானுபலப்தி ப்ரமாணத்தால் அறியப்பட்ட, மூலச்ருதே :— சில மூலச்ருதி ஸம்பந்தமான, யா—எந்த ஸ்ம்ருதியானது, நாயிகை இல்லை என்பது தீர்மானமாகியிருக்கும் போது, அவளைச் சேர்த்து வைக்கும் தூதீவ - தாதிபோல, ஸ்வரஸாத் - தானாகவே, ப்ரமாணம் - ப்ரமாணமாக, ந பவதி - ஆகாதோ, தஸ்யா :— அப்பேர்ப்பட்ட, ஸ்ம்ருதேரபி த்ருஷ்டி பாதம் - பரதந்த்ர ப்ரமாணத்தையுடைய, ஸ்வரஸ ப்ரமாண மாகாத ஸ்ம்ருதியின் அனுக்ரகத்தையும், ப்ரத்யக்ஷவேத விஹிதம் — ஸ்வரஸ ப்ரமாணமாகிய, காணப்படும் வேதவாக்யத் தால் விதிக்கப்பட்ட, த்வதீயம் - தங்களுடையதான, யஜனம் - பூஜை, அர்ச்சனை முதலிய ஞானதிகள், இச்சதி கிம் - விரும்பு மா என்ன ?

ஸ்வத ப்ரமாணமான வேதம் பரதப்ரமாண ஸ்ம்ருதியை எப்படி அபேக்ஷிக்கும்? வேதத்தில் விதிக்கப்பட்ட சிவார்ச்சன கர்மாவிற்கு ஸ்ம்ருதி விதி தேவையில்லை யென்பது தாத்பர்யம்.

## சுலோகம் 119

பௌர்வாணிகானுபதிசந் நியமான்யதேதத்
அப்யர்ச்சனம் மனுரவோசத தேவதாயா : |
தத்கிம் புனஸ்தவ மஹத்யஸி தேவதாத்வம்
மருக்யே ச காச சகலேன மணேருபேக்ஷா ||

### பதவுரை

பௌர்வாணிகான் - முன் பகலில் செய்யவேண்டிய நிய மான் - அவசியமான கர்மாக்களை, உபதிசந் - தெரிவிக்கிற,

மனு :—மனுவானவர், யத் - எந்த, தேவதாயா : அப்யர்ச்சனம்- தேவதாபூஜை தினந்தோறும் 12 மணிக்குள் செய்யப்பட வேண்டுமென்று, அவோசத - சொன்னரோ, ஏதத் - இந்த தேவதார்ச்சன கார்யம், தவ-தேவதா விசேஷமான உம்மைச் சேர்ந்தது என்பது கிம் புன :— கேட்பானேன்.

அர்த்தஸித்தம் ஸாமான்யமாக தேவதார்ச்சன விதி, தேவதா விசேஷமாகிய உம்மை, எப்படிச் சேராமலிருக்க முடியும் ? மேலும் உம்மைத்தான் மனுவிதி குறிக்கும், ஏனெனில் த்வம் - நீர், மஹதி - பெரிய பூஜனீய, தேவதா - தேவதா கரக் விசேஷமாக, மகாதேவனுக, அஸி - இருக்கிறீர். காசசகலே - காக்காய்ப்பொன், ம்ருக்யே ஸதி-தேடப்படும் நிலையில் இருக்கும் போது, மணேருபேக்ஷா - ரத்னத்தைப் பொருட்படுத்தாமல் இருப்பது, ந - பொருந்தாதன்றே.

ஸாமான்யமாக ஏதாவது ஒரு தேவதையை தினம் பூஜிக்க வேண்டும் என்று விதித்த மனு, மகா தேவனுகிய, மணிதுல்ய ருகிய உம்மைக் கருதவில்லை என்பது எங்ஙனம் பொருந்தும்? ஆதலால், ஸ்ம்ருதிகளுக்குள் முதல்தரமான மனுஸ்ம்ருதியில், மகாதேவார்ச்சனை விதிக்கப்பட்டிருக்கிறது.

## சுலோகம் 120

பத்னியா ஸமம் ஸஹ வ்ருஷேண வ்ருஷேந்த்ர
கேதோ
யுஷ்மத் பலீனுபதிசந் ஸ்த்ரிதசாவ காசே |
அப்யர்ச்சனம் பவன கல்ப்பன பூர்வகம் தே
போதாயன : கதிதவான் அவயுத்ய க்ருஹ்யே ||

ஈச்வரன்தான் மகரிஷி என்பது போல மகாதேவன் எனப் பட முடியும் என்கிறர்.

## பதவுரை

வ்ருஷேந்த்ரகேதோ — சிறந்த தர்ம தேவதையான, வ்ருஷபத்தை வாகனமாகவும், கொடியாகவும், கொண்ட பரமேச்வரா ! பத்ன்யா ஸமம் - மனைவியான உமையுடன், வ்ருஷேன - தர்மரூபமான வ்ருஷபத்துடனும், த்ரிதசாவகாசே - தேவர்களைப் பூஜிக்கும் மத்திய காலத்தில், யுஷ்மத் பலீந் - ஈச்வரன், ஈச்வரி, வ்ருஷபம். ஜயந்தன் முதலிய உங்கள் பலிகளைப்

போடும்படி, உபதிசந் - சூலகவம், ஈசான ஸ்தாலி பாகம் முதலிய கர்மாக்கள் மூலம் செய்யப்படவேண்டியதாக உபதே சிக்கிற, போதாயன :— போதாயன க்ருஹ்ய கார மகரிஷி, பவன கல்பன பூர்வகம் - ஆவாகனம் செய்து ஆஸனம் போடு வது முதலாக, தே - உம்முடைய, அப்யர்ச்சனம்-பூஜா விதியை அவயுத்ய - தனியாகப் பிரித்து, க்ருஹ்யே - க்ருஹ்ய க்ரந்தத் தில், கதிதவான் - சொல்லியிருக்கிறார்.

## சுலோகம் 121

பாவாந்த ராணி பரிஹாய மஹத்ஸு நித்யம்
விக்ஞாநயோக விபவேஷு மஹீயஸே யத் |
தேவோ மஹானபிஹிதோஸி தத: கபர்திந்
நாம த்வதீய மிதமாங்கிரஸா நிராஹு : ||

### பதவுரை

பாவாந்த ராணி - அவித்யையால் கல்ப்பிக்கப்பட்ட கானல் ஜலத்துக்கு ஸமானமான உலகப்பொருள்களை பரிஹாய - நீக்கி விட்டு, மஹத்ஸு - சிறந்த, விக்ஞான - ஆத்மஞானமாகிய, யோக, - உபாயத்தின், விபவேஷு - இயற்கையான மகிமை களில். யத் - எந்தக் காரணத்தால், நித்திய - என்றைக்கும், அநாதியாக, சாச்வதமாக மஹீயஸே - அகண்டஞான மூர்த்தி யாக விளங்குகிறீரோ, தத் - அந்தக் காரணத்தால். கபர்திந் - கபர்தம் என்ற சிவந்த ஜடாபாரம் உடைய கடவுளே ! மஹான் தேவ :- மகாதேவனென்று, அபிஹிதோஸி - சொல்லப்படுகிறீர். இதம் - இந்த, த்வதீயம் - உம்முடைய அஸாதாரணமான, நாம - மகாதேவனென்ற பெயரை, ஆங்கிரஸா : - அதர்வவேத மறிந்த வர்கள், நிராஹு : - நிர்வசனம் செய்து விளக்கிக் கூறுகிறார்கள்.

அத கஸ்மாத் உச்யதே மகாதேவ : - ஏன், மகாதேவன் என்று சொல்லப்படுகிறார் ? ய : ஸர்வாந் பாவாந் பரித்யஜ்ய, அநித்தியமான உலகவிஷயங்களைவிட்டுவிட்டு, அவைகளுக்கப் பால் எவர், ஆத்மஞானம் யோகைச்வர்யே - ஆத்ம அறிவாகிய மிகுந்த ப்ரகாசத்தில் மஹதி - அகண்டத்தில், மஹீயதே - ப்ரகா சிக்கிறாரோ, தஸ்மாத் - அந்தக் காரணத்தால். மகாதேவ : உச்யதே அவர் மகாதேவனென்று கூறப்படுகிறார். - என் கின்றது அதர்வசிரஸ்.

விபவேஷு என்ற சுலோகத்திலுள்ள பகுவசனம் ப்ரஸம்சைக்காகச் சொல்லப்பட்டது. மஹத்ஸு திவ்யதீதி - மகாதேவ: என்று விக்ரஹம் அதர்வசிரஸ்ஸால் காட்டப்பட்டதாகக்கருத்து, ஆதலால், ஆன்மஹத: ஸமானுதிகரண ஜாதீயயோ: - என்ற பாணினி ஸூத்ரப்படி, ஆத்வம்வர அவகாசமில்லாவிடினும், சாந்தஸம், ஆர்ஷத்வாத் ஸாது எனக்கொள்ள வேண்டும். மஹதி மஹீயஸே என்ற அதர்வ சிரஸ்படி வையதிகரண்யமாகத்தான் ஏழாவது விபக்தி தத்புருஷஸமாஸம் செய்யப்பட வேண்டும்,

மகாம்ச்சாஸௌ தேவ: ச மஹாதேவ: என்ற விக்ரஹம் அர்த்தபுஷ்டியில்லாததால், அதர்வசிரஸ் அநநு குணமாதலால், தள்ளப்பட்டவேண்டும். உலகத்தில் நாம் ப்ரயோகம் செய்வது ரூடபதமான பிறகு சுருத்யநு கரணமானதால் ஸாதுவாக முடியும்.

## சுலோகம் 122

த்வேதா தவார்ச்சன விதி: தருணேந்து
மௌளே !
காமாய க: சிதபரோ துரிதக்ஷயாய |
அப்யக்னி ஹோத்ரமுபயம் வயமாமநாம:
ஸ்வர்க்காய யத்பவதி யத்துரிதம் க்ஷிணோதி ||

### பதவுரை

தருணேந்துமௌளே - இளம் சந்திரனைத் தலை ஆபரணமாக அணிந்த சந்த்ரசேகர மூர்த்தியே! தவ - உம்முடைய அர்ச்சனுவிதி: - பூஜைசெய்யும் முறையானது, த்வேதா - இரண்டு விதமானது. க: சித் - ஒருவிதம். காமாய - இஷ்டத்தையடைவதற்காக காம்யார்ச்சனம் எனப்படும். அபர: மற்றொருவித பூஜை. துரிதக்ஷயாய - பாபங்களைப்போக்கி புனர்ஜன்மமில்லாமல், முக்தியைக் கொடுப்பதற்காக (நித்யார்ச்சனம் எனப்படும்) ஸ்வர்க்காய யத் பவதி - ஸ்வர்க்கத்தைக் கொடுப்பதற்காக விதிக்கப்பட்டிருப்பதாலும் யத்துரிதம் க்ஷிணோதி - பாவத்தையழிப்பதற்காகச் சித்தசுத்தியின் பொருட்டு. விதிக்கப்பட்டிருப்பதாலும் அக்னிஹோத்ரமபி - அக்னிஹோத்ரம். ஜ்யோதிஷ்டோமம் முதலிய கர்மாக்களேயும், உபயம்-காம்யம் நித்யம் என்று இரண்டு விதமுள்ளதாக, வயமாமநாம: - நாங்கள் வேதப்ரமாணத்தைக்

கொண்டு ஸம்யோக ப்ருதக்த்வந்யாயத்தைக்கொண்டு சொல்லுகிறோம். அவைபோல, சிவ பூஜையும் காம்யம், நித்யம் ஆக இரு வகைப்படும். போக, மோக்ஷம் இரண்டிற்கும் காரணமாகும் என்பது தாத்பர்யம்.

## சுலோகம் 123

யத் ப்ராம்மணஸ் த்வமஸி நாகவதாம் நிகாயே
துப்யம் நிவேதித மபோஜ்யமிதி ஸ்மரந்தி |
உச்சிஷ்ட மீச்வர ! விசிஷ்டமபி த்விஜானும்
பூமௌ நிகேயம் அதவாம்பஸி மஜ்ஜநீயம் ||

### முன்னுரை

முன்பு ருத்ர பாகத்தைக் கொடுத்த பிறகு அப உபஸ்பர்சனம் செய்வது மஹேசன் ஸந்நிதியில் ஸமமாக மற்ற தெய்வங்களை பூஜிப்பது கூடாது என்ற நோக்கத்தைத் தெரிவிப்பதாகக் கூறப்பட்டது. அதுபோல ருத்ர நைவேத்யத்தை சாப்பிடக்கூடாது என்ற முறை யாது காரணம் பற்றி என்று கேட்டால், அது இகழ்ந்தது என்று தாத்பர்யமல்ல. சிராத்தத்தில் ப்ராம்மண சேஷத்தை எவ்விதம் நாய், நரிகள் முகரக் கூடாது என்பது அதன் உயர்வைக் காட்டுகிறதோ, ஜலத்திலே போடுவது, அல்லது பூமியில் புதைப்பது ஸம்ப்ரதாயமோ, அதுபோல சிவ ஸம்ஸ்காரம், சிவ தீக்ஷையில்லாத ஸாமான்ய ஜனங்கள், சிறந்த சிவ நைவேத்யத்தைப் புஜிக்கக்கூடாது. சண்டேச்வரர் சிவபக்தர், விசிஷ்டர், விசிஷ்ட சிவ நைவேத்யத்தைப் புஜிக்கத் தகுந்தவர்; அவர் உத்தரவின் பேரில் பிறர் புஜிக்கலாம் என்ற உட்கருத்து விளக்கப்படுகிறது.

நாகவதாம் - ஸ்வர்க்கத்தில் வசிக்கும் தேவர்களுடைய, நிகாயே - கூட்டத்தில், த்வம் - நீர். யத் - எந்தக்காரணத்தால், ப்ராம்மண : அஸி - ப்ராம்மண ஜாதியாக இருக்கிறீரோ, (தேவர்களுக்குள்ளும் நாலு ஜாதி உண்டு) துப்யம - உமக்கு நிவேதிதம் - நிவேதனம் செய்யப்பட்டதை, ப்ரஸாதத்தை, சிவ ஸம்ஸ்காரம் இல்லாதவர்களால் அபோஜ்யம் - சாப்பிடப்படக்கூடாது இதி - என்று, ஸ்மரந்தி - சொல்லுகிறார்கள், ஈச்வர - பரமசிவனே ! த்விஜானும் - ப்ராம்மணர்களுடைய (சிராத்தாதி விசேஷ காலங்களில்) உச்சிஷ்டம் - மீதியானது, விசிஷ்டமபி-சிறந்ததாயினும், பூமௌ - பள்ளத்தில், நிகேயம் - புதைக்கப்பட வேண்டும்,

அதவா - அல்லது அம்பஸி - ஜலத்தில், மஜ்ஜனீயம் - மூழ்கடித்துக் கரைக்கப்பட வேண்டும், என்பது தான் கல்ப்பஸூத்ரத்தின் விதி காணப்படுகிறது.

பிள்ளைக்கோ, சிஷ்யனுக்கோ, ப்ராம்மண உச்சிஷ்டமான விசிஷ்டபதார்த்தத்தைக் கொடுக்கலாம் என்பது கல்ப்ப வசனம் அதுபோல, சிவநைவேத்யம் சிவனுக்குப் புத்ர துல்யனை சண்டேச்வரருக்கு உரித்து.

பிறர், சிவஸம்ஸ்காரம் பெற்றவர்கள். அவர் அனுமதிபெற்று புஜிக்கலாம். மற்றவர்கள் புஜிக்கலாகாது என்பது உண்மையான கருத்து. ஆதலால்தான் ஜாபால உபநிஷத்தில், ருத்ரன் சாப்பிட்ட ஆகாரத்தைச் சாப்பிடவேண்டும் ருத்ரன் குடித்த பானத்தைக் குடிக்கவேண்டும் என்று ஸ்பஷ்டமாக விதிகள் காணப்படுகின்றன.

## சுலோகம் 124

த்வம் ப்ராம்மணஸ் த்வதுபதாவனமேவ கார்யம்
தத்ப்ராம்மணஸ் த்வதிதரே ந பவந்த்யு
பாஸ்யா: |
ந ப்ராம்மணனவரவர்ண நிஷேவணேன
ஸம்பாவயேம யதி ந ப்ரபதம் ப்ரமாணம் ||

### பதவுரை

ப்ராம்மணர்கள் தேவர்களுள் பிராம்மணராகிய பரமேச்வரனைத்தான் உபாஸிக்க வேண்டும். தேவர்களுள் க்ஷத்ரியனை விஷ்ணுவை க்ஷத்ரியனல்லவோ உபாஸிக்க வேண்டும் என்று, யுக்தி ந்யாயம் கூறப்படுகிறது.

த்வம் - நீர், ப்ராம்மண:—தேவர்களுள் பிராம்மணராக இருக்கிறீர். தத - ஆதலால், ப்ராம்மணை:—மனிதர்களில் பிராம்மணரால், த்வதுபதாவனமேவ கார்யம் - உமது உபாஸனை தான் செய்யப்படவேண்டும், த்வத் இதரே - உம்மைத் தவிர மற்ற தைவங்கள், உபாஸ்யா:— உபாஸிக்கத் தகுந்தவர்களாக, ந பவந்தி - ஆகமாட்டார்கள், ந: - நமக்கு, ப்ரபதம் - ஸாமவேதத்திலுள்ள.

த்வம் தேவேஷு ப்ராம்மணோஸி, அஹம் மனுஷ்யேஷு ப்ராம்மணோ வை ப்ராம்மணாம் உபதாவதி உபத்வா தாவாமி.

என்று ஆரம்பிக்கும் மந்திரம் (ப்ரபதம் என்று பெயர் பெற்றது), ப்ரமாணம் - ஸந்தேகம் வருமிடத்தில் ஸந்தேகத்தை தீக்கித் தீர்மானத்தைத் தெரிவிக்கும் மந்திரமாக, யதி - இருப்பதால், அவரவர்ண நிக்ஷேவணேன - தனக்குத் தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்த விஷ்ணு, ப்ரம்மா, இந்திரன் முதலியவர்களை ஆராதிப்பதால், ப்ராம்மணன் - ப்ராம்மணர்களென்று, ந ஸம்பாவயேம நினைக்கமாட்டோம். மற்ற க்ஷத்திரிய், வைச்ய, சூத்ர ஜாதியினர் என்றுதான் ஆராதன கர்மாவைக் கொண்டு தீர்மானிக்க வேண்டும், முன் சொன்னபடி ருதம் ஸத்யம் என்ற மந்த்ரத்தில் விருபாக்ஷனாகிய முக்கண்ணன் தான் பரப்ரம்மம் என்பது நிர்ணயிக்கப் பட்டிருப்பதால், அந்த பரப்ரம்மத்தை உபாஸிப்பதால் ப்ராம்மணர்களாக வேண்டியவர்கள் முக்கண்ணனைத்தான் உபாஸிப்பார்கள். இல்லாவிடில் ப்ராம்மணர்களாகக் கருதப்பட மாட்டார்கள். க்ஷத்ரியர்களாக, அர்தார்ஜனபரர்களாகத்தான் இருக்கவேண்டும். மகோப நிஷத்தில் - ஈசானமந்த்ரத்தில், ப்ரம்மாதிபதி: என்ற பதம், நிஷாதஸ்தபத் யதிகரணந்யாயப்படி ப்ராம்மணராகவும், அவர்களுக்கு அதிபதியாகவும் இருப்பவர் பரமேச்வரன்தான். பரமசிவன் தேவர்களுக்குள் ப்ராம்மணர், ப்ராம்மணர்களுக்கு உபாஸ்யர் என்பது யஜுர் வேதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. பராசரபுராணம் ப்ரபத மந்த்ரத்தை விளக்கிக் கூறிவிட்டு முடிவில்

மஹாப்ராம்மண மீசானம் உபதாவேந் ந சேதரம் என்று பரமசிவனை மகாப்ராம்மணராகச் சொல்லி, பிறரை பூஜிக்காதே என்றும் விலக்குதல் தெரிவிக்கிறது.

யோ வை ஸ்வாம் தேவதாம் அதியஜதே ப்ரஸ்வாயை தேவதாயை ப்ரச்யவதே ந பராம் ப்ராப்னோதி பாபீயான் பவதி — தன் தேவதையை விட்டுவிட்டுப் பிற தேவதையை உபாஸிப்பவனுக்குத் தன்னுடைய, பிறருடைய இரண்டு தேவதா ப்ரஸாதமுமில்லாமல் பாபம் ஏற்படும் என்று யஜுர் வேதத்தில் கூறப்பட்டிருக்கிறது

தஸ்மாத் ஸோம ராஜானோ ப்ராம்மணா: என்பது உமாலங்கித பரமேச்வரன் அல்லது சந்திரனைத் தரித்த சந்த்ர சேகரர் தான் ப்ராம்மணர்களுக்கு தெய்வம். ஸாம வேதோ ப்ராம்மணானாம் ப்ரஸூதி: என்பதும் ருத்ர தேவதாக ஸாம வேதத்திலிருந்து பிறந்த ப்ராம்மணர்களுக்குப் 'பரமேச்வரன் சொந்த தெய்வம்

சில ப்ராம்மணர்கள் தங்கள் முன்னோர்கள் உபாஸித்து வந்ததாகச் சொல்லுகிறார்கள். அதுவும் ஸரியல்ல. ஹிரண்ய கசிபு ஈச்வர பக்தன், பிள்ளை ப்ரஹ்லாதன் விஷ்ணுபக்தன்:

தசரதன் விஷ்ணு பக்தன்; ஸ்ரீராமர் சிவ பக்தர், என்றெல்லாம் புராணங்களில் படிக்கிறோம். ஆதலால் தந்தை உபாஸித்த தெய்வத்தைத்தான் பிள்ளை உபாஸிக்க வேண்டுமென்று விதிக்கப்படவில்லை, ஆதலால் அவரவர் வர்ணத்தைச் சேர்ந்த தெய்வத்தைத் தான் உபாஸிக்க வேண்டும் என்பது தான் வாஸனுகுணமான விதியாகும், ராமஸேதுவ்ருத்தாந்தத்தால் ராமர் சிவபக்தரென்பதும், தஸ்மாத் வ்யாஸாத்பரோ நான்ய: சிவ பக்தோ ஜகத்த்ரயே—என்ற வசனத்தால் வ்யாஸர் சிவபக்தர் என்பதும், ந கிருஷ்ணாத் அதிக: தஸ்மாதஸ்தி மாஹேஸ்வராக்ரணீ: - என்ற வசனத்தால் கீதாசார்யன் மகாசிவபக்தன் என்பதும், ந அர்ஜுனேன ஸம - சம்போ: பக்த்யா பூதோ பவிஷ்யதி என்ற வசனத்தால் நரனாகிய அர்ஜுனன் சிவபக்தியும் அவிவாதமாகக் கொள்ளப்பட்டது.

## சுலோகம் 125

உத்கர்ஷத: பரிஹரந்த் யபகர்ஷதோ வா
கா வாஸனா பவதி கஸ்ய க்ருதே ந வித்ம: |
யத் தீக்ஷிதஸ்ய பதிதஸ்ய ச துல்யரூபம்
ப்ரத்யா திசந்தி முனய: கமனீய மன்னம் ||

### பதவுரை

சிவ ஸம்ஸ்கார மற்றவர்கள் சிவப்ரஸாதத்தை புசிக்கக் கூடாது என்பதற்கு வேதங்கள் தான் ப்ரமாணம், யுக்திகேட்பது ஸரியல்ல என்று மூன்று சுலோகங்களால் 125, 126, 127, விளக்குகிறார்.

உத்கர்ஷத: - உயர்ந்ததால் (சிவப்ரஸாதத்தை) பரிஹரந்தி - நீக்குகிறார்கள். அபகர்ஷதோ வா - தாழ்ந்ததாலேயே கா வாஸனா பவதி - என்ன காரணம், கஸ்ய க்ருதே - என்ன பயனுக்காக என்பது, ந வித்ம: - நமக்குப் புலப்படாது, வேதம் விதிக்கிறது, விலக்குகிறது என்பதுதான் தெரியும். விதி விலக்குகளுக்குக் காரணமோ, ப்ரயோஜனமோ கேட்பதும் கூடாத கார்யம். காரணம், ப்ரயோஜனம் தெரியும் விஷயத்தில் வேதத்திற்கு வ்யாபாரம் கிடையாது. முனய: - ஹாரீதர் முதலிய ரிஷிகள், தீக்ஷிதஸ்ய - ஸோமயாக தீக்ஷை செய்துகொண்டிருக்கும், ஆகிதாக்னியான ச்ரோத்ரியருடையவும் பதிதஸ்ய - மகா பாதகம் செய்த பாபியினுடையவும், கமனீயம் - ஆசைப்படுகிற,

அன்னம் - ஆகாரத்தை துல்ய ரூபம் - ஸமான ரூபமாக வைத்து, யத் - எந்தக் காரணத்தால். ப்ரத்யாதிசந்தி - இரண்டு அன்னத்தையும் சாப்பிடக்கூடாது என்று விலக்குகிறீர்கள்? அதில் காரணம் பயன் சொல்லமுடியாது.

## சுலோகம் 126

சண்டாள சண்டில சிதானல சௌண்டிகாணும்
கோப்ராம்மணஜ்வலன தீக்ஷிதயோஷிதாம் ச ||
ஸ்பர்ச: கயா பவதி வாஸனயா நிஷித்த:
ஸ்ப்ருஷ்டேஷு வா சிவ கயா விஹிதா
விசுத்தி: ||

### பதவுரை

சண்டாள - சண்டாளன், பள்ளன், பறையன், சண்டில - அம்பட்டன். சிதானல - மயான அக்கினி, சௌண்டி காணும் - கள்ளுக்கடைக்காரன் இவர்களுடையவும் கோ - பசு, ப்ராம்மண - ப்ராமமணர்கள். ஜ்வலன - ஔபாஸன அக்கினி, தீக்ஷித - தீக்ஷா நியமத்திலிருப்பவர், யோஷிதாம் - ஸ்த்ரீகள் இவர்களுடையவும், (அகாரணமான) ஸ்பர்ச: - தொடுவது, கயா வாஸனயா - என்ன காரணத்தைக்கொண்டு நிஷித்த - விலக்கப்பட்டதாக, பவதி - இருக்கிறது சிவ - ஹே பரமேச்வரா, ஸ்ப்ருஷ்டேஷு வா - அப்படித் தொட்டுவிட்டால், விசுத்தி: - ப்ராயச்சித்தமானது, கயா வாஸனயா - என்ன காரணத்தைக் கொண்டு, விஹிதா - விதிக்கப்பட்டிருக்கிறது. வேதத்தின் விதி விலக்கு விஷயத்தில் காரணம் சொல்லமுடியாது. வேதம் சொல்லுகிறது என்றுதான் பதில் கூறமுடியும்.

## சுலோகம் 127

வர்ஜ்யான்னம் ஆஹுரபி தீக்ஷிதமக்னி கல்பம்
போஜ்யான்னமேவ க்ருதராஜ பரிக்ரயம் தம் |
சங்க்காஸ்தி பாவனமபாவன மஸ்தி ந்ருணாம்
இத்தம் ஸ்திதே வசனமத்ர பராயணந்ந: ||

## பதவுரை

அக்னிகல்ப்பம் - அக்னிக்கு ஸமமான தேஜஸ் உள்ள வராயிருந்தபோதிலும், தீக்ஷிதம் - தீக்ஷிதரை, வர்ஜ்யான்ன மாஹு: - சாப்பிடத்தகாத அன்னமுடையவராகச் சொல்லு கிறார்கள். தமேவ - அந்த தீக்ஷிதரையே, க்ருதராஜ பரிக்ரயும் - ஸோமலதையென்றராஜாவை விலைக்குவாங்கி ஸிம்ஹாஸன மாகிய ஆஸந்தியில். ஸம்ராட் ஆஸந்தியில் வைத்தபிறகு, போஜ்யான்னமாஹு: - சாப்பிட தகுந்த அன்னத்தை உடைய வராகச் சொல்லுகிறார்கள். சங்காஸ்தி - சங்கத்தின் எலும்பு, பாவனம் - சுத்தமானது பூஜைக்கு உபயோகப்படுத்தபடுகிறது ந்ருணும் - மனிதர்களுடைய. அஸ்தி - எலும்போ. அபாவனம் - அசுத்தம், தொடக் கூடாது, தொட்டால் ஸ்நானம் செய்ய வேண்டும். இத்தம் ஸ்திதே - இவ்விதம் நிர்ணயிக்கப்பட்டிருக் கும்போது. அத்ர - இதுபோன்ற விஷயத்தில், ந: நமக்கு. வசனம் - வேதமாதாவின் வாக்யந்தான், பராயணம் - ப்ரமா ணம் - சிறந்த காரணம், யுக்தி சொல்லமுடியாது.

## சுலோகம் 128

அப்ராம்மணை : க்ஷுதபகாதகமஸ்து போஜ்யம்
யத் தேவதாந்தர நிவேதிதமுக்த மன்னம் |
தத்ப்ராம்மணைரபி கிமீச்வர வைச்வதேவே
ஹார்யோ பலி: பலிமதாமசிதேன தேன ||

## பதவுரை

தேவதாந்தர நிவேதித முக்தம் - மற்றதேவதைகளுக்கு நிவேதனம் செய்யப்பட்டு மிகுதியான, யதன்னம் - யாதொரு அன்னமுண்டோ, தத் - அது, அப்ராம்மணை : - பிராம்மணர் களைத்தவிர மற்றவர்களால், க்ஷுதபகாதகம் - பசியைப்போக் கிக்கொள்வதற்காக போஜ்யமஸ்து - சாப்பிடத்தகுந்ததாக இருக் கட்டும். ஈச்வர - பரமேச்வரனே! தேநாசிதேன - அந்த நிவேதனம் செய்யப்பட்ட அன்னத்தால், ப்ராம்மணைரபி - ப்ராம்மணர்களாலும், வைச்வதேவே — வைச்வதேவமென் னும் கார்யத்தில், பலிமதாம் - பலி (ஹவிஸ்) செலுத்தவேண்டிய அக்கினி முதலிய தேவர்களுக்கு, பலி: - ஹவிஸ்ஸானது. ஹார்ய : - போடத்தகுந்தது கிம் - என்ன? அந்த நிவேதனம்

செய்த அன்னத்தினால். வைச்வதேவ பலிஹரணம் செய்யலாமா - செய்யக்கூடாதல்லவா?

## சுலோகம் 129

தேவாந்தரை ரசிதமுக்தமனங்க சாஸிந்
அச்னந்தி சேதநசிதேன பலிம் ஹரந்த : |
ஆச்யைக தேச, விஹிதோ பலிரந்யதாஸந்
நாலம் பலாய விபரீத பலாய தேஷாம் ||

### பதவுரை

அனங்கசாஸின் - மன்மதனைக்கொளுத்தி தண்டனை செய்த கடவுளே, அனசிதேன - தைவத்துக்கு நிவேதனம் செய்யப்படாத அன்னத்தால். பலிஹரணத்தை வைச்வதேவகர்மாவில், செய்கிறவர்கள், தேவாந்தரை : - விஷ்ணு முதலிய மற்றதேவர்களால், அசிதமுக்தம் - நிவேதனம் செய்யப்பட்டு மீதியான அன்னத்தை, அச்நந்திசேத் - சாப்பிடுவர்களேயானால், ஆச்யைக தேச விஹித : - சாப்பிடும் ஆஹாரத்தின் ஒருபாகத்தில் செய்யப்படவேண்டும் என்று விதிக்கப்பட்ட, பலி : - வைச்வதேவ பலிஹரணமானது, அந்யதா - வேறுவிதமாகச் செய்யப்பட்டதாக, ஸந் - இருந்துகொண்டு, தேஷாம் - அவர்களுக்கு, பலாய நாலம் - பயனைக்கொடுக்க வல்லமையற்றதாகிவிடும். விபரீத பலாய - விபரீதமான பலத்தையும் கொடுக்கும். சைவபுராணம், சுருதிகள், ஸ்காந்தம், கடச்ருதி, இவைகள், பிராம்மணர்கள் சிவநிவேதனம் செய்யப்படாததை புஜிக்கலாகாது என்று தெளிவான விலக்குதல் காணப்படுகிறது.

## சுலோகம் 130

ப்ரம்மாணம் ஈச்வர ! புரா ஹதவானஸீதி
பிக்ஷாடனம் விம்ருசத : ப்ரதிபானமாத்ரம் |
யத்பஞ்சமே சிரஸி புஷ்பஸமம் நிக்ருத்தே
ஜீவந்தமேனம் அமிதாயுஷமாஹுராப்தா : ||

### பதவுரை

ஈச்வர - பரமசிவனே ! புரா - முன்பு, ப்ரம்மாணம் - பிரம்ம தேவனை. ஹதவானஸி - கொன்றவராக இருக்கிறீர். இதி -

என்பது, பிக்ஷாடனம் - பிக்ஷைவாங்கும் உமது சரித்திரத்தை, விம்ருசத : - ஆராய்ச்சி செய்நவனுடைய, ப்ரதிபான மாத்ரம் - ஆபாஸமான ஸித்தாந்தம், யத் - எந்தக் காரணத்தால், பஞ்சமே சிரஸி - பிரம்மாவின் ஐந்தாவது தலே, புஷ்ப ஸமம் - பூவைக்கிள்ளுவதுபோல. கொஞ்சமும் சிரமம் உண்டாக்காமல் நிக்ருத்தே ஸதி, கிள்ளப்பட்டிருப்பதால், ஜீவந்தம் - உயிருடன் இருப்பதாகவும், அமிதாயுஷம் - பொய் சொன்ன தோஷத்திற்குத் தந்தையால் தண்டனே செய்யப்பட்டு விட்டபடியால், உயிர்போகாமல், 5 வது தலேமாத்திரம் கிள்ளப்பட்டு, பாபம் நீங்கி. பரார்த்தத்வய ஜீவியாக இருப்பவராக, ஏனம் - இந்த ப்ரம்மதேவரை, ஆப்தா : - பெரியோர்கள் சொல்லுகிறுர்கள்.

பிரம்மாவின் உயிர் நீங்கியிருந்தா லல்லவோ. ப்ரம்மஹத்தி தோஷம் ஸம்பவிக்கும். அதற்கு ப்ராயச்சித்தமாக பிக்ஷாடனம் செய்யப்படுகிறது என்று விமர்சகர்கள் சொன்னுல் பொருந்தும் தண்டித்துப் பாவத்தைப்போக்கி ஆயுளேப் பூரணமாக பிரம்மாவிற்கு அளித்திருக்கும் பரமசிவனுக்கு, பிரம்ம ஹத்தி தோஷம் எப்படி ஏற்படும். அதற்கு எங்ஙனம் ப்ராயச்சித்த மாகும்? ஆதலால் அரசன் திருடனே அபராதம்போட்டு தண்டிப்பது போல, ஈச்வரன் தனயனுக்குச் செய்த அனுக்ரஹலீலேயாகும்.

## சுலோகம் 131

ஆனுபிஜானு வஸிதம் வஸனம் ந சாணம்
பாணௌ கபால சகலம் ந விலோகிதம் தே |
நாலம்பதே சவசிரஸ்தவ கேதுயஷ்டௌ
பைக்ஷம் ந ஸாப்தபவனம் ஸகலம் ததாஸ்
தாம் ||

### பதவுரை

பிரம்மஹத்தி ப்ராயச்சித்தமாகில், எல்லா லக்ஷணங்களும் பிக்ஷாடன மூர்த்தியிடம் காணப்படவில்லே. ஆனுபிஜாநு - தொப்புளில் ஆரம்பித்து முழங்கால் வரையிலும், சாணம் வஸனம் - சணல் மயமான வஸ்திரம், ந வஸிதம் - உடுத்திக் கொள்ளப் படவில்லே. தே - உம்முடைய. பாணௌ - கையில், கபாலசகலம் - மண்டையோட்டுத் துண்டு, ந விலோகிதம் - பார்க்கப் படவில்லே. தவ - உம்முடைய, கேதுயஷ்டௌ - கொடிக்கம்பில், சவசிர : - கொன்ற பிணத்தின் தலே, நாலம்பதே - தொங்

கப்படவில்லை. ஸாப்தபவனம் பைக்ஷம் - ஏழுவீட்டில் வாங்க வேண்டிய பிக்ஷைத்ரவ்யத்தின் கூட்டமும், ஸகலம் - ப்ராயச் சித்தத்தில் சொல்லப்படும் இவையெல்லாம், லக்ஷணங்கள். ந - பிக்ஷாடன மூர்த்தியான உம்மிடம் காணப்படவில்லை. ஆஸ்தாம் தத் - இவையனைத்தும், வேதவிதி நிஷேதங்களுக்கு உட்பட்ட உலகத்து ஜனங்களுககு இருக்கட்டும்.

வேதோபதேசகனுக்கு கர்மாவிற்கு உட்படாத லோகாதீத னுக்கு, ஈசனுக்கு எப்படிப் பொருந்தும்? அவருக்கு, அனுக்ரஹ மூர்த்திக்கு ப்ரத்யவாயமும் கிடையாது. ப்ராயச் சித்தமும் கிடை யாது. ஆதலால்தான், தக்ஷிணாமூர்த்தி நடராஜாமூர்த்திகள் போல, பிக்ஷாடன மூர்த்தியும், ஆனந்த மாகக், கண்குளிர தர்சிக்கப்படுவதும், ஜனங்கள் அனுக்ரஹம் பெற்று, தீர்க்காயு ளாக இருப்பதும். நடராஜா ஆனந்தமூர்த்தி ; ஞானோபதேசம் செய்யும் தக்ஷிணாமூர்த்தி - சித்ரூபி : எல்லாருக்கும் தர்சனம் கொடுத்து அனுக்ரஹிக்கும் பிக்ஷாடனமூர்த்தி ஸத்தாமூர்த்தி. ஸத் சித் ஆனந்த பரப்ரம்மரூபம் : பரமேச்வரன்.

## சுலோகம் 132

யத் காலபைரவக்ருதம் பதனீய மேன :
கிம் தேன தே பவதி பைக்ஷமதாபி வ்ருத்தி : |
தந் மத்ய பாதிநி வதே விபுதாந்தரஸ்ய
நிர்வேத மாசரஸி கின்னு பவானஜஸ்ரம் ||

### பதவுரை

அதாபி - பிறர் சொல்வதை அங்கீகரித்தாலும், காலபைர வக்ருதம் - உமது அம்சமாகிய காலபைரவரால் செய்யப்பட்ட, யத் - யாதொரு பதனீயமேன : - மகாபாதகமாகும் பிரம்மவத தோஷமுண்டோ, தேன - அதனுல். தே - உமக்கு, பைக்ஷம் வ்ருத்தி :- பிக்ஷைவாங்கும் பயன், பவதி கிம் - வருமா என்ன ?

கால பைரவர் செய்த பிரம்மஹத்திக்கு, பிக்ஷை வாங்கும் தண்டனை அவருக்கு இல்லாமல், உமக்கா ? இது என்ன ? தன் மத்ய பாதினி - அந்த ப்ரம்மஹத்தியடங்கிய, விபுதாந்தரஸ்ய வதே - ப்ரம்மா, விஷ்ணு, யமன், இந்திராதி மற்ற தேவதை களின் ஸம்ஹாரத்தில், அஜஸ்ரம் - ப்ரதி கல்பம், பல தடவை கள் செய்யப்படும்போது, பவான்- தாங்கள், நிர்வே த மாசரஸி- கிம்-வெறுப்பை, துக்கத்தைக் கைக்கொள்ளுகிறீர்களா என்ன ?

ஸம்ஹார மூர்த்தியான தாங்கள் ப்ரதி கல்ப்ப முடிவிலும், ஸகல தேவதைகளேயும் ஸம்ஹரிப்பது ஸ்வதர்மமே யல்லவா? அதுவும் வத ரூபமல்ல, உப ஸம்ஹார ரூபம். அனுக்ரஹத்திற்காக, திரோதான துல்யமல்லவா? சுருதியும் ஹரிம்ஹரந்தம் அனுயந்தி தேவா: என்பது, நரஸிம்ம மூர்த்தியை ஸம்ஹரித்தவராகவும், வ்ருஷபம் மநீஞம் - நல்ல புத்தியை வர்ஷித்து அனுக்ரஹிக்கிறவராகவும், விச்வஸ்யேசானம் - ஸகல ஜகத்துக்கும் தலேவன் மஹேசன் என்றும், ஸம்ஹாரமூர்த்தியை அனுக்ரஹ மூர்த்தியாகவல்லவா விளக்கிக் கூறுகிறது. புராணங்களும் ஹரன் என்ற நாம நிர்வசனத்துக்காக, இச்சுருதி அர்த்தத்தையே விளக்குகின்றன.

## சுலோகம் 133

யத்பாசுபத்யமவ்ருணே தமராந்தரேப்யோ
பிக்ஷாம் பவனக்ருத யத் பரமேச்வரோபி |
சோத்யம் ததேதத் உபயம் பரிஹர்த்துகாமோ
மன்யே ப்ருஹஸ்பதிரபி ப்ரதிபத்தி சூன்ய : ||

### பதவுரை

பவான் - தாங்கள், பரமேச்வரோபி - பரம ஐச்வர்ய ஸம்பன்னராகவிருந்தும். அமராந்தரேப்ய : - மற்ற சில்லரை தேவதைகளிடமிருந்து, பாசுபத்யம் - பசுக்களுக்குத் தலேவர் என்ற பதவியை, அவ்ருணோத் : வரமாகப் பெற்றுக்கொண்டீர், இதியத் - என்று யாதொரு கட்டுக்கதை சொல்லப்படுகிறதோ, பிக்ஷாம் அக்ருத இதியத் - பிக்ஷைவாங்கினீர் என்றும் யாதொரு அபத்தச் சொல்லுண்டோ, ததேதத் உபயம் - இந்த இரண்டு கேள்விகளே,.பரிஹர்த்தும் காம : - ஸமாதானம் சொல்லவிரும்புகிறவராக, ப்ரஹஸ்பதிரபி - பிரஹஸ்பதியும் கூட, ப்ரதி பத்தி சூன்ய : - லீலே என்று சொல்வதைத் தவிர வேறு ஸரியான ஸமாதானம் சொல்ல அறிவில்லாதவரென்றே. மன்யே - நினேக்கிறேன்.

### விசேஷ உரை

" த்ரிபுர ஸம்ஹார காலத்தில், எனக்கு பாசுபதி த்வம் இயற்கையாக அமைந்தது. இதை இப்போது, பணபந்த முறையில் காண்பிக்கிறேன், " என்று தேவர்களேப் பார்த்துப்

பரமசிவன் சொல்வதாகப் புராணங்கள் விளங்கக் கூறுகின்றன, அப்படியே சிவரகஸ்யக்ரந்தத்தில், பார்வதிக்குப் பரமசிவன் தன் பிக்ஷாடனத்தைப் பற்றிக் கூறுகிறார் :- "நான் கொடுத்த மகிமையால் மயங்கின தேவர்களுக்கு, நல்ல புத்தி விளக்க என்னை யறியாத அவர்கள் கர்வத்தையும் அக்ஞானத்தையும் நீக்க, ரத்த பிக்ஷை வாங்கும் போலிச்செயல் செய்கிறேன். அதனால் கர்வம் நீங்கி ஞானவான்களாகட்டும்." என்று சொல்வதாக ப்ரமாண வசனங்கள் இருக்கின்றன.

## சுலோகம் 134

ப்ரம்மாஸி விஷ்ணுரஸி ஸர்வமஸீதி யத்
த்வாம்
ஆஸ்தாமுபாஸனவிதிம் கதயந்தி மூடா : |
தத்தேவதாந்தர நிகர்ஷ நிகூஹநாய
மோஹாய வா பவது ஜல்ப்பித மல்ப்ப
புத்தே : ||

ஹரிஹர அபேத ப்ரதிபாதக புராண வசனங்களின் உட்கருத்து சொல்லப்படுகிறது.

### பதவுரை

த்வாம் - உம்மைக்குறித்து, ப்ரம்மாஸி - பிரம்மாவாக விருக்கிறீர், விஷ்ணுரஸி - விஷ்ணுவாக இருக்கிறீர், ஸர்வமஸீதி - எல்லாமாக இருக்கிறீர், இதி என்று, உபாஸனவிதிம்-உபாஸிக்கும்படி விதியை, மூடா : கதயந்தி - மூடர்கள் சொல்வது, ஆஸ்தாம் - இருக்கட்டும், தத் - அது, தேவதாந்தர நிகர்ஷ - மற்ற தேவர்களின் தாழ்மையை, நிகூஹநாய - மறைப்பதற்காக, அல்ப்ப புத்தே : - மந்தமதிகளின், மோஹாய வா - மயக்கத்துக்காகவாவது, ஜல்ப்பிதம் பவது - உளரலாகவிருக்கட்டும்.

## சுலோகம் 135

அத்வைத மாகமசிரோபி ருபாஸநாயாம்
உக்தம் தவேதி பரமார்த்த தயா ந வாச்யம் |
பேதஸ்புடோ கருட மாந்த்திரிகயோரலீகம்
தாதாத்ம்ய பாவன மதாபி விஷம் ப்ரமார்ஷ்டி ||

## பதவுரை

அத்வைதம் - அத்வைதமானது, ஆகமசிரோபி : - வேதாந்தங்களால், உபாஸனையாம் தவ - உம்முடைய உபாஸனேக்கு அங்கமாக, உக்தம் இதி - சொல்லப்பட்டது என்பதால், பரமார்த்ததயா ந வாச்யம் - அத்வைதம் தான் சேஷி, முக்தி ஸாதனம், ப்ராதானமென்று சொல்லக் கூடாது. கருட மாந்த்ரிகயோ: கருடனுக்கும், விஷத்துக்கு மந்த்ரிக்கும் மந்த்ரவாதிக்கும் பேத ஸ்புட :- வேற்றுமை ப்ரத்யக்ஷமாகத் தெரிகிறது. அதாபி- ஆனாலும், அலீகம் - பொய்யான, தாதாத்ம்ய பாவனம் - இருவரும் ஒன்று என்று கருட தாதாத்மயமாக த்யானம் செய்தால், விஷம் - பாம்பு கடித்த விஷத்தை, ப்ரமார்ஷ்டி - போக்குகிறது. ஆதலால் பரமாத்மாவாகிய - பரமேச்வரனுக்கும், ஜீவாத்மாகிய ஜீவனுக்கும், பேதம் உண்மை, தாதாத்ம்யமாக த்யானம் செய்து உபாஸனையால் முக்தி பெறவேண்டும்.

கர்ம காண்டத்தில், கர்மானுஷ்டத்தால் மனது சுத்தப் படுவதால், கர்ம காண்டம், ஞான காண்டம் இரண்டும் பரமேச்வரன் உபாஸனேக்கு சேஷமானது என்பது ஹரதத்தாசார்யார் ஸித்தாந்தமாகும். அத்வைத ப்ரதிபாதனம் உபாஸனோக்காகத் தான்; உண்மையல்ல, மஹோபநிஷத்தில் உபக்ரம உபஸம்ஹாராதி தாத்பர்ய நிர்ணயக ப்ரமாணங்களால் சேஷியான பரம சிவனுபாஸனே தீர்மானிக்கப்பட்டிருப்பதால், இதர உபநிஷத்துக்கள் மஹோபநிஷத்தையநுஸரித்து மாற்றப்படுவது யுக்தமாகும் என்று ஹரதத்தசிவாசார்யார் சொல்லுகிறார். பக்தி ரஸாயனம் முதலிய க்ரந்தங்களியற்றிய, அத்வைதாசார்யரான மதுஸூதன ஸரஸ்வதீ முதலியவர்கள் அபிப்ராயமும் இதற்குச் சான்றும் அனுகுணமுமாகும். ஞானம் சேஷி என்ற சங்கரபகவத்பாதாள் அபிப்ராயத்திலும் உபாஸிக்கப்பட்ட பரம சிவன் அருளால்தான் ஞானம் உதயமாகும். ஸர்வ வித்யானும் ஈசானர் அவர் என்பது எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதே ஆதலால் விரோதம் அணுவளவும் கிடையாது.

## சுலோகம் 136

யத் ப்ரம்ம பஞ்சம சிரோலவனு பதானம்
யத் ப்ரம்மணு ச ஹரிணு ச விமார்கணம் தே !
யத்வா தயோர் ஜனயிதார மதீமஹே த்வாம்
தத்ஸர்வ மீச்வர ! விமூடதியாமஸஹ்யம் ||

### பதவுரை

ப்ரம்ம பஞ்சம சிர : - ப்ரம்மாவின் 5 வது தலையை, லவனா - கிள்ளிய, அபதானம் யத் - விருத்தாந்தம், யாதொன்று உண்டோ, ப்ரம்மணா - பிரம்மதேவராலும், ஹரிணா - நாராயணனாலும், தே - உம்முடைய, (முடி, அடி, காண்பதற்காக) விமார்கணம் யத்-தேடச்சென்ற விருத்தாந்தம் யாதொன்று உண்டோ, தயோ : - அவ்விரு ப்ரம்ம விஷ்ணு தேவர்களுக்கு, ஜனயிதாரம்- (வலது பாகத்திலிருந்து ப்ரம்மா உண்டானார், இடது பாகத்திலிருந்து விஷ்ணு உண்டானார் என்றதால்) தந்தையாக இருப்பதாக, த்வாம் - உம்மை, யத்வா அதீமஹே - வேதங்களிலிருந்து அறிகிறோம் என்பது யாதொன்று உண்டோ, ஈச்வர - ஹே பரமேச்வரா! தத் ஸர்வம் - அவையெல்லாம், விமூடதியாம் - மூட ஜனங்களால், அஸஹ்யம்—பொறுக்கமுடியாமல் இருக்கிறது.

## சுலோகம் 137

ஸோமே லதாத்மனி மஹேச்வர! கௌண
விருத்யா |
விஷ்ணோரவாதி ஜனகத்வம் ருசா கயாபி
த்வய்யேவ தத் பவிது மர்ஹதி முக்ய வ்ருத்யா
நேந்த்ரே ந பங்கஜபவே நிதராம் முராரௌ ||

### பதவுரை

மஹேச்வர, லதாத்மனி - கொடியுருவம் கொண்ட ஸோமலதையில், விஷ்ணோ : ஜனகத்வம் - விஷ்ணுவின் தந்தையாக இருத்தல், கயாபி ருசா - ஓர் ரிக் மந்த்ரத்தால், கௌணவ்ருத்யா - ஸ்துதிக்காக, கௌணமாக பையன் சிங்கம் என்ற ப்ரயோகம்போல, அவாதி - சொல்லப்பட்டிருக்கிறது. தத் - அந்த விஷ்ணுவின் தந்தையாக இருப்பது, முக்யவ்ருத்யா - உண்மையாக சுருதி, ஸ்ம்ருதி புராணப்ரமாணங்களை அனுஸரித்து த்வய்யேவ - உம்மிடத்திலேயே பவிது மர்ஹதி - இருப்பது தகுந்தது. இந்த்ரே - இந்திரனிடம் பொருந்தாது, பங்கஜபவே - ப்ரம்மாவிடம் பொருந்தாது, முராரௌ ச - விஷ்ணுவினிடம் நிதராம் ந - அடியோடு பொருந்தாது.

## சுலோகம் 138

அன்யோன்யதோ யதி பவேதஹமீச்வரஸ்யாம்
த்வம் சாஹ மீச்வர! கிமத்ர நியாமகம் ந: |
கோவா விபர்யஸிதுமர்ஹதி வஸ்து சக்திம்
தத் தத் ஸ்வபாவநியதாம் பவதாக்ஞையாபி ||

ஹரி ஹரர் இருவர்களுக்கும் உற்பத்தியுண்டு.
நாராயணாத் ருத்ரோ ஜாயதே என்றும், நாராயணனிடமிருந்து சிவன் பிறந்ததாக சுருதி கூறுகிறது என்பதற்கு பதில் கூறப் படுகிறது.

### பதவுரை

அன்ய - ஹரி ஹரர்களில் ஒருவர், அன்யத :- மற்றவரிட மிருந்து, யதிபவேத் - ஹரனிடமிருந்து ஹரி, ஹரியிடமிருந்து ஹரன் உண்டானதாக இருந்தால், அஹம் ஈச்வர : ஸ்யாத் - நான் கடவுளாக இருக்கலாம். த்வம் ச அஹம் - நீங்களும் ஜீவனாக இருக்கலாம், ஈச்வர - கடவுளே! ந : - நமக்கு, கிம் அத்ர நியாமகம் - என்ன விதி கமகமான காரணம் சொல்ல முடியும்? ஆதலால் பரமேச்வரன் உத்பத்தியை அங்கீகரிப்பது வ்ய வஸ்தைக்கு விரோதமாதலால், அவருக்கு உத்பத்தி கிடையாது. அவரிடமிருந்து தான் மற்ற தேவதைகள் விஷ்ணு உள்பட உண்டானார்கள். விஷ்ணுவின் பிதா பரமசிவன் என்பதுதான் சுருதி தாத்பர்யமாகும் நாராயணனிடமிருந்து காலாக்னிருத்ரன் என்ற ஸம்ஹார மூர்த்திக்கு, தமோகுண ப்ரதானனுக்கு உற் பத்தி கூறப்பட்டிருக்கிறது. குணா தீதனான, துரீயனாகிய, பர ப்ரம்ம லக்ஷணம் வாய்ந்த பரமேச்வரனுக்கு உத்பத்தி கிடை யாது. ஜகத் காரணனல்லவா அப்பரம்பொருள்? ருத்ர : என்று ஜ்வரத்துக்கும் பெயரானதால், வாஸுதேவன் கோபத்தால் ஜ்வரம் உண்டாயிற்று என்று அந்த சுருதியின் அர்த்தம் கொள்ளவேண்டும். பவதாக்ஞயாபி - உம்முடைய உத்தரவால் கூட, தத் தத் ஸ்வபாவ நியதாம் - அந்த அந்த இயற்கையாக அமைந்த வஸ்து சக்திம் - வஸ்து ஸாமர்த்தியத்தை, விபர்ய ஸிதும் - மாற்றுவதற்கு, கோவார்ஹதி - யாரால் முடியும்?

பரமசிவனுக்கு அனைத்தையும் உண்டுபண்ணும் வல்லமை, வஸ்து ஸ்வபாவ நியதமானதை, யாரால் அபலபிக்க முடியும் என்பது கருத்து.

## சுலோகம் 139

ஏகம் தவாப்யஸுகரம் ததுதாஹ ராமோ
ஜாதேன பாவ்ய மமராந்தரவத் த்வயாபி |
அப்யர்த்திதோபி ஹி மஹேச! மகர்ஷிதாரை:
அந்தர்ஹிதஸ் த்வமஸி கர்ஹித கர்ப்பவாஸ: |

### பதவுரை

மஹேச - பரமசிவனே! தவாபி - உமக்கும், ஏகம் - ஒரு கார்யம், அஸுகரம் - செய்ய முடியாது, தத் - அதை, உதாஹ ராம: - விளக்கிக்கூறுகிறோம். எல்லாராலும் பிறக்கமுடியும். பிறப்பது என்பது த்வயாபி - உம்மாலும் செய்ய முடியாத கார்யம், உம்மால் கர்ப்ப வாஸம் செய்ய முடியாது திண்ணம், அமராந்தரவத் - ப்ரம்மா, விஷ்ணுவைப்போல, ஜாதேன பாவ்யம் - தனக்குக் குழந்தையாகப் பிறக்கவேண்டுமென்று, மகர்ஷிதாரை: - அத்ரிமுனிவர் பத்னியான அநுஸூயை தேவியால், அப்யர்த்திதோபி - வரம் வேண்டிக் கொள்ளப்பட்ட போதிலும், த்வம் - நீர், கார்ஹித கர்ப்பவாஸ: - கர்ப்பவாஸம் நிந்திக்கப்பட்டதால், அந்தர்ஹித: - மறைவாக, வேறுவிதமாக, கர்ப்பவாஸம் இல்லாமல், அஸி - பிள்ளையாக அநுஸூயைக்கு ஆனீர்.

அநுஸூயைக்கு சிவன் உருவமான புத்ரன் துர்வாஸர். அநுஸூயையின் கையிலிருந்து, புஷ்பாஞ்ஜலியிலிருந்து, மறைவாக இருந்தவர்போல ஆவிர்ப்பவித்தார். ப்ரம்மா, விஷ்ணு இருவர்கள் தாம் சுக்ல, ச்ரோணிதமாகப் பிறந்தார்கள், (ஸோமனுகவும், தத்தாத்ரேயராகவும்.) கர்ப்பவாஸம் மிகவும் கஷ்டமானது என்பதைப் பெயரில் காட்டி, புஷ்பாஞ்ஜலியில் மறைந்து, அநுஸூயா தேவியின் கையிலிருந்து துர்வாஸ முனிவராக, சிவன் ப்ராதுர்ப்பவித்தார் என்ற விஷயம் ஸனத்குமார ஸம்ஹிதையில் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆதலால் விஷ்ணு, ப்ரம்மா முதலிய அனைவரும் பசுக்கள். பரமேஸ்வரன் ஒருவர் நாம் பிறக்காதவர், பசுபதி.

கர்ப்பவாஸோ ஹி துர்வாஸ: ஸர்வா வாஸேஷ் விதீவ யத் |
துர்வாஸா நாம புத்ரோ பூத் தஸ்யா: புஷ்பாஞ்ஜலே: சிசு: ||

என்பது முடிவான ஸனத்குமார ஸம்ஹிதையின் உண்மை வசனம், விஷ்ணுவால் சொல்லப்பட்டது.

## சுலோகம் 140

இச்சாவதீர்ண முரசாஸனகர்ப்பவாஸ:
ஸ்யாத்சேத் உதாஹரணமேவ விமர்சனீய: |
கர்ப்பே வஸாமி பரிவேஷ்ட்ய ஜராயுணாஹம்
மாஸான் பஹூனிதி மஹேச்வர! கஸ்ய காம: ||

### பதவுரை

இச்சாவதீர்ண - தன்னிஷ்டத்தின் பேரில், லோகக்ஷேமார்த்தமாக அவதாரம் செய்த, முரசாஸன - முராசுரனைக் கொன்ற நாராயணனுடைய கர்ப்பவாஸ: - கர்ப்பவாஸமானது, உதாஹரணம் ஸ்யாத் சேத் உதாரணமாகக் கொடுக்கப்படுமானால், ஏஷ: - இந்த கர்ப்பவாஸம், விமர்சனீய: - யோஜித்து முடிவு செய்யப்பட வேண்டிய விஷயம், இஷ்டப்படிக்கு, ஒருவனும் கர்ப்பத்தில் வசிக்கமாட்டான் என்பது தாத்பர்யம், மஹேச்வர, அஹம் - நான், பஹூன்மாஸான் - பல மாதங்கள் இடைவிடாமல், ஜராயுணா - காப்பப்பையால், பரிவேஷ்ட்ய - சுற்றப்பட்டு, கர்ப்பே வஸாமி - கர்ப்பத்தில் வசிக்கிறேன், இதி - என்ற காம: - விருப்பம், கஸ்ய - யாருக்குத்தான் ஏற்படும்? ஒருவனும் கர்ப்பத்தில் உள்ள அவஸ்தைகளைப் படுவதற்காக, கர்ப்பத்தில் வஸிக்க விரும்பமாட்டான் ஆதலால், கர்மாதீனமாகக் கர்ப்பவாஸத்தில் தள்ளப்பட்டாலன்றி: ஒருவன் தானாக இஷ்டப்பட்டு கர்ப்பவாஸம் செய்தான் என்பது அர்த்தமற்ற வசனமாகும்.

## சுலோகம் 141

இச்சாபி நூன மனுயாதி புரா க்ருதானி
கர்மாணி சங்கர! சுபாசுபலக்ஷணானி |
இச்சாவதார வசனானி து பாரதாதெள
நாராயணஸ்ய குணவாத முதாஹரந்தி ||

இஷ்டப்படி அவதரித்தலை அங்கீகரித்தாலும் இந்த விருப்பம் கர்மாதீனமாகத்தான் ஏற்படும். ஆகவே விஷ்ணுவின் அவதாரங்களும் கர்மாதீனம்தான்.

### பதவுரை

சங்கர, இச்சாபி - விருப்பமும், புராக்ருதானி - முன் செய்யப்பட்ட, சுபாசுபலக்ஷணானி - புண்ணியம், பாவம், என்று

பிரஸித்தியடைந்த, கர்மாணி - கர்மாக்களை, நூனம் - நிச்சய
மாக, அனுயாதி - பின்பற்றியே உண்டாகும். பாரதாதெள -
பாரதம் முதலிய க்ரந்தங்களில் இச்சாவதராவசனுனி-ப்ரம்மாண்
டபுராணத்திலும் உத்தர ராமாயணத்திலும், ப்ருகுபத்னியைக்
கொன்ற சாபத்தால் மத்ஸ்ய கூர்மாதி 10 ஜன்மாக்கள் விஷ்ணு
விற்கு, அவர் ஜனியமாகக் கர்ம நிமித்தமாக ஏற்பட்டதாகவும்.
கிருஷ்ணனுடைய சொந்தவாக்கியத்தாலும் நிர்ணயிக்கப்பட்
டிருக்கும்போது ஸம்பவாமி யுகேயுகே - என்று உலகத்தை
காக்க இஷ்டப்படி அவதாரம் செய்ததாகக்கூறும் வாக்கியங்கள,
நாராயணஸ்ய - நாராயணனுக்கு, குணவாத முதாஹரந்தி -
விரோதம் உண்டாவதால், புகழ்ந்து சொன்னவாக்கியங்கள்
என்பதாக மீமாம்ஸகர்கள், ஸித்தாந்தம் செய்திருக்கிறார்கள்.
பூதார்த்தவாதம், விரோதமில்லாத ஸமயத்தில்தான் அங்கீகரிக்
கப்படுகிறது.

## சுலோகம் 142

விதாதாரம் க : சித் பஜதி பஜதே க : சனஹரிம்
ஸுரானன்யானன்யே ஜகதி ஸபலா : ஸர்வ
விதய : |
ததாபி த்வத்பக்தே சிவசிவ யதாசர்மவதிதி
ச்ருதோ மந்த்ரோ தேவாந்தர பஜன தைன்யம்
ந ஸஹதே ||

### பதவுரை

க : சித் - ஒருவன், விதாதாரம் பிரம்மதேவனை, பஜதி -
ஸேவிக்கிறான். க : சன - மற்றொருவன், ஹரிம் - நாராயணனை,
பஜதே - ஸேவிக்கிறான். அன்யே - மற்றவர்கள், அன்யான்
ஸுரான் - மற்றதேவர்களை. பஜந்தே - ஸேவிக்கிறார்கள். ஜகதி-
உலகில், ஸர்வவிதய : - எல்லா ஸேவைகளும் பலன் தருகின்
றன. ததாபி - அப்படியிருந்தபோதிலும், யதாசர்மவத் இதி
ச்ருதோமந்த்ர : —

யதாசர்மவதாகாசம் வேஷ்டயிஷ்யந்தி மானவா : |
ததா சிவமவிக்ஞாய துக்கஸ்யாந்தோ பவிஷ்யதி ||

என்ற ச்வேதாச்வதர உபநிஷத்தில் கூறப்பட்ட மந்த்ர
மானது, த்வத் பக்தே - உன் பக்தன் விஷயத்தில், சிவ சிவ,
தேவாந்தர பஜனதைன்யம் - பிரம்மா விஷ்ணு முதலிய தெய்
வங்களை ஸேவிப்பதால் ஏற்படும் தீனபாவத்தை, ந ஸஹதே -
பொறுக்கவில்லை.

ஆகாயத்தைத் தோலைச் சுற்றிக்கட்டுவதுபோல், மனிதன் கட்டமுடிந்தால், சிவனையறியாமல் மற்றதேவ வழிப்பாட்டால், துக்கக்கடலைத் தாண்டி, இன்பநிலையை அடைவது, ஸாத்யமாகும், என்று தீர்மானமாகக் கூறப்பட்டிருப்பதால், மற்ற பயன்களை அடைந்தாலும், ப்ரம்மவிஷ்ணு பஜனத்தால் முக்தியடைய முடியாது. சிவபஜனம் ஒன்றுதான் அதற்கு உபாயம். அப்படியிருக்க, முக்தியை விரும்புகிறவன் மற்ற தெய்வங்களை பூஜிக்கவேண்டிய அவசியமில்லை.

## சுலோகம் 143

சசே ச்ருங்கம் புஷ்பம் நபஸி ம்ருகத்ருஷ்ணுஸூ
ஸலிலம்
ப்ரஸூதிர் வந்த்யாயாமனவதி மதாயுஸ் தநு
ப்ருதாம் |
விமுக்திர்வா தேவாந்தர பஜனலப்யா பசுபதே!
ந சக்யம் ந: ஸம்பாவயிதுமபி ஸர்வம் விம்ருசதாம் ||

### பதவுரை

சசே ச்ருங்கம் - முயல் கொம்பைப்போல, நபஸி புஷ்பம் - ஆகாயத்தில் புஷ்பம்போல், ம்ருகத்ருஷ்ணுஸூ ஸலிலம் - கானலில் ஜலத்தைப்போல் வுந்த்யாயாம் ப்ரஸூதிர்வா - மலடிக்கு மகனைப்போல, தநுப்ருதாம் - சரீரமெடுத்தவர்களுக்கு, அநவதிமதாயுர்வா - முடிவில்லாத, அளவற்ற ஆயுளையும் போல, பசுபதே - பாசபத்த பசுக்களை விடுவிப்பவரே, தேவாந்தர பஜனலப்யா - மற்றதேவதைகளை ஸேவித்து அடையக் கூடிய, விமுக்தி: - மோக்ஷமானது, ஸர்வம் விம்ருசதாம் - சுருதி, ஸ்ம்ருதி, புராணம், நியாயங்கள் எல்லாவற்றையும் யோசித்துப்பார்க்கும், ந: - எங்களுக்கு, ஸம்பாவியிதுமபி ந சக்யம் - ஸம்பாஞுஸ் பதமாகக்கூடக் காணப்படவில்லை.

## சுலோகம் 144

ந பின்ஞு நௌரன்யானலமுதநிதேருத்கமயிதும்
சிலா நைவேந்நேதும் ப்ரபவதி சிலாமந்தக ரிபோ |
ஜனித்வா ம்ருத்வா வா ஜகதி பரிவர்த்தீ ஸூரகண:
கதம் மே ஸம்ஸார ப்ரமண பய பாஜஸ்து சரணம் ||

## பதவுரை

பின்ன - பின்னமான உடைந்துபோன ஒட்டைவிழுந்த நௌ :- ஒருதோணியரனது, அன்யான் - மற்ற ஓர் உடைந்த கப்பலை, ஓட்டைவிழுந்த கப்பலை உ.தநிதே: - ஸமுத்ரத்திலிருந்து உத்சமயிதும் - அக்கரைசேர்ப்பதற்கு, நாலம் - சக்தியற்றது அந்தகரிபோ - யமனைக் காலால் உதைத்தழித்த கடவுளே. சிலா - கல், சிலாம் - கல்லை, உன்னேதும் - உயரத்தூக்க. நைவ ப்ரபவதி - சக்தியற்றதுதான், ஜகதி - உலகில், ஜனித்வா - பிறந்து, ம்ருத்வா வா - இறந்தும் பரிவர்த்தீ—சுற்றிக்கொண்டிருக்கும். ஸுரகண :- தேவக்கூட்டம், ஸம்ஸார ப்ரமண பய பாஜ :- உலகில் பிறந்து இறந்து, பிறந்து இறந்து - சுழன்று தவிக்கும் அவஸ்தையிலிருக்கிற மே - எனக்கு - எப்படி, சரணம் காக்கமுடியும், சரணமாக இருக்கமுடியும் முடியவே முடியாது. மார்க்கண்டேய மகரிஷி - யம பயம் நீங்க யாரைச் சரணமடைந்தார் ? யார் அனுக்ஹரகத்தால் சிரஞ்சீவியாக ஆனூர் ? காலனல்லவா யமபயத்தைப் போக்கமுடியும். மற்ற எந்த தெய்வமும் காலனுக்கு உட்பட்டதே.

## சுலோகம் 145

தேவதாந்தர புன : புனர்பவம்
பச்யத : பசுபதே ! பயம் மம |
க்ரீடதோபி தவ ஜன்ம மாஸ்மபூத்
தீயதாம் அயம் அப : சிமோ வர : ||

## பதவுரை

தேவதாந்தரபுன : புனர்பவம் - மற்றதெய்வங்கள் அடிக்கடி பிறப்பதை (பிறந்து இறப்பதை) பச்யத:-பார்க்கிற, மே -எனக்கு, பசுபதே - பசுக்களின் பாசத்தை நீக்கியருளும் பதியே, பயம் - பயம் உண்டாகிறது. தவ - உமக்கு, க்ரீடதோபி - விளையாட்டிற்காகக்கூட, லீலாமாத்ரமாகவும், கூட, ஜன்மமாஸ்மபூத்- பிறவி ஏற்படவேண்டாம். ( த்வயி - உம்மிடத்தில், க்ரீடதோபி- அலக்ஷ்யமாக, விளையாட்டாக. பக்தி செலுத்துகிறவனுக்குக் கூட) ஜன்மமாஸ்மபூத் - மறுபடி பிறவி ஏற்படவேண்டாம் அயம் : இந்த, அப : சிமோ வர : முதல் தரமான ஒரு வரத்தை மட்டும், தீயதாம் - எனக்குத் தங்களால் அனுக்ரஹிக்கப்பட வேண்டும்.

## சுலோகம் 146

வாஸனு பரிக்ருஹீத தேவதா
வர்ணனௌபயிக ஸர்வ வாங்மயம் |
திக்திக் ஈச்வர ! ஜடாசயம் ஜனம்
தாவகை ரஹமஸானி ஸங்கத : ||

### பதவுரை

வாஸனு - பழைய ஜென்மவாஸனையால், பரிக்ருஹீத - ஏற்றுக்கொள்ளப்பட்ட தேவதா - தைவத்தை, வர்ணன - வர்ணிப்பதில். ஔபயிக - உபயோகப்படுகின்ற, ஸர்வ வாங்மயம் - எல்லாவார்த்தைகளையுடைய, ஜடாசயம் ஜனம் - மூடபுத்தியுள்ள மனிதனை, ஈச்வர, திக்திக் - நிந்திக்கவேண்டும். நிந்திக்கவேண்டும் அஹம் நான், தாவகை :- உமது பக்தியில் ஈடுபட்ட ஜனங்களுடன், ஸங்கத :- சேர்ந்தவனாக, அஸானி- இருக்கவேண்டும்.

பிற தைவங்களை வழிபடும் மனிதர்களுடன் எனக்கு ஸ்னேகம், சேர்க்கை வேண்டாம்.

## சுலோகம் 147

பாம்ஸுகேளிரபி யஸ்ய சைசவே
சைவ பாசுபத பாதபாம்ஸுபி : |
ஸ்தோத்ரகர்மணி ந தஸ்ய மே குண :
தத்குணோயம் உபபத்யதே த்வயி ||

### பதவுரை

யஸ்ய - யாதொரு எனக்கு, சைசவே - இளம்பருவத்தில், பாம்ஸுகேளிரபி - மண்ணில் விளையாடுவதுகூட, சைவபாசுபத பாதபாம்ஸுபி :- சிவபக்தர்கள் , பசுபதி பக்தர்கள் பாத தூளிகளாலேயே, நேர்ந்ததோ, தஸ்ய மே - அப்பேர்ப்பட்ட எனக்கு ஸ்தோத்ரகர்மணி - உம்மைத்துதிக்கும் கார்யத்தில் ந. குணம் : - என்ன சக்தியிருக்கிறது. அயம் - இந்த தத்குண : துதிக்கும் சக்தி, த்வயி ஏவ. உபபத்யபதே - உம்மைச் சேர்ந்தது என்பதுதான் யுக்தமானதாகும்.

## சுலோகம் 148

ஸ்தோத்ரீயமர்த்தம் உபபாதிதவானஹம் தே
பக்தேதி பக்தஜனவத்ஸல! பாஷமாண: |
ஆவிர்பபூவித சிகீ ஸுசிஞம்பரேண
யக்ஞோபவிதமுபவீய த்ருத த்ரிபுண்ட்ர: ||

இந்த 147 சுலோகங்களடங்கிய சுருதி ஸூக்திமாலா ஸ்துதியைச் செய்தபலனைத் தன் அனுபவத்தை யொட்டி விளக்குகிறார்.

### பதவுரை

அஹம்-நான், தே-உம்முடைய, ஸ்தோத்ரீயம் - ஸ்துதிக்குத் தகுந்த, அர்த்தம் - சுருதி அர்த்தத்தை. உபபாதித வான் - வெளிப்படுத்தினேன். ஹே பக்தவத்ஸல - பக்தனிடத்தில் குழந்தையன்பு வைத்துக்காக்கும் கடவுளே, சிகீ - குடுமிவைத்தவரும், ஸுசிஞம்பரேண உபலக்ஷித - வெண்மையான ஆடை தரித்தவரும், யக்ஞோபவீதமுபவீய - வெண்ணிறமான பூணூலையணிந்தவரும், த்ருதத்ரிபுண்ட்ர :- த்ர்யக் த்ரிபுண்ட்ரமாக, வெண்பஸ்மத்தால் நெற்றியில் அடையாளம் இட்டுக்கொண்டவராயும், பக்த இதி பாஷமாண: - என் அன்புமிகுந்த பக்தனே, என்று என்னைக் கூப்பிட்டுக்கொண்டு, ஆவிர்பபூவித - என் முன்னே தோற்றமளித்து, அனுக்ரஹம் செய்தீர்களல்லவா?

## சுலோகம் 149

பக்தம் பவானதித பார்ச்வ சரோபநீதம்
மஹ்யம் மஹேச்வர! பய: ச்ரபிதம் ப்ரஸன்னம் |
புஞ்சான ஏவ ததஹம் ஜடிதி ப்ரபுத்த:
ஸ்வப்னஸ்ஸமாதிரிதி யுக்ததியாம் அபின்ன: ||

### பதவுரை

மஹேச்வரா, பார்ச்வ சரோப நீதம் - பக்கத்தில் வைத்த, கணத்தால் கொண்டுவரப்பட்ட, பய: ச்ரபிதம் - பாலில் வெந்த, பக்தம் - பாயஸான்னத்தை, பவான் - தாங்கள், மஹ்யம் என் பொருட்டு, அதித - கொடுத்தீர்கள். தத்ப்ரஸன்னம் - அந்த ப்ரஸாதத்தை, புஞ்சமான ஏவ - சாப்பிட்பிட்டுக்கொண்

டிருக்கும்பொழுதே, ஜடிதி - திடீரென்று, அஹம் - நான், ப்ரபுத்த :- விழித்துக்கொண்டுவிட்டேன். யுக்ததியாம் - யோகத்தில் செலுத்திய மனதையுடையவர்களுக்கு, ஸ்வப்ன : - ஸ்வப்னமும், ஸமாதிரிதி - ஸமாதி நிலையென்பதும் அபின்ன : - வேறுபடாதது, ஒன்றுதான், ஆதலால் ஸமாதியில் அடைந்தது எவ்விதம் பொய்யாகாதோ, உண்மையோ, அவ்விதம் ஸ்வப்னத்தில் கிடைத்ததும், அக்காரவடிசில் பாயஸம் சாப்பிட்டதும். உண்மையாகவே, யோகஸமயத்தில் எனக்கு நேர்ந்தது என்பது பொருள்.

## சுலோகம் 150

ஸ்தோத்ரம் ஏதத் அவதாய க்ருஹ்ணதாம்
அர்த்தமஸ்ய நிகிலேன ஜானதாம் |
க்ராஹ்யமன்யதபி நாவ சிஷ்யதே
ஞேயமன்யதபி வா ந கிஞ்சன ||

### பதவுரை

அவதாய - மனதைக் கடவுளிடத்தில் செலுத்தி, ஏதத் ஸ்தோத்ரம் - இந்த சுருதி ஸூக்தி மாலை என்றும் ஸ்தோத்ரத்தை, க்ருஹ்ணதாம் - படிப்பவர்களுக்கும் அஸ்யார்த்தம் - இதன் அர்த்தத்தை, நிகிலேன - பூராவும், ஜானதாம் - அறிகிறவர்களுக்கும், அன்யத் க்ராஹ்யம் அபி - வேறு கிரஹித்துக் கொள்ளவேண்டிய விஷயம், நாவசிஷ்யதே - மிகுதியாக இருக்கவில்லை. ஞேயம் = அறியவேண்டிய. அன்யத் கிஞ்சன அபிவா - வேறு ஏதாவது ஒன்றும், ந - இல்லை. எல்லாம் இந்த துதியில் இதன் அர்த்தமாகப் பரமசிவனிடம் அடங்கியிருப்பதால், வேறு தெரிந்துகொள்ளவேண்டியது ஒன்றுமில்லையென்பது.

ஏகவிஞ்ஞானேன ஸர்வவிஞ்ஞானப்ரதிக்ஞாரூபமாக சுருதியில் சொல்லப்பட்டதுபோல், இங்கும் சொல்லப்பட்டது.

## சுலோகம் 151

பஞ்சா சதுத்தரசதா - சுருதி ஸூக்திமாலா
போகாவளீ புஜகராஜ மனோஹரா தே |
வேதேஷு பக்தி மபராகம வைதிகேஷு
தந்த்ரேஷு பக்தி மதுலாம் த்வயி ச ப்ரஸூதே ||

## பதவுரை.

புஜகராஜ மனோஹரா - நாகராஜனை ஆபரணமாகப் பூண்டு, அவன் மனதிற்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் பரமேச்வரா, தே - உம்முடையதான போகாவளீ - கீர்த்திபரம் பரம்பரையான, பஞ்சா சதுத்தரசதா - 150 சுலோகங்களடங்கிய சுருதிஸூக்திமாலா - வேதங்களாகிற. கல்ப விருக்ஷத்திலிருந்து எடுத்த நல்ல வசனங்களாகிற தொகுக்கப்பட்ட பாமாலையானது, வேதேஷு - வேதங்களில், பக்தியும் - பக்தியையும், அவைதிகேஷு தந்த்ரேஷு அபராகம்-வேத விருத்தமான முறைகளில் வெறுப்பையும். த்வயி - உம்மிடத்தில் (பரமசிவனிடத்தில்) அதுலாம் பக்திம் ச - ஒப்பற்ற பக்தி விசேஷத்தையும், ப்ரஸூதே - உண்டுபண்ணுகிறது.

பொய்வசனங்களை உண்மையாக்க முயல்பவர்களுக்கு இது இடியும் புயலுமாகும்.

*சிவலிங்கபூபதியால் செய்யப்பட்ட, தத்வப்ரகாசிகை என்ற வ்யாக்யானத்தின் இந்தத் தமிழ் விரிவுரை, பரமேச்வரன் திருவடிகளில் ஸமர்ப்பிக்கப் படுகிறது.*



உமாஸஹாயம் வந்தேஹம்
ஓங்கார வேத்யம் வ்ருஷவாஹம்

நம: பார்வதி பதயே — ஹர ஹர மகாதேவ

சைவஸ்தாபக ஸ்ரீ ஹரதத்த ஆசார்ய வர்யாய—நமோ நம:

கை. பாலஸூப்ரமணய சாஸ்திரிகள்.

## மங்கள சுலோகம் - 2 பாகம் - பக்கம் 2
## ஸ்ரீபாலஸுப்ரமண்ய சாஸ்திரிகள் எழுதிய

### பதவுரை

கல்ப்பாந்தே - கல்ப்பத்தின் முடிவில், சமித - அடக்கி உயிரில்லாமல் செய்யப்பட்ட, த்ரிவிக்ரம - த்ரிவிக்ரம் அவதாரம் எடுத்த விஷ்ணுவின், மகாகங்காள-பெரிய எலும்பான தூண்டிலில், பத்த - கட்டப்பட்ட, ஸ்புரத் - ப்ரகாசமாகத் தொங்கவிடப்பட்ட, சேஷ - ஆதிசேஷன் என்ற பாம்பாகிய கயிற்றில், ஸ்யூத - கோக்கப்பட்ட ந்ருஸிம்ம மூர்த்தியினுடைய, பாணி - கையின், நகர - நகங்களாகிய முட்களில் ப்ரோத - குத்திவைக்கப்பட்ட, ஆதிகோல - விஷ்ணுவின் அவதாரமான ஆதிவராஹத்தின் அமிஷ : - மாம்சத்தை நக்கொண்டு, விச்வைகார்ணவ - உலகம் முழுவதும் ஸமுத்ரமாகவிருக்கும் அந்த ஸமயம் அகண்ட ஸாகரத்தில், ய : - எவர் ஸம்விஹார - நன்கு விளையாடிக்கொண்டு, முதிதௌ - பேரானந்தம் கொண்டவராய் மத்ஸ்யகூர்மாவுபௌ - மீன் - (விஷ்ணுவின் மத்ஸ்யாவதாரம்,) கூர்ம (கூர்மாவதாரம்) இரண்டையும் கர்ஷந் - தூண்டிலில் இழுத்துக் கொண்டு, தீவரதாம் கத : - மீன், ஆமை பிடிக்கும் செம்படவனுக இருக்கும் தன்மையை அடைந்தாரோ, அப்பேர்ப்பட்ட ஸர்வேச்வரனுன, மஹாபைரவ : - மகாபைரவர், ஸதாம் - ஸாதுக்களுக்கு, மோஹம் - மாயை என்ற அஞ்ஞானத்தை, அஸ்யது - நிச்சேஷமாக, முற்றிலும் - அழிக்கட்டும்.

### விளக்கம் ( தி. வி. அ. )

ஒவ்வொரு கல்பத்தின் முடிவிலும் பரமேச்வரன் விஷ்ணு ப்ரம்மாதிகளையும், ஸகல ஜீவராசிகளையும் ஒடுக்குகிருர் என்பது வேதோக்தம். இந்த சுலோகத்தில் ஒருமிக அழகான கற்பனை யமைந்திருக்கிறது. விஷ்ணுவின் அவதாரங்களில் பத்து மிக ப்ரஸித்தம். முதல் ஐந்து அவதாரங்களில் அவதரித்த கார்யம் முடிந்த பிறகு விஷ்ணுவானவர் தன் நிலை மறந்து கர்வம்கொண்டு, உலகத்தைப் பீடிக்கிருர். (ஜனார்த்தனன் என்ற பதத்திற்கு உலகத்தைப் பீடிக்கிறவன் என்றும் அர்த்தம் உண்டு). அதனுல் ஈச்வரன் அந்த அந்த அவதாரங்களைப் பிரத்யேகமாகத் தண்டித்து ஒடுக்குகிருர்

(1) மகாவிஷ்ணு மத்ஸ்யாவதாரமெடுத்து வேதங்களை மீட்டுவந்தார்; பிறகு தன் நிலைமறந்து ஸமுத்ரத்தில் அட்ட

காஸம் பண்ணினார். ஈச்வரன் மீனுடைய கண்களைப் பிடுங்கி ஒடுக்கினார்.

(2) அமிர்தமதன காலத்தில் கூர்மாவதாரமெடுத்து மத்தாக உபயோகிக்கப்பட்ட மந்தரமலையைத் தாங்கினார், பிறகு தன் நிலைமறந்து நீரிலும், பூமியிலும் அட்டகாஸம் செய்தார். ஆமைக்கு முதுகு ஓட்டில் பலம். ஈச்வரன் ஆமையின் ஓட்டைப் பிடுங்கி ஒடுக்கினார். ஓட்டை ஆபரணமாகவும் பூண்டார்.

(3) வராக அவதாரம் எடுத்து, பூமியை மறைத்து வைத்த ஹிரண்யாக்ஷனைக்கொன்று பூமியை மீட்டுவந்தார் (மூக்கில் உள்ள கொம்பால் தாங்கிவந்தார்.) பிறகு பூமியில் அட்டஹாஸம் செய்தபோது, ஈச்வரன் மிக்கபலம் கொண்ட அந்தக் கொம்பைப் பிடுங்கி அதையும் ஆபரணமாகக் கொண்டார்.

(4) ந்ருஸிம்ம அவதாரம் எடுத்து, ஹிரண்ய கசிபுவின் ரத்தத்தைக் குடித்த வெறியால், தேவர்களையும் மனிதர்களையும் பீடிக்கத் தொடங்கினபோது, ஈச்வரன் சரபாவதாரம் எடுத்து ந்ருஸிம்மத்தைக் கிழித்து தோலைத் தாமே போர்த்திக் கொண்டார்.

(5) த்ரிவிக்ர அவதாரமெடுத்து, உலகில் அட்டஹாஸம் செய்தபோது, ஈச்வரன் பலம் கொண்ட முதுகு எலும்பைப் (கங்காளம்) பிடுங்கி அதையும் ஆபரணமாகக் கொண்டார்,

பரமேச்வரனுடைய 64 மூர்த்தங்களில்

| | | | |
|---|---|---|---|
| (1) | மத்ஸ்ய ஸம்ஹார மூர்த்தி | - 60 வது | மூர்த்தம் |
| (2) | கூர்ம ஸம்ஹார மூர்த்தி | - 59 வது | ,, |
| (3) | வாரஹ ஸம்ஹார மூர்த்தி | - 61 வது | ,, |
| (4) | ஸிம்மக்ன மூர்த்தி | - 30 வது | ,, |
| (5) | கங்காள மூர்த்தி | - 27 வது | ,, |

இந்த மூர்த்தங்களின் முழுவிவரங்களையும் சிவபராக்ரமம் என்ற புத்தகத்தில் படித்துத் தெரிந்துகொள்ளவும்.

## ஆதாரம்

இந்த ஸம்ஹாரங்களுக்கு ஆதாரம் சரபோப நிஷத் வாக்யம் (தேவாரம் வேதஸாரம் - பக்கம் 177)

யோ மத்ஸ்யகூர்மவராஹ ஸிம்ஹான் விஷ்ணும் க்ரமந்தம் வாமனம் ஆதி தேவ : | விவிக்லவம் பீட்யமானம் ஜகாந பஸ்மீ சகார மன்மதம் யமம் ச | தஸ்மை ருத்ராய நமோஸ்து ||

## இதன் பொருள்

எந்த ஆதிதேவரான (முழுமுதற்கடவுளான) பரமேச்வரர், உலகத்தினரைத் துன்புறுத்தி அதிக்ரமித்து நின்ற விஷ்ணுவின், மத்ஸ்ய, கூர்ம, வராஹ, ந்ருஸிம்ஹ, (வாமன) த்ரிவிக்ரம அவதாரங்களையும் யமனையும் வதைத்து. மன்மதனையும் சாம்பராக்கினாரோ, அந்தப் பரமேச்வரருக்கு நமஸ்காரம்.

ஆகவே இந்த சுலோகத்தில் பரமேச்வரன் விஷ்ணுவின் ஐந்து அவதாரங்களை ஸம்ஹாரம் செய்து ஒடுக்கினர் என்பது தான் முக்கிய விஷயம்.

ஒரு மகா (ஜல) ப்ரளயத்தில், மகாபைரவர் செம்படவனாக - மீன்பிடித்து விளையாடுவதாக இந்த சுலோகத்தால் போற்றப்படுகிருர்.

அவர்கையில் மீன்பிடிக்கும் தூண்டில், த்ரிவிக்ரமத்தின் முதுகெலும்பு, அதில் கட்டப்பட்டகயிறு - ஆதிசேஷன், கயிற்றின் முடிவில் முள்களாக, ந்ருஸிம்ஹத்தின் நகங்கள்; முட்களில் சொருகின மாம்சமாக வராஹத்தின் மாம்சம் : பிடிப்பது - மீன், கூர்மம் ஆக இரண்டு ஜல ஜந்துக்கள்.

## விசேஷ தாத்பர்யங்கள்

சுருதி ஸூக்திமாலை என்ற இந்த சிவபரத்வக்ரந்தத்துக்கு மங்கள சுலோகமாக இந்த சுலோகத்தை எடுத்துக்கொண்டது - மிகவும் பொருத்தம். சரித்திரச் சுருக்கத்தில் சொன்ன பிரகாரம், ஸ்ரீஹரதத்தர், மகா விஷ்ணுபரம் என்று சொன்ன தம் பிதா, அவர் சிஷ்யர்களுடன் (வைஷ்ணவர்களுடன்) வாதம் செய்து, விஷ்ணு பரதெய்வமல்ல. பரமேச்வரனே பரதெய்வமென்று ஸ்தாபிக்கிருர். மகாவிஷ்ணு அவர் அவதாரங்களில் ஒடுக்கப்பட்ட இந்த விஷயங்களையும் கல்பங்கள்தோறும் விஷ்ணுவும் (மற்றுபிரம்மாதிகளும்) பரமேச்வரனால் ஒடுக்கப்படுகிருர் என்ற விஷயங்களையும் ஆரம்பிக்கும்போதே, இந்த மங்கள சுலோகத்தில் குறித்து ஈச்வரனை வணங்குவது,

விஷ்ணு பரதெய்வமல்ல; அவரை யொடுக்கும் பரமேச்வரன் தான் பர தெய்வம் என்று ஸ்தாபித்தவாறு ஆயிற்று. இவ்வாறு விஷ்ணு ப்ரம்மாதிகள் கல்ப்பங்கள் தோறும் ஒடுக்கப் படுகிறார்கள் என்பதற்குப் பின்னும் சில குறிப்புகள் :—

திருஞானஸம்பந்தர் 1—2 முற்றலாமை யிளநாகமோடேன முளைக் கொம்பவை பூண்டு

கோளறு பதிகம் 2. என்பொடு கொம்பொடாமையிவை மார்பிலங்க.

மாணிக்கவாசகர் திருச்சாழல் :

நங்காய் ஈதென்ன தவம் நரம்போடெலும் பணிந்து
கங்காளம் தோள்மேல் காதலித்தான் காணேடி.
கங்காளம் ஆமாகேள் காலாந்தரத்திருவர்
தம் காலம் செல்லத் தரித்தனன் காண் சாழலோ.
(இருவர் - ப்ரமம் விஷ்ணுக்கள்)

ஸ்ரீமத் அப்பைய்ய தீக்ஷிதர் - பிரம்ம தர்க்கஸ்தவம் (40)

கல்ப்பாந்தர த்ருஹிண கோடி கரோடிமாலா
பஸ்மாங்க ராக கமடாங்க வராஹ ச்ருங்கை : |
ஆகல்ப்ப ஏவ தவமங்கள விக்ரஹஸ்ய
ஸர்வோத்தரம் தவ பலம் கிமு ந வ்யனக்தி ||

## இதன் பொருள்

கல்ப்பாந்தத்தில் முடிகின்ற கோடிக்கணக்கான ப்ரம்மாக்களின் கபாலங்களும், பஸ்மாவும், கூர்மத்தின் அங்கமும் (ஓடும்) வராஹத்தின் கொம்புகளும் மங்கள விக்ரஹமான உமக்கு ஆபரணங்கள். இந்த விஷயமே உமது ஸர்வோத்க்ருஷ்டமான பலத்தை விளக்கவில்லையா ?

## மங்கள சுலோகத்தில் பின்னும் சில அர்த்த விசேஷங்கள்

மோஹம்—மாயை என்ற அக்ஞானத்தை, அஸ்யது—நிச்சேஷமாக, முற்றிலும் அழிக்கட்டும் உண்மை. அஞ்ஞானத்தையும் அவஞானத்தையும போக்கி, மெய்ஞ்ஞானமாகிய சிவஞானத்தை யருள் செய்து, நித்யமான ஆனந்த வெள்ளத்தில் திளைக்கும்படி அனுக்ரஹிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கப் படுகிறது.

மோஹம்—மாயை - அஞ்ஞானம். பரமேச்வரர்தான்.

மாயையை அடக்கியாள்பவர் :- மாயாம் து ப்ரக்ருதிம் வித்யான், மாயினம் து மஹேச்வரம்—(ச்வேதாச்வதர - உபநிஷத்) அவருடைய மாயை விஷ்ணுப்ரம்மாதிகளையும் மயக்கிவிடும்.

வேதங்களை வகுத்தவரும், பத்து சைவ புராணங்களையெழுதியவருமான வ்யாஸரே, பரமேச்வரன் அடக்கியாளும் மாயையின் வசப்பட்டு, ஒரு ஸமயம் காசிவிச்வேசர் ஸந்நிதியில் தன்னிரு கைகளையும் உயரத்தூக்கி, கோவிந்தனைக்காட்டிலும் உயர்ந்த தெய்வம் வேறில்லை என்று சொல்ல வாயெடுத்த போது, நந்திகேசருடைய ஹூங்காரத்தால் வ்யாஸருடைய கைகளும் நாக்கும் ஸ்தம்பித்துப்போயின. இந்த வரலாறு கந்தபுராணத்தில் இருக்கிறது.

நந்திகேசர் துதி

ஐயிறு புராண நூல் அமலர்க் கோதியும்
செய்ய பன் மறைகளும் தெரிந்தும், மாயையால்
மெய்யறு சூள் புகல் வ்யாதன் நீட்டிய
கையடு நந்திதன் கழல்கள் போற்றுவாம்.

ஸ்ரீ ஆதிசங்கரபகவத் பாதாளும் இந்த விஷயத்தை ஒரு சுலோகத்தில் அமைத்துப் பாடியிருக்கிறார்கள் (தசச்லோகி—காமகோடி கோசாஸ்தானம் வெளியீடு சுலோகம் 4) இதே சுலோகம் ஹரதத்தர் பாடியதாக—பவிஷ்யோத்தர புராணத்தில் சொல்லியிருப்பதால், (முதல் பாகம்) இங்கே மறுபடி எழுதவில்லை.

வேதவ்யாஸரே—மயங்கினரென்றால், இந்தக் காலத்தில் ஸாமான்ய ஜனங்கள் விஷ்ணுவிற்குப் பரத்வம் கொடுப்பதும், விஷ்ணுவும் பரமேச்வரனும் ஒன்று என்று சொல்வதும் ஆச்சர்யமில்லை !

ஆகவே இந்த மாயையை, அஞ்ஞானத்தை, மயக்கத்தைப் பரமேச்வரன்தான் தீர்த்தருளவேண்டும்.

ஆதி ஸ்ரீசங்கர பகவத்பாதாள் சிவானந்தலஹரியில் (8-வது சுலோகம்) சொல்வதையும் கவனிக்க.

யதா புத்தி சுக்தௌ ரஜதமிதி காசாச்மணி மணி :
ஜலே பைஷ்டே க்ஷீரம் பவதி ம்ருகத்ருஷ்ணாஸு ஸலிலம் |
ததா தேவப்ராந்த்யா பஜதி பவதன்யம் ஜட ஜன :
மகாதேவ ! ஈசம் த்வாம் மனஸி ச ந மத்வா பசுபதே ||

ஜனங்கள் கிளிஞ்சலை வெள்ளி யென்று நினைத்தும் கண்ணாடி உடைசல்களை—ரத்னங்கள் என்றும் மாவுகரைத்த நீரைப் பால் என்றும் கானலில் நீர் என்றும் மயங்குகிறார்கள் எல்லாம் மாயை—அது ப்ரமை அஞ்ஞானம். அதுபோல்தான், ஹே மகாதேவ, பசுபதியே, நீர்தாம் முழுமுதற் கடவுள், பரதெய்வமென்று அறியாமல், மூட ஜனங்கள் உமக்கு அன்ய மான விஷ்ணு, ப்ரம்மா முதலியவர்களை, ஈச்வரனென்று மயங்கி வழிபடுகிறார்கள்.'' என்று ஆதி சங்கரர் மூட ஜனங்களில் மயக்கத்தைக் கண்டு, ஏங்குகிறார்.

ஆதலால், இந்த முதல் மங்கள சுலோகத்தில் விஷ்ணு பரமேச்வரனால் ஒடுக்கப்பட்ட விவரங்களைக் குறிப்பிட்டு, விஷ்ணுபர தெய்வம் என்றும் பரமேச்வரனும் விஷ்ணுவும் ஒன்று என்றும் மயங்கும் மூடஜனங்களின் அஞ்ஞானத்தை-மகாபைர வர் தாம் தீர்த்து வைக்க வேண்டுமென்று வேண்டப்படுகிறது.

திருஞானஸம்பந்தர் தம் மூன்றாம் வயதில் பரமேச்வரியால் ஞானப்பால் அருளப் பெற்று சிவஞானத்தையும், ஸர்வக்ஞத் வத்தையும் அடைந்தார்.

## சேக்கிழார்

*சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்*
*பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்*
*உவமையிலா கலை ஞானம் உணர்வரிய மெய்ஞானம்*
*தவமுதல்வர் ஸம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்*

ஸ்ரீ ஹரதத்தரும் தம் ஐந்தாம் வயதில் ஸாக்ஷாத் தக்ஷிண மூர்த்தியால் ஸர்வக்ஞத்வம அனுக்ரஹிக்கப் பெற்று, மெய்ஞான மாகிய சிவஞானத்தை யடைந்தார்

ஆக, இந்த மங்கள சுலோகத்தில் பரமேச்வரனுடைய வேறு பல குண விசேஷங்களையும் அனுக்ரஹ லீலைகளையும், வீரச் செயல்களையும் பற்றி சொல்லாமல்,

விஷ்ணுவை ஒடுக்கின வரலாறுகளைச் சொல்வதால், விஷ்ணு பரதெய்வமல்ல வென்றும் அவரை ஒடுக்கின பரமேச் வரனே பரதெய்வமென்றும் ஸ்தாபித்தவாறு ஆயிற்று, அஞ் ஞானத்தைப் போக்கியருள வேண்டுமென்று பிரார்த்திப்பதால், விஷ்ணுபரம் என்ற அஞ்ஞானத்தைத் தீர்த்து, சிவஞானம் அளிப்பவர் அந்தப் பரமேச்வரன் தான் என்பது தெளிவாயிற்று.

சுபம்

உ

|| ஓம் நம: சிவாய ||

|| ஓம் நமோ பகவதே ஹரதத்தாய ||

## ஸ்ரீ ஹரதத்தர் பூஜாகல்பம்

புண்யகோடி ஸோமஸுந்தரக் குருக்கள்
அவர்கள் இயற்றியது. (நாகர எழுத்து)

ஒவ்வொரு வருஷமும் தை மீ சுக்லபஞ்சமியன்று (விநாயக சதுர்த்தி பூஜைபோல்) ஸ்ரீ ஹரதத்தர் பூஜை செய்வது சிவ பக்தர்களின் கடமையாகும்.

விலை 40 காசு (தபால் செலவு உள்பட)



ஆதி சங்கர பகவத் பாதாள் அருளிய சிவானந்த லஹரியைத் தழுவி

# சிவ பக்தி

எழுதியவர் :

## திருவையாறு அண்ணாஸ்வாமி சிரௌதிகள்

(1) அங்கோலம் (2) மா கச்ச (3) ஸஹஸ்ரம் வர்த்தந்தே
(4) ஹம்ஸ: பத்மவனம் (5) ஜனன ம்ருதி யுதானாம்
(6) யதா புத்தி: சுக்தௌ (7) மனஸ்தே பாதாப்ஜே
(8) ஸாரஸ்ய (9) ஸாரூப்யம் (10) பாணத்வம்
(11) மார்க்கா வர்த்தித (12) நரத்வம் தேவத்வம்

12 ச்லோகங்களுக்கு வியாக்யானமும், அவைகளில் அமைந்துள்ள சைவ ஸித்தாந்தக் கருத்துக்களின் விளக்கமும் கொண்டது. வெறும் பதவுரையாக இல்லாமல் விசேஷ தாத்பர்யங்களுடன் கூடியது. வேத தேவார ஆதாரங்களும் சில இடங்களில் காட்டப்பட்டிருக்கின்றன. ஆசார்ய பக்தர்களும் சிவ பக்தர்களும் அவசியம் படித்துணர்ந்து சிவ பக்தியில் ஈடுபட்டு ஜன்ம ஸாபல்யமடைய வேண்டும்.

ஸம்ஸ்க்ருதம் பழக்கமில்லாதவர்களும் தமிழ் விரிவுரையைப் படித்தே விஷயங்களை நன்றாக அறிந்து அனுபவிக்கலாம்.

6 படங்கள் கொண்டது - விலை ரூ 2. 5 புத்தகங்களுக்கு ரூ. 10 அனுப்பினால் - ரிஜிஸ்டர்டு தபாலில் அனுப்பப்படும்.

### தி. வி. அண்ணாஸ்வாமி சிரௌதி

பணியாளர், ஸ்ரீ ஹரதத்தர் பக்தஜன ஸபை சென்னை-17.